வெளியீடு எண் 117.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ அருணந்திதேவநாயனார்

அருளிச்செய்த

# சிவஞானசித்தியார் சுபக்கம்

- பிற் பகுதி -
7—12 சூத்திரங்கள்

உரையாசிரியர் :

1. ஸ்ரீ மறைஞானசம்பந்ததேசிகர்,
2. ஸ்ரீ நிரம்பவழகியதேசிகர்.

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சிவஞானசித்தியார் சுபக்கம்

## 7—12 சூத்திரங்கள்

உரைகளுடன்

திருக்கயிலாயபரம்பரைத்

இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி

வெளியிடப்பெற்றது.

திருவாவடுதுறைஆதீனம்

1958.

# இப்புத்தகத்தில் அடங்கியவை



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

# இரண்டாம் பகுதியின் முகவுரை

திருச்சிற்றம்பலம்

'கல்லா னிழல்மேய கறைசேர் கண்டாவென்
றெல்லா மொழியாலும் இமையோர் தொழுதேத்த
வில்லா லரண்மூன்றும் வெந்து விழவெய்த
நல்லா னமையாள்வான் நல்லம் நகரானே.'

சிவஞானசித்தியார் என்னும் இந்த ஞானசாத்திரத்தை அருளிச்செய்த ஞானாசாரியர் ஸ்ரீ அருணந்தி தேவநாயனார் என்பது உலகப்பிரசித்தம். இவ்வாசிரியர் சிவஞானசித்தியாரைப் பரபக்கம் சுபக்கம் என இருபெரும் பிரிவுகளாகவே அருளிச்செய்தனர். பரபக்கச் செய்யுட்கள் 301; சுபக்கச் செய்யுட்கள் 328. சுபக்கச் செய்யுட்களுக்கு உரைவரைந்தருளியவர்கள் பலர். அவர்களுள் ஸ்ரீ மறைஞானசம்பந்ததேசிகர், ஸ்ரீ சிவாக்கிர யோகிதேசிகர், ஸ்ரீ ஞானப்பிரகாசத் தம்பிரான், ஸ்ரீ நிரம்பவழகியதேசிகர், ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள், ஸ்ரீ சுப்பிரமணியதேசிகமூர்த்திகள் என்னும் இந்த ஆறு ஆசிரியர்களும் செய்தருளிய உரையே மிகச் சிறப்பாக அறுவருரை என யாவராலும் வழங்கப்பெறுகிறது.

இவ்வறுவருரையுள் இவ்வாதீனத்துத் திராவிட மாபாடிய கர்த்தராகிய ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் அருளிச்செய்த பொழிப்புரையும், 16-வது குருமகா சந்நிதானமாகிய மேலகரம் - ஸ்ரீ சுப்பிரமணியதேசிக மூர்த்திகள் மேற்கண்ட பொழிப்புரையைத் தழுவி எழுதிய பதவுரையுமே இவ்வாதீனத்தில் முறையாகத் தீட்சை முதலியன பெற்ற பெரியோர்களால் பயிலப்பட்டு வருவனவாம்.

ஸ்ரீ பஞ்சாக்கரதேசிக பரமாசாரிய சுவாமிகளுக்குப் பின் இருபத்தொராவது குருமகா சந்நிதானமாகத் திருவருளால் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள்** விகிர்தி - பங்குனி - 30 ஆம் நாள் (12—4—51) ஞானபீடத்தெழுந்தருளி ஞானச்செங்கோலோச்சத் தொடங்கினார்கள். தொடங்கின நாள் முதலாகவே, ஞான சாத்திரங்களில் மெய்கண்டசாத்திரம் முழுவதும் இவ்வாதீனத்து உரைகளுடன் செவ்வே ஆராயப்பட்டு அச்சிட்டு ஞானதாகமுடையோர் பலருக்கும் இலவசமாக வழங்கியருளப்படுவதை அறிவுடைய உலகம் நன்கறியும். இம்மட்டோ! ஆண்டுகள் தோறும் சித்தாந்தசைவ மாநாடுகளும், திருமந்திர மாநாடுகளும் கூட்டிப் புத்தகவெளியீட்டுமுகமாகவும், விரிவுரைகள்முகமாகவும் சிவஞான அமுதத்தை வாரி வாரி வழங்குங்கருணையையும் யாவரும் நன்கு அறிவர். இவைகளால் சென்ற ஆறு ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழுலகம் நன்கு விழிப்படைந்து சைவசமயத்தைப் பெரிதும் போற்றிவருவதை அறியாதார் எவரோ?

இங்ஙனமாக, சிவஞானபோதச் சிற்றுரை மகரத் தலைநாட் குருபூசை மலராக 1951-ல் 77-வது வெளியீடாக அச்சிட்டு வழங்கப்பெற்றது. சிவஞான

சித்தியார் சுபக்கத்துக்கு ஸ்ரீ மாதவச் சிவஞானயோகி கள் பொழிப்புரையும் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் பத வுரையும் சேர்ந்து, 88-வது வெளியீடாக 1954-ல் திருவெண்ணெய்நல்லூரிலே மூன்றாவது மாநாட்டு மலராக 718 பக்கங்களில் சிறந்த முகவுரையுடன் வெளி வந்தது. 1955-ல் 91-வது வெளியீடாக 628 பக்கங் களில் சிவஞானசித்தியார் பரபக்கம், உரை வசனப் பகுதி முகவுரை முதலியவற்றுடன் வெளிவந்தது.

1957-ல் நடைபெற்ற மகரத்தலைநாட் குருபூசை யில் சிவஞானசித்தியார், முதல் ஆறு சூத்திரங்கள் முழுவ ஸ்ரீ மறைஞானசம்பந்ததேசிகர் ஸ்ரீ நிரம்ப வழகியதேசிகர் ஆகிய இவ்விரு ஆசிரியர்கள் அருளிய உரைகளுடன் முதற்பகுதியாக, சுமார் 842 பக்கங் களில் 106-வது. வெளியீடாகச் சிறந்த முறையில் அச்சிட்டு வழங்கப்பெற்றது.

1958-மகரத்தலைநாட் குருபூசைவிழா நாளாகிய இன்று அதன் பிற்பகுதியாகிய ஆறு சூத்திரங்களை, ஸ்ரீ மறைஞானசம்பந்ததேசிகர் ஸ்ரீ நிரம்பவழகிய தேசிகர் உரைகளுடன் வெளிவருகின்றன. எனவே, அறுவருரை எனக் குறித்தவைகளில் உரையாசிரியர் நால்வருரைகளும் நன்கு வெளிவந்தன. சைவத் தமி ழுலகுக்குப் பெரிதும் அவை பயன் தருமென்பது வெளிப்படை. ஏனைய இருவர்உரைகளில் ஸ்ரீ சிவாக்கிர யோகிதேசிகர் உரை தனிப்புத்தகமாகவும், ஸ்ரீ ஞானப் பிரகாசத்தம்பிரான் உரையும் ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள் சிவசமவாத மறுப்புரையும் சேர்ந்து ஒரு தனிப் புத்தகமாகவும் இதனை அடுத்து வெளிவர இருக்கின்றன.

சிவஞானசித்தியார் பரபக்கவெளியீட்டில் எழுதி யுள்ள வசனச் சேர்க்கையைப் பெரிதும் மதித்துச் சைவவுலகம் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்துக்கு விண்ணப்பம் செய்ததைத் திருவுளத்தடைத்துச் சுபக்கத் துக்கும் ஒருவசனம் எழுதி அச்சிட உத்தரவிட்டதைச் சிரமேற்கொண்டு சுபக்க வசனமும், சிவப்பிரகாச வசனமும் என்னால் எழுதப்பட்டுள்ளன. அவைகளும் அச்சிடும்நிலையில் உள்ளன; அடுத்து ஒன்றன்பின் ஒன்ருக வருவனவாம்.

முதற்பகுதியின் முகவுரையிலே நூலாசிரியர் வரலாறும், உரையாசிரியர்களாகிய ஸ்ரீ மறைஞான சம்பந்ததேசிகர் ஸ்ரீ நிரம்பவழகியதேசிகர் வரலாறுகளும் சேர்க்கப்பட்டமையின் மறுபடியும் இப்பகுதியிலே அவை சேர்க்கப்பட்டில. முதல் ஆறு சூத்திரங்களில் அவ்விரு ஆசிரியர்களால் எடுத்தாளப்பட்ட நூல்களின் பட்டியலும் அம்முதற்பகுதியில் சேர்ந்திருக்கின்றமையின் இவ்விரண்டாம் பகுதியாகிய பிறபகுதியில் 7 முதல் 12-வது சூத்திரம்முடிய ஆறு சூத்திரங்களைப்பற்றிய விவரங்களே தரப்பட்டுள்ளன.

ஸ்ரீ மறைஞான சம்பந்த தேசிகர், சாதன இயல் - முதற்சூத்திரமாகிய ஏழாஞ்சூத்திரம் ஆன்மதரிசன இலக்கணமும், இரண்டாம் சூத்திரமாகிய எட்டாம் சூத்திரம் ஞான அஞ்ஞான இலக்கணமும், மூன்ரும் சூத்திரமாகிய ஒன்பதாம் சூத்திரம் ஆன்மசுத்தி இலக்கணமும் உணர்த்தியது என்பர்.

பயனியலின் - முதற்சூத்திரமாகிய பத்தாஞ் சூத்திரம் மலமோசன இலக்கணமும், இரண்டாம் சூத்திரமாகிய பதினொராஞ்சூத்திரம் பத்தியின்

இலக்கணமும், மூன்றும் சூத்திரமாகிய பன்னிரண்டாம் சூத்திரம் அடியவர் இலக்கணமும் உணர்த்துகின்றது என்றும் கூறுவர்.

ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள், சாதனவியலில் ஏழாஞ்சூத்திரத் தொடக்கத்திலே "நாலாஞ்சூத்திரம் முதலிய மூன்றும் பொருளியல்பு கூறிய ஆசிரியர் நிறுத்த முறையானே, வேண்டுஞ்செய்தி முறைமை எனப்படும் சாதனங்களதியல்பு மூன்றுசூத்திரத்தாற் கூறுவான் தொடங்கினார். அவற்றுள் மேற்கூறிப் போந்த முப்பொருள்களைச் சாதித்துப் பெறுதற்கு உரிய அதிகாரமுடையது இது என்பது பாரிசேட வளவையின் வைத்துணர்த்துதற்கு எழுந்தது ஏழாம் சூத்திரம்" எனவும்,

எட்டாஞ்சூத்திரத் தொடக்கத்திலே "மேலைச் சூத்திரத்தால் சாதித்துப் பெறும் உரிமை தனக்கே யுண்டென்பது உணர்ந்தவுயிர்க்கு அப்பேறு தனக்கு வேண்டற்பாலது என்பதூஉம், அதுவருவாயும் உணர்ந்தவழிச் சாதனம் செய்தற்கு மனவெழுச்சி செல்லாமையின், மனவெழுச்சி சேறற்பொருட்டு அவ்வாற்றை உணர்த்துதற்கு எழுந்தது எட்டாஞ் சூத்திரம்" எனவும்,

ஒன்பதாஞ்சூத்திரத் தொடக்கத்திலே "மேலைச் சூத்திரத்தால் பேறு முதலியவற்றை உணர்ந்தார்க்கு அப்பேறு பயப்பதாகிய சாதனஞ்செய்யுமாறு வகுத்துக் கூறுதற்கெழுந்தது ஒன்பதாம் சூத்திரம்" எனவும் அருளிச்செய்தனர்.

இனி, பயனியலில் பத்தாஞ்சூத்திரத் தொடக்கத்து "இங்ஙனம் வேண்டும் செய்தி முறைமைகள்

மூன்று சூத்திரத்தால் வகுத்தோதிய ஆசிரியர், நிறுத்தமுறையானே அச்சாதலத்தால் பெறப்படும் பெத்தநீக்கமும் முத்திப்பேறுமாகிய பயனியல்பு மூன்று சூத்திரத்தால் கூறுவான தொடங்கினார்; அவ்விருவகைப் பயனுள் அப்பெத்தநீக்கம் ஆமாறு கூறுதற்கெழுந்தது பத்தாஞ்சூத்திரம்" எனவும்,

பதினொராஞ்சூத்திரத்தொடக்கத்தில் "இங்ஙனம் பத்தாஞ்சூத்திரத்தால் பெத்தத்தினின்று நீங்கப் பெற்றார்க்கு முத்திப்பயனை பெறுமாறு வகுத்துக் கூறுதற்கு எழுந்தது பதினொராஞ்சூத்திரம். முத்தி யென்றது ஈண்டுத் தலைமைபற்றிச் சிவப்பேற்றின் மேல் நின்றது" எனவும்,

அடுத்து பன்னிரண்டாஞ்சூத்திரத் தொடக்கத்து "இவ்வாறு பத்தாஞ்சூத்திரத்தானும் பதினொராஞ் சூத்திரத்தானும் முறையே பாசநீக்கமும் சிவப்பேறு மாகிய பயன்பெற்றார்க்குச் சீவன்முத்தி நிலைக்கண் நிகழும் இயல்பு வகுத்துக் கூறுதற்கு எழுந்தது பன் னிரண்டாஞ் சூத்திரம்" எனவும் அவ்வாசிரியர் கூறியருளினமை காண்க.

இவ்விரு உரையாசிரியர்களிலே ஸ்ரீ நிரம்பவழகிய ஞானசம்பந்ததேசிகர் சிவாகமம் முதலிய வடமொழி நூல்களில் எல்லையில்லாத பெரும்புலமையுடையவர் எனினும், தமிழ்நூல்களிலே குறைந்த புலமையுடை யவரல்லர். தம்முடைய ஆசிரியர் இயற்றியருளிய நூல் களிலே பெருமபற்றுடையவராக அங்கங்கே இவர் அவற்றை எடுத்தாண்டிருக்கின்றனர். இவ்வுரையா சிரியருடைய ஆசிரியர் கண்கட்டி - மறைஞானபண் டாரம் எனபவர். இவர் இயற்றியனவாகக் காணப்படும்

நூல்கள் சிவதருமோத்தரம், சைவசமயநெறி, பரமத திமிரபாநு, பரமோபதேசம், ஐக்கியவியல், பதிபசு பாசப்பனுவல், சங்கற்பநிராகரணம், அகவல், அளவை நூல் முதலியன; இவை தமிழிலே உள்ளன. இவர் உரையிலே மேற்கோளாக எடுத்துக்காட்டிய நூல்கள் மிகப்பல; அவை நூற்றுக்கு மேற்பட்டன.

இவ்வாதீனத்துத் திராவிடமாபாடிய கர்த்தராகிய ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் தாம் அருளிய 'சிவசமவாதவுரை மறுப்பு எடுத்து என்னும் சொல்லுக்கிட்ட வைரக்குப்பாய'த்திலே 'தென்னூல் வடநூல் முழுது முழுதும் இனிதுணர்ந்து இந்நூலுக்கு உரை செய்துமெனப் புகுந்த சிவாக்கிரயோகி தேசிகர், மறைஞானதேசிகர் முதலிய தொல்லாசிரியர்' என அருளிச் செய்திருத்தலால் ஸ்ரீ மறைஞானசம்பந்ததேசிகர்பால் அவர்கள் கொண்டிருந்த கௌரவம் வெளிப்படையாம். இக்காலத்திலே தமிழ்நூற்பயிற்சியும், வடநூற் பயிற்சியும் பெற்றுள்ளோர்கள் அறிந்து படித்துப் பயன் துய்க்குமாறு அவர் எடுத்துக்காட்டிய மேற்கோள்நூல்களின் அகராதி தனியே முதற்பகுதி, இரண்டாம் பகுதிகளில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சித்தாந்த சாத்திரம் கற்போர் அனைவரும் இந்த நூல்களை ஒருமுறையேனும் கற்பாராயின் முறைபிறழ வுணரார் என்க. மொழிப்பயிற்சியளவிலே அமையும் கற்றறிவுடையோர் நூற்பெயரையேனும் தெரிந்து கொள்ளுதல் மிக இன்றியமையாததாம்.

அன்றியும், இந்த அட்டவணையிலேகண்ட தமிழ் மொழி நூல்கள் வடமொழிநூல்கள் எங்கேனும் எவர் கண்ணிற்படினும், எவர் கையிற்படினும்

நல்லபடியாகப் பாதுகாக்கப்படுமே என்னும் கருத்தும் அடியேனுக்கு உளதாதலை விநயமாக எடுத்துக்காட்டலானேன். ஒருபடி கிடைத்தால் அது பலபடியாமன்றோ! எங்கள் குருமஹாசந்நிதானத்திலே அவை சமர்ப்பிக்கப்பெறின் ஆயிரம் - பல்லாயிரம் படிகளாக அவனிமுழுவதும் பரப்பத் திருவருளும் குருவருளும் கூட்டுமன்றோ!!

அப்படியன்றோ! இந்த மறைஞான சம்பந்த தேசிகர் உரையும், நிரம்பவழகியதேசிகர் உரையும் ஒருபடி ஆயிரம்படிகளாக அன்பர்கள் கையகத்துக் கிடைத்து, பல்லாயிரம் மக்கள் இவ்வாறு துய்த்தற்கு வாய்ப்பாயின.

1952-ஆம் ஆண்டிலே அன்பர் தமிழ்ப்பெரும் புலவர், சித்தாந்த கலாநிதி, பேராசிரியர், திரு, ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை அவர்களைச் சந்திக்க நேர்ந்தேன். அப்பொழுது அவர்கள் 'பாண்டிப்பெருமாள் விருத்தி, சித்தியார் அறுவருரை முதலியவைகளை வெளியிடுதற்கு முயற்சி செய்யுங்கள்; முயற்சி வெற்றிகரமாம்: இவ்வரிய நூலுரைகள் திருவாவடுதுறை ஆதீனம்போன்ற இடங்களிலேதான் எளிதாக வெளியிடமுடியும்' எனக் கூறினார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம் இதனை அச்சிட முன்னமே கட்டளையிட்டிருப்பதை அறிவித்தேன். அறுவருரையைச் சென்ற விக்கிரம (1940) ஆண்டிலே சிவநேசன் பத்திரிகை வாயிலாக வெளியிடப் பிரதிபண்ணிமுடித்தேன். அக்காலத்திலே அம்முயற்சி தடைப்பட்டுவிட்டது. அது திருவருளின் திறமென்றே இப்போது நல்ல துணிவு கொண்டேன். அன்று வெளிவந்திருந்தால் இன்று காணும் சிறந்த பதிப்பாக இவற்றைக்காண இயலாது.

ஆதீன ஏட்டுப் பிரதிகளின் துணையால் எத்தனையோ திருத்தமாக இவைகள் வெளிவந்திருக்கின்றன என்பதை அறிஞருலகமே அறியும். கடந்த ஆறு ஆண்டுகளில் நூற்றுக்கு அதிகமான சிறந்தநூல்கள் வெளிவந்துள்ளன. இவை எல்லாம் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமஹா சந்நிதானம் அவர்கள் திருவுள்ளத்தெழுந்த பெருங் கருணையேயாம். மேலும் மேலும் எங்களை ஊக்கி 'எந்த நூல் வெளிவர உள்ளது? விரைவிலேமுடிக்க' எனக் கட்டளையிட்டு ஆவன செய்தருளல் தமிழர்செய்த தவப்பெருக்கேயாம். அன்றியும், இவ்வரிய நூல்களும் உரைகளும் சமயவுலகிற்கு, சமயவரலாற்று ஆராய்ச்சி உலகிற்குப் பெருந்துணையாகும் என்பதில் ஐயமில்லை.

சிவபோகம் விளையவேண்டுமாயின் சிவஞானப் பயிர் செழிந்தோங்கவேண்டும். அப்பயிர் செழிந்து ஓங்கப்பருவங்களில்பெய்யும் கார் பொய்யாதுபெய்தல் போலச் சைவ ஆதீனங்கள் கருணைமழை பொழிதல் மிக மிக இன்றியமையாததாம். அக்கருணைமழையின் பெருக்காலேயே செந்தமிழ் வளம் பெறவும், செந்தமிழ்நாடு சுந்தர மோங்கவும், சித்தாந்த சைவம் தழைத்துச் செந்நெறியில் மக்கள் ஒழுகவும் பல்லாற்றானும் ஏறக்குறைய ஐந்நூறு ஆண்டுகளுக்கு மேலாகச் சைவ ஆதீனங்களே பாதுகாத்து வருவன. தென்னிந்திய வரலாற்றுநூலார் நடுநிலை திறம்பாது கண்ட உறுதியான உண்மைச் செய்திகள் இவை என்பது அறிஞர் அறிந்ததே.

### கி - பி. 1400 – க்கும் பிற்பட்ட காலம்:-

**''இனி, இதற்கிடையில் திருவாவடுதுறை ஆதீனத்தாரால் தமிழ்மொழி அடைந்த அபிவிருத்திக்கோ அளவில்லை.**

களஞ்சியம்' திருவாவடுதுறை என்று கூறுவது எவ்வாற்ருனும் ஏற்புடைத்தேயாம். அருணந்திசிவாசாரியர், உமாபதிசிவா சாரியர் முதலாயிஞேரால் 'சைவசிந்தாந்த சாஸ்திரங்கள் முன்னரே வெளிப்பட்டன. இம்மடத்தைச்சார்ந்த மயிலேறும் பெருமாள் பிள்ளை 'கல்லாடவுரை' யும், ஈசானதேசிகர் 'இலக்கணக்கொத்துரை'யும், சங்கரநமச்சிவாயப் புலவர் 'நன்னூல் விருத்தியுரை'யும், சிவஞானமுனிவர் 'சித்தாந்த மரபு கண்டன கண்டனம், தொல்காப்பியச் சூத்திரவிருத்தி, இலக்கண விளக்கச் சூருவளி' என்ற நூல்களும் செய்தனர். தருமபுர ஆதீனத்தைச் சார்ந்த வைத்தியநாத தேசிகர் குட்டித்தொல்காப்பியம் எனப்படும் இலக்கண இயற்றினர். . . . இதுநிற்க,

சிவஞானமுனிவர் பல அருமையான செய்யுள் நூல்கள் செய்தும், தருக்கநூல்கள் இயற்றியும், சித்தாந்த சாத்திரங் களுக்கு உரை வகுத்தும், இலக்கணநூல் புனைந்தும், கண்டனங் கள் வெளியிட்டும், மாணுக்கர் பலர்க்குத் தமிழறிவுறுத்தியும் விளங்கிய மகாவித்துவச்சிகாமணி. இவர்புகழ் பரவாத மூலை யில்லை. வடமொழியும் ஒருங்குணர்ந்தவர். இக்காலத்து வரலாற்று முறையில் கற்ற வித்துவான்கள் என்போரது வரலாற்றை ஆராய்ந்தால் இவரிடத்தே வந்து முடியும். இவர் மாணுக்கருட்சிறந்த கச்சியப்பமுனிவர் தணிகைப்புராணம், விநாயகபுராணம் முதலியநூல்கள் பாடித் திருத்தணிகை - கந்தப்பையருக்குத் தமிழறிவுறுத்தினர். இலக்கணம் - சோம சுந்தரக் கவிராயர் இராமநாதபுரம் சென்று ஆண்டுத் தமிழ்க் கல்வியைப் பரப்பினர். திருக்கழுக்குன்றக்கோவை செய்தார் இவரே . . . .

அதன்மேல் திருவாவடுதுறை ஆதீனத்தைச்சார்ந்த திரிசிர புரம் - மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் தோன்றிக் கணக்கற்ற நூல்கள்யாத்தும்,பல்லோர்க்குத் தமிழ் நூல்கள் பல பாடம் சொல்லியும், தனிப்பாடல்பல பாடியும் விளங்கினர். இவர் செய்த நூல்களுள் திருநாகைக்காரோணப் புராணம் பெரிதும் பயிலுகின்றது. .''

என்பர் ஸ்ரீ வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரி யார் B. A., அவர்கள் (தமிழ்மொழி வரலாறு - பக்கம 121, 122, 124 பார்க்க).

மற்றும், திருநெல்வேலி தாகூர் சட்ட விரிவுரையாளர், பேராசிரியர், கா. சுப்பிரமணியபிள்ளை M. A., M. L., அவர்கள் எழுதிய தமிழ இலக்கியவரலாறு - நான்காம் அதிகாரம - சைவாதீனங்கள் (பக்கம் 423) என்னும தலைப்பையும காண்க

இனி, இப்புத்தகத்தின முதற் பகுதியைப் போலவே பிற்பகுதி (7–12 சூத்திரங்கள்) அமைப்பு முறைகளும் செப்பமாகவே உள்ளன. அம்முறைகளை முதற்பகுதி முகவுரையில் 'இப்பதிப்பில் உள்ள விசேடங்கள்' என்ற தலைப்பில் காண்க. இப்புத்தகம் முதற் பகுதி இரண்டாமபகுதிகள் தொடர்ந்த பக்க எண்கள் உடையனவாய் 1221 பக்கங்களில் அச்சிடப்பட்டது.

எடுத்துப் படிப்போருக்கு உபகாரமாக இரண்டு பகுதிகளாக இதனை வெளியிடுமாறு ஸ்ரீ-ல-ஸ்ரீ மஹா சந்நிதானத்தில் கட்டளையிட்டருளியபடி வெளியிடப் பெற்றுள்ளது. ஆயினும், தொடர்ந்த பக்கங்களே முழுதும் நூல் உரைகளுக்குத் தரப்பட்டன.

செய்யுள் முதற்குறிப்பகராதி இதன் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது. அரும்பதக்குறிப்பகராதியும், செய்யுட்களின் விடய அட்டவணையும எழுதிச் சேர்க்கக்கருதியும் காலமதாழ்க்குமென அஞ்சி இதில் சேர்க்கப்படவில்லை. எனினும், சிவஞானசித்தியார் உரைப் பகுதிகளின் ஆராய்ச்சியொன்று என்னால் எழுதப் பட்டு வருகின்றமையின் அவ்வாராய்ச்சி நூலிலே,

தயாரித்துள்ள விடய அட்டவணையையும் சேர்த்துப் பதிக்க எண்ணியுள்ளேன்.

ஸ்ரீ பஞ்சாக்கரதேசிக மூர்த்திகள் குருபூசைப் பெருவிழாவிலே இப்புத்தகம் வெளிவருதலின் இதன அங்கமாக, ஸ்ரீ பஞ்சாக்கரதேசிகர்மாலை ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள் திருவுருவப்படத்தையடுத்துச் சேர்க்கப் பட்டிருக்கிறது. அன்பர்கள் நாடோறும் இதனைப் பாராயணம் பண்ணக்கடவர்.

என் அயர்ச்சியால் இதனகண் ஏதேனும் பிழை நேர்ந்துளதாயின் அறிஞருலகம் பொறுத்தருள்க.

வாழ்க குருமஹாசந்நிதானம்! வாழ்க குருவருள்!!

இங்ஙனம்,

சித்தாந்தசைவமணி—

திருவாவடுதுறை

16—1—1958.

த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளை,

ஆதீனவித்துவான்.

# எடுத்தாண்ட நூல்கள்

## 1. மறைஞானசம்பந்ததேசிகர் உரை.

[பக்க எண்]

அஜிதம் 907.

ஸநத்குமாரர் 937.

அஞ்ஞவதைப்பரணி 1055.

ஆக்கினேயபுராணம் 1094.

இரகசியசாரம் 1090.

இரத்தினத்திரயம் 828, 870, 916, 921, 991, 1117.

இரௌரவாகமம் 828, 921, 1146.

இரௌரவவ்ருத்திரம் 1022.

உண்மைவிளக்கம் 1076.

கந்தகாலோத்தரம் 1208.

கந்தபுராணம் 947.

கந்தரநுபூதி 1017.

காமிகாகமம் 829, 832, 839, 818, 900, 907, 916, 930, 933, 937, 947, 1056, 1081, 1196.

காரணாகமம் 1076.

காலதீபப்பிரகாசிகை 870.

காலோத்தரம் 870, 1060, 1081, 1105.

கிரணாகமம் 815, 831, 844, 870, 921, 1056, 1081, 1121, 1142, 1116, 1205.

## 2. நிரம்பவழகியதேசிகர் உரை.



* இக்குறியிட்டவை 7 முதல் 12 சூத்திரம்முடிய உள்ள இரண்டாம் பகுதியில்மட்டும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளவைகளாம்.

# டம் விளங்காமேற்கோள்

[பக்க எண்]

உ

சிவமயம்

# குருவணக்கம்

பண்ணிசைவெம் பரிதிமதி திலதயிலம்
தீயிரும்பு பாணி யுப்பு
விண்ணனிலம் உடலுயிர்நீர் நிழலுச்சிப்
பளிங்குபகல் விளக்குப் பாளிர்
கண்ணிரவி யுணர்வொளிபோல் பிரிவரிய
அத்துவிதக் கலவி காட்டித்
தண்ணளிவைத் தெனையாண்ட துறைசைநமச்
சிவாயகுரு சரணம் போற்றி.

ம்பலம்.

— ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

சிவமயம

# குருமரபுவாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

—ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள்.

# ஸ்ரீ பஞ்சாக்கரதேசிகர்மாலை

திருச்சிற்றம்பலம்

அறிவே யருட்செல்வ மேநிறை வேயர சேயடியார்
உறவேயென் ஞருயி ரேமணி யேயுரு காதநெஞ்சிற்
பிறிவே துரியங் கடந்த சிவானந்தப் பேரமுதச்
செறிவே கருணைப் பிழம்பேபஞ் சாக்கர தேசிகனே.

பொய்யும் கவடும் கொடுமையும் வஞ்சமும் பூண்டபொல்லாக்
கையன் கலதி முழுமூட னேனுநின் கண்ணருளால்
உய்யும் படியென்று கூடுமெந் தாயுண்மை யாளரன்பு
செய்யுந் துறைசையுட் டேவேபஞ் சாக்கர தேசிகனே.

பரிசறி யேனருட் பண்பறி யேனெனைப் பற்றும்வினைக்
கரிசறி யேனது மாற்றறி யேன்கல ரோடிணங்கித்
துரிசுக ளேசெயும் பொல்லா வுலகத் தொழும்பனுக்குன்
தெரிசனம் கிட்டுவ தென்றோபஞ் சாக்கர தேசிகனே.

மருவே னுனதடி யார்திருக் கூட்ட மருவிவஞ்சம்
ஒருவேன் மகளிர் விழிக்கடை நோக்குக் குளம்பதைத்து
வெருவே னடிமையு மெந்நா ளுனதருள் மேவுவனோ
திருவா வடுதுறைத் தேவேபஞ் சாக்கர தேசிகனே.

ஆனந்த வாழ்வி லடியாரெல் லாரு மகங்களிப்ப
நானிந்த மாயத் தொடக்கினில் வீழ்ந்து நலிதனன்றோ
வானந்த நீண்ட மதிலா வடுதுறை வாழ்முதலே
தேனுந்து பங்கயத் தாளாய்பஞ் சாக்கர தேசிகனே.

வற்றாக் கருணைத் திருநோக்கு நின்முக மண்டலமும்
சற்றே முகிழ்த்த குறுமூ ரலுந்தட மார்பழகும்
பொற்றாளும் சின்முத் திரையுநெஞ் சூடு பொறித்துவைப்பாய்
செற்றார் புரஞ்செற்ற தேவேபஞ் சாக்கர தேசிகனே.

தேறாத நெஞ்சும் தெளியாத சிந்தையும் தேங்கியின்பம்
ஊறாத கண்ணு மொழியாக் கவலையு முன்புகழே
கூறாத நாவு மெனக்கே தகுமென்று கூட்டினையே
சீறா தருள்செயும் தேவேபஞ் சாக்கர தேசிகனே.

நின்னரு ணோக்கினுக் கெவ்வள வேணும் நெகிழ்ந்துருகா(து)
என்னுடை வன்மன மின்னார் விழிக்கடைக் கென்னிலந்தோ
வன்னியி னேர்மெழு காயுரு கா நிற்கு மாயமென்னே
செந்நெறி யாய்நின்ற தேவேபஞ் சாக்கர தேசிகனே.

பிறவித் துயரினி யாற்றே னடைக்கலம் பேயுலகின்
மறுகித் திரிந்தலைந் தெய்த்தே னடைக்கல மங்கை நல்லார்
உறவைத் தவிர்த்துய்யக் கொள்வாயடைக்கல முண்மையன்பர்
செறிவுக்குள் வாழுமெய்த் தேவேபஞ் சாக்கர தேசிகனே.

இருவினை தாமிவை மும்மல மீங்கிவை யீதுசிவம்
கருவுறு மாருயி ருண்மை யிதுவென்று காட்டவல்ல
குருபரன் நீயன்றி வேறறி யேனிக் குவலயத்தில்
திருவெண்ணை மெய்கண்ட தேவேபஞ் சாக்கர தேசிகனே.

திருச்சிற்றம்பலம்.

— ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள்.

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சிவஞானசித்தியார் சுபக்கம்

ஸ்ரீ மறைஞானசம்பந்ததேசிகர்—

ஸ்ரீ நிரம்பவழகியதேசிகர் உரைகளுடன்.

# சாதனவியல்

## ஏழாஞ்சூத்திரம்

### செய்யுள்—248

அனைத்தும்சத் தென்னின் ஒன்றை
　　அறிந்திடா தசத்தால் என்னின்
முனைத்திடா தசத்துச் சத்தின்
　　முன்னிருள் இரவி முன்போல்
நினைப்பதிங் கசத்தே என்னில்
　　சத்தின்முன் நிலாமை யானும்
தனைக்கொடொன் றுணர்த லானும்
　　தானசத் துணரா தன்றே.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் ஏழாஞ்சூத்திரம் என் னுதலிற்றோ ? எனின், மேலதற்கு ஓர் புறநடை யுணர்த்துதல் நுதலிற்று.

சூந்திரம் பிண்டசூத்திரம், தொகைச்சூத்திரம், வகைச்சூத்திரம், குறிச்சூத்திரம், செய்கைச்சூத்திரம், புறநடைச்சூத்திரம் என அறுவகைப்படும். அவற்றுள் புறநடை என்பது ஓத்துப்புறநடை, அதிகாரப் புறநடை, சூத்திரப்புறநடை, பிண்டப்புறநடை, நூற்புறநடை என ஐந்துவிதப்படும்.

அவற்றுள் இஃது யாது? எனில், சூத்திரப் புறநடை என அறிக. அஃதாவது முற்கூறிய சூத்திரத்துட் சொன்ன பொருளை வற்புறுத்தி, அச்சூத்திரத்தின் இல்லாத பொருளைத் தழுவிநிற்பது என அறிக.

இத்தலைச்செய்யுள் என்னுதலிற்றோ? எனின், நின்ற சித்து அசித்துக்களாகிய இரண்டும் தம்மில் செறிய மாட்டாது ஆதலால் அவ்விரண்டினையும் ஆன்மாவே உணரும் என்று குளகமாக உணர்த்துதல் நுதலிற்று.

**என்பது:** அனைத்தும் சத்து என்னின் ஒன்றை அறிந்திடாது - சர்வமாகிய பிரபஞ்சங்களையும் சிவன் அறிவன் என்னில் அந்தச் சிவனுக்கு விகற்பித்து ஒன்றையும் அறியும் அறிவு கூடாது,—

அசத்தால் என்னின் - அந்தச் சிவன் கருவி கரணங்களால் அறிவன் என்பாயாகில்,—

முனைத்திடாது அசத்து சத்தின்முன் இருள் இரவி முன்போல் - ஆதித்தன் சந்நிதியில் அந்தகாரம் தோன்றி நில்லாது அதுபோலச் சிவன்முன்னே மாயாகாரியம் பொருந்திநின்று காரியப்படமாட்டாது,—

நினைப்பது இங்கு அசத்தே என்னில் - அந்த மாயா காரியம் தானே சிவனை அறியும் என்று சொல்லுவா யாகில்,—

சத்தின் முன் நிலாமையானும் தனைக் கொடு ஒன்று உணர்தலானும் தான் அசத்து உணராது அன்று ஏ - சத்தாகிய சிவன் முன்னே பிரபஞ்சம் நில்லாதபடியாலும் அந்த மாயாகாரியத்தை அதற்கு வேறாய் ஒரு ஆன்மா தனக்குக் கருவியாகக்கொண்டு அறிகையினாலும் சடம் ஆகையினாலும் அந்த மாயா காரியமான பிரபஞ்சம் அறியமாட்டாது என்றவாறு.

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை:** எல்லாத்தையும் அறிகிறது சிவம் என்று சொல்லுகைச்செய்தே இப்படி ஓர் ஆன்மா

உண்டென்று எங்கே காணப்பட்டது? என்ற பரிணாம வாதியை நோக்கி மேல் அருளிச்செய்கின்றார்.

முன் சூத்திரத்திலே கூறுசெய்த அத்தை விளங்கச் சொல்லியது.

இ - ள்: அனைத்தும் சத்து என்னில் ஒன்றை அறிந்திடாது - எல்லாத்தையும் அறிகிறது சிவம் ஆன்மா என்பது ஒன்று இல்லை என்று நீ சொல்லில் பிரபஞ்ச விடயத்தைச் சிவனுக்கு அறிய வேண்டுவது

*கருவிகளானது சிவனை அறியா நிற்க அவன் முன்னிலையில்லாது என்றது என்ன நடபுதல் என்ற சங்கிராந்தவாதியை நோக்கி அருளிச்செய்கின்றார்:*

அசத்தால் என்னில் - அசத்தானது சடமாய் நிலைநில்லாதபடியாலே அறியாது.—

*அது என போல? என்னில்,*

முனைத்திடாது அசத்து சத்தின்முன் இருள் இரவி முன்போல் - சத்தாகிய சிவனுடைய சந்நிதியில் அசத்தாகிய பிரபஞ்சம்தோன்றுது அது ஆதித்தன்சந்நிதியில் அந்தகாரம் தோன்றுதாற்போல,—

*அப்படி அன்று காணும்,*

நினைப்பது இங்கு அசத்தே என்னில் - மாயா கருவிகள் தானே காணும் எல்லாத்தையும் அறிகிறது என்று நீ சொல்லில்,—

சத்தின் முன் நிலாமையானும் - நீ சொல்லுகிற மாயாகருவிகள் சிவனுடைய சந்நிதியிலே நில்லாது ஆகையாலும்,—

தனை கொடு ஒன்று உணர்தலானும் - அவையிற் றைக் கருவியாகக் கொண்டு ஓர் ஆன்மா நின்று அறிகையாலும்,—

தான் அசத்து உணராது அன்று ஏ - அந்த மாயா கருவிகள் சடம் ஆகையாலே தானாக ஒன்றையும் அறியமாட்டாது; அறிகிறது வேறே ஒரு முதல் என்றவாறு.

*அனைத்தும் சத்து என்ற பரிணாமவாதியை மறுத்தற்குப் பிரமாணம் :*

*'' தன்போல் அறிஞரும் தலைவரும் இலரால்*
*மின்போல் நிலைமையை வேண்டலும் பழுதே ''*

*—சங்கற்ப - பரிணாமவாதி நிராகரணம்.*

*என்றும், அசத்தால் என்ற சங்கிராந்தவாதியை மறுத்தற்குப் பிரமாணம் :*

*'' . . . . அவைமுற் றுன்பம் துடைக்கும்*
*திருவருள் மருவ உரியன என்னில்*
*அருளுரு மாயா இருளின தாங்கொல்*
*சத்த பரிச ரூப ரசநறை*
*எத்திறத் தினதருள் இயம்புக அன்றியும்*
*நிறைந்து நீயாய் நின்றனை யேனும்*
*மறைந்தைம் புலனாய் வாராய் என்றும்*
*கரணம் எல்லாம் கடந்தனை என்றும்*
*மரணம்ஐ யைந்தின் அப்புறத் தென்றும்*
*முன்அருட் டலைவர் பன்னினர் எனவும்*
*இனையவை ஒழிய அறிகுவ தெவ்வா(று)*
*என்ற நிற்கலிக் கொன்றிய இன்பம்*
*கூறுதல் தகும்அருட் பேறினை அன்றே ''*

*—சங்கற்ப - சங்கிராந்தவாதி நிராகரணம்.*

*என்னுமதும் கண்டுகொள்க.*

*சொல்லியது பிரபஞ்சம் விடயம் ஆகாது என்றும், அந்தபபிரபஞ்சம் சடமாய் இருக்கையால் சிவனை அறியாது என்னும் முறைமையும் அறிவித்தது.* (க)

செய்யுள்—249

**சத்தசத் தறிவ தான்மாத்**
**தான் சத்தும் அசத்தும் அன்று**
**நித்தனாய்ச் சதசத் தாகி**
**நின்றிடும் இரண்டின் பாலும்**
**ஒத்துடன் உதித்து நில்லா(து)**
**உதியாது நின்றி டாது**
**வைத்திடும் தோற்றம் நாற்றம்**
**மலரினின் வருதல் போலும்.**

**1.** மறைஞானசம்பந்தர் :

சத்து அசத்து என்றாலும், அவையிற்றை ஓரிடத்தில் சித்து அசித்து என்றாலும் தம்மில் பேதமில்லை; ஆதலால் இழுக்கா; இங்ஙனம் கூறிய சித்து அசித்துக்களை ஆன்மா பிறித்துஅறியும் முறைமையும், அஃது இருவிதத்தால் ஒருவிதப்பேர் பெறும் முறைமையும் உணர்த்துகின்றார்.

**என்பது :** சத்து அசத்து அறிவது ஆன்மா தான் சத்தும் அசத்தும் அன்று - சத்து இது என்றும் அசத்து இது என்றும் விவேகித்து அறிவது ஆன்மா அந்த ஆன்மா முற்கூறிய சத்தும் அல்ல அசத்தும் அல்ல.—

நித்தன் ஆய் சதசத்து ஆகி நின்றிடும் இரண்டின் பாலும் - இந்தஆன்மாதான் அழியாதவனாய்ச் சத்து

ஆகிய சிவத்துடன் கூடி அறிந்தபோது சத்தாகியும் அசத்தாகிய பிரபஞ்சத்துடன் கூடி அறிந்தபோது அசத்தாகியும் இவ்விரண்டு தன்மையும் உடையன் ஆதலால் சதசத்து என்னும் பெயரைப் பெறு நிற்பன்.—

ஒத்து உடன் உதித்து நில்லாது உதியாது நின்றிடாது - மாயாகாரியங்களோடு கூடித் தோன்றினுன் ஆயினும் அவைகளைப் போலப் பரிணுமமாகித் தோன்றி நிற்பவனுமல்லன் சிவனைப்போலத் தத்துவாதீதனுகித் தோன்ருமல் நிற்பவனும் அல்லன்.—

வைத்திடும் தோற்றம் நாற்றம் மலரினில் வருதல் போலும் - அப்படிப்பட்ட ஆன்மா தோன்றி நிற்கும் நிலை எங்ஙன் என்னில் பூவினிடத்து உண்டாகிய வாசம் அருவமாயிருந்தும் அறியப்படா நின்றது எப்படி ? அப்படி அவனும் தேகத்துடன் கூடித் தோன்றி நிற்பன் என்றவாறு.

*பூ - சரீரம், வாசம் - ஆன்மா, அருவுருவம் தான்*

*" மலர் மணம்போல் தொக்கு "*

*—சிவஞானபோதம்: சூத் - 7, வெண்பா - 3.*

*என்னும் முன்னூலினுள்ளும் காண்க.*

**2. நிரம்பவழகியர் :**

**அ - கை :** இந்த இரண்டும் ஒன்றை ஒன்று அறியாது; ஆனல், பின்னை அறிகிற முதல் எது ? என்ற பரிணுமவாதியை நோக்கி அருளிச்செய்கின்ருர்.

- ள் : சத்து அசத்து அறிவது ஆன்மா-அந்தச் கூடிச் சிவத்தையும் இந்தப் பிரபஞ்சத் தோடுகூடிப் பிரபஞ்சத்தையும் அறியுமது ஆன்மா,—

*அவை இரண்டிலும் ஆனமா எது? என்னில்,*

தான் சத்தும் அசத்தும் அன்று - இவனுடைய உண்மையை விசாரிக்கில் அந்தக் காணப்படாத சிவமும் அல்ல இந்தக் காணப்பட்ட பிரபஞ்சமும் அல்ல,—

*இரண்டும் அல்ல என்று நீ சொல்லில், ஆன்மா எ.ப்பது ஒரு முதல் இல்லையாகவேண்டும என்று நீ சொல்லில்,*

நித்தன் ஆய் சதசத்து ஆகி நின்றிடும் இரண்டின் பாலும் - தனக்கொரு அழிவில்லாதவனுமாய்ச் சிவத் துடனே கூடினபொழுது சிவமுமாய்ப் பிரபஞ்சத் துடனே கூடினபொழுது பிரபஞ்சமுமாய் இரண்டின் பகுதியிலும் நிற்பன்,—

*ஆனுல் இந்தமுதல் காணப்பட்டு நிற்குமோ? காணப்படாது நிற்குமோ? என்னில்,*

ஒத்து உடன் உதித்து நில்லாது உதியாது நின்றி டாது - சிவத்தோடுகூடிச் சிவம் எனவும் பிரபஞ்சத் தோடு கூடிப் பிரபஞ்சம் எனவும் நின்றதாகிலும் பிரபஞ்சம்போல இது என்னத் தோன்றியும் நில்லாது. அந்தச் சிவம்போலத் தோன்ருமலும் நில்லாது,—

*)ல் இது தோன்றிநின்ற முறைமை எங்ஙனே? என்னில்,*

வைத்திடும் தோற்றம் நாற்றம் மலரினில் வருதல் போலும் - இவ்வுடம்போடுகூடித் தோன்றுமுறைமை சொல்லுமிடத்து பூவோடுகூடித் தோன்றுகிற மணம் போலும் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம்:*

*" கடவுளும் உடலின் கண்படல் துஞ்சல்*
*இடர்நலம் உறுதல் இறங்குதல் ஏறுதல்*
*எவ்வகை யேனும் செய்கையின் முதலும்*
*பலகலை உலகில் நிலவுத லானும்*
*எண்ணிரும் பொருளும் இரவியும் ஒழியக்*
*கண்என ஒன்று காண்கையி னாலும்*
*பாசப் பகுதியும் ஈசனும் ஒழியப்*
*பசுவும் உண்டென் றிசையவேண் டின்றே."*

*—சங்கற்ப - பரிஹாரவாதி நிராகரணம்.*

*என்றும்,*

*" அருவுருவம் தானறிதல் ஆயிழையாய் ஆன்மா*
*அருவுருவம் அன்றாகும் உண்மை - அருவுருவாய்த்*
*தோன்றியுடன் நில்லாது தோன்றாது நில்லாது*
*தோன்றன் மலர்மணம்போல் தொக்கு."*

*—சிவஞானபோதம்: சூத் - 7, வெண்பா - 3.*

*என்னுமதும் கண்டுகொள்க.*

*இதனால் சொல்லியது சத்தையும் அசத்தையும் அறிகிறது ஆன்மா என்றும், இதனுடைய உண்மை சத்தும் அல்ல அசத்தும் அல்ல என்றும், ஒழியாத வனுமாய்ச் சத்தோடு கூடினபோது சத்துமாய் அசத்தோடு கூடினபோது அசத்துமாய் நிற்கையால் சதசத்து என்றும், நிரியமாகத் தோன்றி நில்லாது என்றும், தோன்றாமல் நில்லாது என்றும், இது*

தோன்றுகிற முறைமை மலரின் மணம் போலும் என்னும் முறைமையும் அறிவித்தது. (உ)

செய்யுள் –250

சுத்தமெய்ஞ் ஞான மேனிச்
சோதிபால் அசத்தஞ் ஞானம்
ஒத்துரு குற்றம் எல்லாம்
உற்றிடும் உயிரின் கண்ணே
சத்துள போதே வேறும்
சதசத்தும் அசத்தும் எல்லாம்
வைத்திடும் அநாதி யாக
வாரிநீர் லவணம் போலும்.

1. மறைஞானசம்பந்தர் :

நில் அசத்தவத்தைகள் பொருந்ாது என்பதும், ஆன்மாவினிடத்தில் அவை பொருந்தும் என்பதும், திரிபதார்த்தமும் அநாதி என்பதும் திருட்டாந்தபூர்வமாக உணர்த்துகின்றார்.

**என்பது :** சுத்த மெய் ஞான மேனி சோதிபால் அசத்து அஞ்ஞானம் ஒத்து உரு - சுத்தமான சத்திய ஞானமே திருமேனியாய் உள்ள பரமசிவனது சந்நிதியில் அசத்தும் அஞ்ஞானமும் பொருந்தி நிற்க மாட்டா,—

குற்றம் எல்லாம் உற்றிடும் உயிரின்கண் ஏ - இந்தக் குற்றமெல்லாம் ஆன்மாவிடத்திலே பொருந்தா நிற்கும்,—

சத்து உளபோதே வேறு ஆம் சதசத்தும் அசத்தும் எல்லாம் வைத்திடும் அநாதி ஆக - சத்தாகிய சிவன் உள்ளபோதே ஆன்மாவும் பாசமும் அநாதியாக உண்டு என்று வேதாகமங்கள் சொல்லாநிற்கும்.—

*அஃது என்போல? என்னில்,*

வாரி நீர் லவணம் போலும் - கடலைப் போலச் சிவஞன பதியும் நீரைப்போலப் பசுவும் உப்பைப் போலப் பாசமும் என்று அறிவாயாக என்றவாறு.

*உப்பானது நீரைப் பொருந்துமது ஒழிந்து கடலைப் பொருந்தாதவாறுபோல, பாசமும் பசுவைப் பொருந்துமது ஒழிந்து பதியைப் பொருந்தாது என அறிக.*

2. நிரம்பவழகியர் :

**அ - கை :** இப்படி மலரும் மணமும்போலச் சரீரத்திலே தோன்றி நின்று அறிகிறதுதானல்லவோ அந்தச் சிவம் என்ற பரிணமவாதியை நோக்கிச் சரீர சம்பந்தம் பசு முதலுக்கு ஒழிந்து பதி முதலுக்கு இல்லை என்று அருளிச்செய்கின்றார்.

**இ - ள் :** சுத்த மெய் ஞான மேனி சோதிபால் அசத்து அஞ்ஞானம் ஒத்து உறு - நின்மலமாயிருக்கிற உண்மை ஞானமே திருமேனியாயுள்ள சிவசொரூபத்திலே அசத்தாகிய பாசம் சடம் ஆகையாலே சென்று பொருந்தமாட்டாது.—

குற்றம் எல்லாம் உற்றிடும் உயிரின்கண் ஏ - இந்த அஞ்ஞானங்களாகிய பாசம் ஆன்மாவினிடத்திலே பொருந்திநிற்கும்.—

*இவனுக்கு இந்த அஞ்ஞானம் எந்த அவதரத்திலே கூடாது என்ற பரிணாமவாதியை நோக்கி அருளிச்செய்கின்றார்.*

சத்து உள போதே வேறு ஆம் சதசத்தும் அசத்தும் எல்லாம் வைத்திடும் அநாதி ஆக வாரி நீர் லவணம் போல - பதிமுதல் உள்ள அன்றே அந்தப் பதிக்கு வேருயிருக்கும் ஆன்மாவும் பாசமும் உண்டு ஆகையாலே இவை மூன்று முதலும் அநாதி என்றே வேதாகமங்கள் சொல்லும்; அது என்போல? என்னில், ஆழம் அகலம் உண்டாகிய கடலும் அதில் தண்ணீரும் அதில் உப்பும்போல என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் :*

*" பிறர்க்கெனின் பிறரும் பிறர்க்காம் பொருளும்*
*பொருட்கமை கருவியும் அதற்குபா தானமும்*
*செய்கையும் என்றோர் ஐவகைத் தாஞெடும்*
*மாருச் சைவர் கூறுர் என்ருல்*
*நின்சித் தாந்தம் அவசித் தாந்தமென்."*

—*சங்கற்ப - பரிணாமவாத நிராகரணம்.*

*" மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாதல்*
*அஞ்ஞானம் உள்ளம் அணைதல்காண் - மெய்ஞ்ஞானம்*
*தானே உளவன்றே தண்கடல்நீர் உப்புப்போல்*
*தானே உளமுளவாத் தான்."*

—*சிவஞானபோதம்: சூத் - 7, வெண்பா - 5.*

*என்னுமாறு கண்டுகொள்க.*

*இதனால் சொல்லியது அநாதியே சிவனுக்கு நின்மலமாயிருக்கிற ஞானமே திருமேனி ஆகையால்*

அவனிடத்தில் அஞ்ஞானமாயிருக்கிற பாசம் பொருந்தாது என்றும், அநாதியே ஆன்மாவினிடத்திலே பாசங்கள் பொருந்திநிற்கும் என்றும், சிவன் உள்ள அன்றே ஆன்மாக்களும் பாசங்களும் ஆக மூன்று முதலும் அநாதியே நின்ற முறைமை சமுத்திரமும் அதில் தண்ணீரும் உப்பும்போலும் என்னும் முறைமையும் ந. (௫)

செய்யுள்—251

அறிவிக்க அறித லானும்
அழிவின்றி நிற்ற லானும்
குறிபெற்ற சித்தும் சத்தும்
கூறுவ தாயிருக் கீசன்
நெறிநித்த முத்த சுத்த
சித்தென நிற்பன் அன்றே
பிறிவிப்பன் மலங்கள் எல்லாம்
பின்னுயிர்க் கருளி னாலே.

**1.** மறைஞானசம்பந்தர் :

ஆன்மா சுதந்திரன் அல்லன் என்பதும், கர்த்தா சுதந்திரவான் என்பதும் உணர்த்துகின்றார்.

**என்பது :** அறிவிக்க அறிதலானும்....அசித்தன்றி யும் அந்தப் பரமேசுவரன் தனது காருண்ணியத்தினாலே ஆன்மாக்கட்குப் பரிபாகம் வந்தபிற்பாடு சர்வ இலக்கணங்களையும் உடைய ஞானாசாரியனை அதிட்டித்துக் கொண்டு தீட்சையைப்பண்ணி ஆணவாதி பாசங்களை விமோசனம்பண்ணி அவர்களை மோட்சத்திலே அடைவியாநிற்பன் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் கிரணம், வாயவ்வியம் என அறிக.*

*மறைஞானசம்பந்ததேசிகர் உரை முடிந்தது.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** அறிவு ஒன்ருயிருக்குமது ஒழிந்து இரண்டு பகுதியாய் இருக்குமோ? எல்லாம் ஒன்று என்ற பரிணுமவாதியை நோக்கி, சிற்றறிவு என்றும் பேரறிவு என்றும் இரண்டாயிருக்கும் என்று அருளிச் செய்கின்ருர்.

இ - ள் : அறிவிக்க அறிதலானும் - ஒருவர் அறி அறியுமது ஒழிந்து தானுக ஒன்றையும் அறியா ரும்,—

இன்றி நிற்றலானும் - ஒருகாலத்திலும் அநித்தியம் இன்றி நித்தியமாய் நிலைபெற்று நிற்கை யாலும்,—

குறிபெற்ற சித்தும் சத்தும் கூறுவது உயிருக்கு - குறிக்கப்பட்ட ஆணவமலத்தாலே அநாதியே பந்திக் கப்பட்ட அறிவு என்றும், இப்படி மலசம்பந்தமாய் இருக்கையாலே அசேதனம் என்றும் ஆன்மாவுக்குச் சொல்லுவார்கள்,—

*பரமேசுவரனுடைய உண்மையை விசாரிக்கில்,*

ஈசன் நெறி நித்த முத்த சுத்த சித்து என நிற்பன் அன்று ஏ - பரமேசுவரன் அநாதியே நிற்கிறமுறைமை

அழியாததுமாய் மலரகிதமுமாய் இருக்கிற சுத்த ஞானமே தனக்குச் சொரூபமாய் நிற்பன்,—

*இது அன்றியும்,*

பிறிவிப்பன் மலங்கள் எல்லாம் பின் உயிர்க்கு அருளினால் ஏ - அநாதியே ஆன்மாக்களுக்கு உள்ள பாசபந்தங்களை எல்லாம் முன்சொன்ன முறைமையிலே கன்மம் புசித்துத் தொலைந்து, மலபரிபாகம் வந்த பின்பு தன்னுடைய காருண்ணியத்தினாலே விடுவியாநிற்பன் என்றவாறு.

*இதனால் சொல்லியது, ஆன்மாக்கள் அறிவிக்க அறிகையினாலும் அநாதியே பாசபந்தியாய் இருக்கையினாலும் சிற்றறிவாய் இருக்கும் என்றும், பரமேசுவரன் அநாதியே மலரகிதனுமாய்ச் சிற்சொரூபனுமாய்ச் சாவக்கினனாய் இருக்கையினாலே தனது காருண்ணியத்தினாலே ஆன்மாக்களுடைய பாசங்களை நீக்குவிப்பன எனனும் முறைமையும் அறிவித்தது. (௯)*

***நிரம்பவழகியதேசிகர் உரை முடிந்தது.***

***சாதனவியல் — ஏழாஞ்சூத்திரம் முடிந்தது.***

# சாதனவியல்

## எட்டாஞ்சூத்திரம்

### செய்யுள்—252

மன்னவன்தன் மகன்வேட ரிடத்தே தங்கி
  வளர்ந்தவனை அறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ என்றவரிற் பிரித்துப்
  பெருமையொடும் தானாக்கிப் பேணு மாபோல்
துன்னியஐம் புலவேடர் சுழலிற் பட்டுத்
  துணைவனையும் அறியாது துயருறும்தொல் லுயிரை
மன்னும்அருட் குருவாகி வந்தவரின் நீக்கி
  மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் எட்டாம் சூத்திரம் என்னுதலிற்றோ? எனின், முற்கூறிய பாசஞானம் போம்படிக்குப் பதிஞானத்தினை அறிவிக்கும் முறைமையினை உணர்த்துதல்

இத்தலைச்செய்யுள் என்னுதலிற்றோ ? எனின், ஆன்மாவுக்கு மயக்கத்தைத் தீர்த்துக் குருவால் உணர்த்தப்பட்டு முத்தியினை அடையும் முறைமையினை உணர்த்துதல் நுதலிற்று.

**என்பது:** மன்னவன் தன் மகன் வேடர் இடத்தே தங்கி வளர்ந்து அவனை அறியாது மயங்கி நிற்ப – ஓர் அவதரத்தில் இராசகுமாரனானவன் வேடரிடத்து நின்றும் வளர்ந்து தனது பிதா இன்னான் என்று அறியாமல் மயங்கி

பின் அவனும் என் மகன் நீ என்று அவரின் பிரித்து பெருமையொடும் தான் ஆக்கி பேணும் ஆ போல் - அந்த மயக்கம் தீர்த்து அவ்விடம் விட்டு நீங்கும் காலம் வந்த பின்பு அந்த இராசாவானவன் அந்தப் பிள்ளையை நீ எனது புத்திரன் என்று அவனைப் பிறப்பு உணர்த்தி அந்த வேட்டுவச் சேரியினின்றும் விடுவித்துக் கொண்டுவந்து தனக்குள்ள பாக்கியங்கள் வரிசைகள் எல்லாம் கொடுத்துத் தன்னைப்போல மகத்துவம்பண்ணிப் போற்றும் முறைபோல,—

துன்னிய ஐம்புல வேடர் சுழலில் பட்டு துணைவனையும் அறியாது துயர் உறும் தொல் உயிரை - நெருங்கிய பஞ்சேந்திரியமாகிய வேடருடைய சுழற்சியில் அகப்பட்டுத் தனக்கு ஒரு கர்த்தா உண்டு என்னும் உணர்வை இழந்து மயங்கி வருந்தும் பழைய [illegible]—

மன்னும் அருள் குரு ஆகி வந்து அவரின் நீக்கி மலம் அகற்றி தான் ஆக்கி மலர் அடி கீழ் வைப்பன் - பரிபாகம் வந்தபோது பரமசிவனானவன் நிலைபெற்ற கிருபாசமுத்திரமான ஞானாசாரியனை அதிட்டித்துக் கொண்டு எழுந்தருளிவந்து அந்த இந்திரியமாகிய வேடரிடத்தினின்றும் விடுவித்துத் தீட்சை பண்ணி மலவலியைப் போக்கித் தனக்கொத்த எண் குணங்களையும் கொடுத்தருளித் தன்னைப்போல் ஆக்கித் தனது சீபாதகமலத்தின்கீழ் வையாநிற்பன் என்றவாறு.

**2. நிரம்பவழகியர் :**

**அ - கை :** மேல் ஞானத்தினை உணரும் முறைமையினை உணர்த்துதல் நுதலிற்று.

இப்படிப் பாசபந்தியாய் உள்ள ஆன்மாக்களை அவரவர்கள் பக்குவத்திலே சிவன் ஆசாரிய மூர்த்த மாக எழுந்தருளி இரட்சிக்கிற முறைமை அருளிச் செய்கின்றார்.

இ - ள் : மன்னவன் தன் மகன் வேடர் இடத்தே தங்கி வளர்ந்து அவனை அறியாது மயங்கி நிற்ப - இராசாவினுடைய புத்திரன் வேடரிடத்திலே நின்று வளர்ந்து வேடருடைய வாதனையாலே தன்னுடைய பிதாவைத் தான் அறியாமல் மயங்கி நிற்ப அந்தப் பிள்ளையுடைய அறியாமை நீங்கின அவதரத்திலே,—

பின் அவனும் என் மகன் நீ என்று அவரின் பிரித்து பெருமையொடும் தான் ஆக்கி பேணுமா போல் - இவனுக்குப் பிரக்ஞை உண்டான பின்பு அந்த இராசாவும் என்னுடைய பிள்ளையாய் இருக்கும் நீ என்று அந்த வேடரிடத்தினின்றும் விடுவித்துப் பெருமையுடனே தானாகப்பார்த்து அந்தப் பிள்ளையை இரட்சிக்கிற முறைமைபோல,—

துன்னிய ஐம்புலவேடர் சுழலில் பட்டு - கன்மத் துக்கு ஈடாக ஆன்மாவைப் பொருந்தப்பட்ட ஐந்து விடயமாகிய வேடருடைய சுழலிலே அகப்பட்டுக்

துணைவனையும் அறியாது துயர் உறும் தொல் உயிரை - தனக்குப் பிராணனாய் நிற்கிற சிவனையும் அறியாமல் அநாதியே துக்கப்படுகிற ஆன்மாவை,—

மன்னும் அருள் குரு ஆகி வந்து அவரின் நீக்கி - அநாதியே இவனிடத்தில் நிற்கிற ஞானந்தானே

ஆசாரிய மூர்த்தியாக எழுந்தருளிவந்து அந்த ஐம்புல வேடரிடத்துநின்றும் விடுவிக்க.—

மலம் அகற்றி தான் ஆக்கி மலர் அடி வைப்பன் - அநாதியே இவனுக்கு உண்டான மலங்களையும் போக்கிச் சிவசொருபமாக்கித் தன்னுடைய சீபாதகமலத்தின்கீழே வைப்பன் என்றவாறு.

*இதனல் சொல்லியது, கன்மத்துக்கு ஈடாக அநாதியே பொருந்தப்பட்ட சத்தாதி விடயங்களிலே மயங்கிச் சிவனையும் அறியாமல் துக்கத்தை அநுப விக்கிற ஆன்மாவுக்கு, அநாதியே இவனிடத்திலே நிலைபெற்று நிற்கிற ஞானந்தானே ஆசாரிய மூர்த்தி யாக எழுந்தருளிவந்து, அந்தச் சத்தாதி விடயங் களினின்றும் இவனை விடுவித்து, அநாதியே இவ னுக்கு உண்டான மலங்களையும் போக்கிச் சிவசொருப மாக்கித் தனனுடைய சீபாதகமலத்தின்கீழே வைப் பன் என்னும் முறைமையும் அறிவித்தது.* (கு)

செய்யுள்—253

உரைதரும்இப் பசுவர்க்கம் உணரின் மூன்றாம்
உயரும்விஞ் ஞானகலர் பிரளயா கலர்சகலர்
நிரையின்மலம் மலங்கன்மம் மலங்கன்ம மாயை
நிற்குமுதல் இருவர்க்கும் நிராதார மாகிக்
கரையில்அருட் பரன்துவிதா சத்திநிபா தத்தால்
கழிப்பன்மலம் சகலர்க்குக் கன்ம ஒப்பில்
தரையில்ஆ சான்மூர்த்தி ஆதார மாகித்
தரித்தொழிப்பன் மலம்சதுர்த் தாசத்திநிபா தத்தால்.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் ஆன்மவர்க்கம் மூவிதம் என்பதும், அவர் ஆணவாதி பாசங்கள் பந்திக்கும் முறைமையும், அவர்கட்குச் சத்திநிபாத அநுகுணமாக அநுக்கிரகம் பண்ணும் முறைமையும் உணர்த்துகின்றார்.

**என்பது :** உரை தரும் இ பசுவர்க்கம் உணரின் மூன்று ஆம் - வேதாகமங்களில் சொல்லப்பட்ட ஆன்மவர்க்கங்களை விசாரிக்கின் மூன்று விதமாய் இருக்கும் ; அவர் யாவர் எனில்,—

உயரும் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் - மாயைக்கு மேற்பட்டு உயர்ந்த விஞ்ஞானகலர் மாயோதரத்தர் ஆகிய பிரளயாகலர் அவருக்குத் தாழ்ந் திருக்கும் சகலர் என மூவகையாம்,—

நிரையின் மலம் மலம் கன்மம் மலம் கன்மம் மாயை நிற்கும் - நிரல்நிறையே விஞ்ஞானகலருக்கு ஆணவமலம் ஒன்றும் பிரளயாகலருக்கு ஆணவமல மும் கன்மமலமும் சகலருக்கு ஆணவமலம் கன்ம மலம் மாயாமலம் என்னும் மூன்றுமலமும் இப்படி அடைவே இவர்களைப் பந்தியாநிற்கும்,—

முதல் இருவர்க்கும் நிராதாரம் ஆகி கரை இல் அருள் பரன் துவிதா சத்திநிபாதத்தால் கழிப்பன் மலம் - முற்கூறிய விஞ்ஞானகலர் பிரளயாகலர் ஆகிய இருவருக்கும் எல்லையில்லாத கிருபாசமுத்திரமாகிய சிவன் தானேவந்து தீவிரம் தீவிரதரம் ஆகிய சத்திநி பாதம் இரண்டினையும் பதிவித்து அவலோகனம் பண்ணி நிராதாரமாய் அவர்களுக்குள்ளே

மலபாசச்சேதம்பண்ணி அவர்கள் அறிவினை விளக்கா நிற்பன்; பிரளயாகலருக்குத் தேவ குருவாய் வந்து மல கன்மங்களை நீக்கி அவர்கள் அறிவினை விளக்கி அநுக்கிரகம் பண்ணுநிற்பன்.—

*"முத்திதரும்*
*நன்னெறிவிஞ் ஞானகலர் நாடுமலம் ஒன்றினையும்*
*அந்நிலையே உள்நின் றறுத்தருளிப் - பின்அன்பு*
*மேவா விளங்கும் பிரளயா கலருக்குத்*
*தேவாய் மலகன்மம் தீர்த்தருளி"*

—போற்றிப்பஃறொடை - 60, 61.

*என்பதனானும் அறிக.*

சகலர்க்கு கன்ம ஒப்பில் தரையில் ஆசான் மூர்த்தி ஆதாரம் ஆகி தரித்து ஒழிப்பன் மலம் சதுர்த்தா சத்திநிபாதத்தால் - பரமேசுவரன் பூமியின் கண் சகலர்க்குச் சற்குருவை அதிட்டித்துப் புண்ணிய பாவங்கள் இரண்டும் ஒத்தவிடத்து மந்ததரம் ஆதி நான்குவித சத்திநிபாதத்தால் தீக்கையைப் பண்ணி அவரவர் பாசத்தைச் சேதித்து அதிபக்குவராய் உள்ள வர்களைச் சுவானந்தானுபூதியைத் திளைத்திருக்கும்படி செய்வன். மந்தபாகராய் உள்ளவர்களைப் பாக தார தம்மிய விசேடத்தினாலே உருத்திரர், மந்திரேசுரர், வித்தியேசுரர் பதங்களிலே அடைவிப்பன் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் சிந்தியம், விசுவம் என்பனவற்றாலும் அறிக.*

*"விஞ்ஞானர் நால்வரும் மெய்ப்பிரள யாகலத்*
*தஞ்ஞானர் மூவரும் தங்கும் சகலத்துள்*
*அஞ்ஞானர் மூவரும் ஆகும் பதின்மராம்*
*விஞ்ஞானர் ஆதியர் வேற்றுமை தானே"*

—திருமந்திரம் - 493.

என மூவிதமாகிய ஆன்மபேதங்கள் இப்படிக் கண்டு கொள்க. இம் மூவகையர் விதமும் விரிக்கிற்பெருகும்; ஆகமத்திற் காண்க.

[இது பொழிப்பு; மேல் அகலம: அவையாவன :

விஞ்ஞானகலத்துவ சித்தி எக்காரணத்தால்? என்னில், ஆசாரியனாலே தீக்கையில் கலாதத்துவம் அளவாகக் கனமங்களைச் சோதிக்கபபடுகையால் தான் மாயையினுடையவும், ஆன்மாவுடையவும் வியாபாரங்களைப் பிறித்தறிகின்ற ஞானத்தினாலே தான் அந்த ஆதாரயோக தியானநியிற்றுன் மிகுந்த தபசினுடைய சித்தியினாலேதான் சந்நியாச அநுட்டானத்தால்தான் எல்லாக் கன்மங்களும் நசிக்க, அதற்கு ஆதனமாயிருக்கிற மாயையும் இன்றி ஆணவமலம் ஒன்றும சேட்டித்து நிற்கையினால் உண்டான பெயர் என அறிக.

பிரளயாகலசித்தி எக்காரணத்தால்? என்னில், ஆசாரியனால் நிக்கிரான சகலர் பிரகிருதியையும் ஆன்மாவையும் உள்ளபடி அறிந்த ஞானத்தினாலே அந்தப் பிரகிருதியினின்று முத்தனாய்ச் சிருட்டிகாலத்தில் பிராகிருத தேகத்தை எடாமல் மாயேய மாகிய சரீரத்தைப் பொருந்தி அதில் உண்டான கன்மமலங்களை அந்தந்தப் புவனங்களில் புசித்துத் தீர்க்கையால் குணதத்துவத்துக்குமேல் உண்டான கன்மமும் ஆணவமுமாக இரண்டுடனும் கூடினவர்கள் ஆகையினால் உண்டாகிய பெயர் என அறிக.

சகலத்துவசித்திக்குக் காரணம் யாது? என்னில், ஆணவம் முதலிய மூன்று பாசத்துடனும் கூடி-

ஆணவத்தால் தடுக்கப்பட்ட ஞானக்கிரியைகளை உடையராய் மாயையினாலே மோகித்து நானாவிதமான கன்மங்களைப் புசித்து அதனைப் புசிக்கிறகாலத்தில் ஆகாமியம் ஏறி அதனைச் சஞ்சிதமாகக் கட்டுப்பட்டு அதனைப் புசித்துத் தொலைக்கை காரணமாகப் புரியட்டகரூபியாய்ப் பிராகிருதமான வடிவை எடுத்து அதில் உண்டான போகங்களைப் புசிக்கிறவன் ஆகையால் உண்டாகிய பெயர் என அறிக.

முற்கூறிய விஞ்ஞானகலர் அபக்குவர் பக்குவர் என இருவகையராம். அபக்குவமாவது - ஆமம்: அஃதாவது நெல் முதலிய தானியங்கள். பக்குவமாவது - புசிக்கப்படுவது; அஃதாவது சோறு கறி முதலானவைகள்.

இத்தன்மைபோல ஆன்மாக்கள் சங்காரத்துக்குக் காரணம் ஆகிய மலமும பக்குவம் எனவும் அபக்குவம் எனவும் இருவிதப்படும். ஆதலால், விஞ்ஞானகலர் பக்குவமலர் அபக்குவமலர் என இருவகையர்.

இதில் பக்குவமலர் ஆவார் மலபரிபாக மிகுதியாலே சிவனாலே அநுக்கிரகம் பெற்றுச் சாயுச்சியத்தை அடையுமவர். அபக்குவமலராவார் மலபரிபாக மாந்தியத்தாலே சிவன் அவர்களுடைய ஞானக்கிரியைகளை விளக்கி அநுக்கிரகம் செய்யப்பட்டிருக்கையினும் சுத்தாத்துவாவுக்கு அதிகாரிகள் ஆகையால் அதிகாரமலத்தைப் பொருந்தியிருப்பார்கள்.

இந்த அபரமுத்தி பெற்றவர்கள் யாவர்? என்னில், உத்தமராகிய **பிரணவர், சுதர், சுதீப்தர்,**

காரணர், சுசிவர், ஈசர், சூக்குமர், காலர், அம்பு, தசேசர் எனக் கூறிய அணுசதாசிவர் பதின்மரும், அதோமாயா புவனத்துள்ளார்க்குப் பக்குவம் வந்த இடத்து அநுக்கிரகம் செய்து சதாசிவதத்துவத்தில் போகங்களைப் புசித்து அந்த மூர்த்தியைச் சூழச் சேவித்துக் கொண்டிருப்பவர்கள். இவர்களுக்குப் போகத்தில் வைராக்கியம் பிறந்தால் அப்பொழுது சிவன் பிரசன்னராகி மேலான பதத்தை அடைவார்கள்.

இனி, மத்திமராகிய அட்டவித்தியேசுவரர் ஆவார் அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, சீகண்டர், சீகண்டி இவ்வெண்மரும் ஈசுரதத்துவத்தில் இருக்கும் ஈசுரனைச் சூழ்ந்திருந்து மாயையில் கீழ் உண்டாகிய சிருட்டியாதி கிருத்தியங்களைச் சிவனது ஏவலால் செய்பவர்கள்.

இவர்களுக்குப் படைப்பு முதலிய தொழில்கள் எக்காரணத்தால்? என்னின், சாந்த மூர்த்தியாயிருக்கிற சதாசிவர் இவர்கள் எண்மரையும் தமது சரீரத்தினின்றும் தோற்றுவிக்கையால் உண்டானது என அறிக.

ஆனால், இவர்கள் எண்மரும் தம்மில் ஒக்குமோ? என்னில், அநந்ததேவநாயனாரைப் பற்ற மற்றவர்களுக்கெல்லாம் ஒவ்வொரு கலை அடைவே குறைந்து குறைந்து வருதலால் உத்தரோத்தரம் ஒருவர்க்கொருவர் விசிட்டர் என அறிக.

முந்தின அநந்ததேவ நாயனாருக்கு அதிகாரத்தில் வைராக்கியம் பிறந்தால் அவரைச் சிவன் சங்கார காலத்திலே மோட்சத்தை அடைவிப்பன். அதன்பின்

அவர்க்கு அடுத்த ருக்குமர் அவ்வதிகாரத்தைப் பெற்றுக் கிருத்தியங்களை அவரைப்போலச் செய்வர். மற்றவர்களும் இவ்வாறு அடைவே அதிகாரத்தைப் பண்ணுவார்கள். எல்லாருக்கும் பிந்திய சிகண்டருடைய பதம் பாழ்கிடவாமல் சிவன் விஞ்ஞானகலரில் பக்குவம் உண்டானபேரில் ஒருவரை அடைவே எண்மரில் குறையாமல் கூட்டுவர்.

இதற்குப் பௌட்கரம், வாயவ்வியம், சுவச்சந்தம், இரத்தினத்திரயம், இரௌரவம், சர்வஞானோத்தரம், மதங்காகமம் என அறிக.

இனி, அதமராகிய சத்தகோடி மகாமந்திரங்களின் மூன்றரைக்கோடிபேரை மலபரிபாக மிகுதியாலே கீழ் உள்ள கிருத்தியங்களிலும் மேல் உள்ள போகத்திலும் வைராக்கியம் பிறந்து வெறுப்பு உண்டாகையால் விஞ்ஞானகலர் விடயமாகவும் மாயா கர்பபாதிகாரிகள் விடயமாகவும் சிவன் நிரதிகரணமாகத் தீக்கைபண்ணுதற்குக் காரணமாகப் பண்ணி அவர்களை மகாப்பிரளயத்திலே முத்தியை அடைவிப்பர்.

மற்ற மூன்றரைக்கோடிபேரையும் சிவன் அசுத்தமாயையில் உதிக்கும் தூலகாரியங்களுக்குக் கர்த்தாவாக்கிச் சுத்தவித்தையில் உண்டான போகங்களைப் புசிப்பித்துத் திதி காலத்தில் சகலர் நிமித்தமாக ஆசாரியரை அதிட்டித்துக்கொண்டு அநுக்கிரகம் செய்யும் கனமத்துக்கான பூதமாக இருந்து மகாப் பிரளயத்திலே முத்தியை அடைவிப்பர்.

அபக்குவரான விஞ்ஞானகேவலர்கள் ஆவார் யாவர்? என்னில், ஆணவமிகுதியால் அளவற்ற ஆன்மாக்கள் ஞானக்கிரியைகள் மிகவும் மறைப்புண்டு மலபரிபாகம் வருமளவும் சுத்தவித்தைக்குக் கீழாக மாயைக்கு மேலாக நடுவே நெடுங்காலம் கேவலத்தைப் பொருந்திக் கிடக்கையால் முத்தான்மாக்கள் எனப் பெறுதல் விஞ்ஞானகேவலர் எனப் பெயர் பெற்றிருப்பார்கள். ஆதலால், விஞ்ஞானகலர் நால் வகையர் என அறிக.

இதற்குப்பிரமாணம் **மிருகேந்திரம், காமிகம்** என அறிக.

இனி, பிரளயாகலர் பக்குவமலர், அபக்குவமலர் என இருவகையாம்.

பக்குவமலர் யாவர்? எனின், மலபரிபாக மிகுதி யாலே சிலருக்கு எல்லாக் கன்மமும பக்குவமாய் உள்ள அளவில் சிவன் தீவிரம் தீவிரதரம் என்னும் சத்தியைப் பதித்து நிரதிகார தீக்கையால் திருக்கண் சாத்தி அவர்கள் பாசத்தைச் சேதித்து அவர்கள் ஞானக்கிரியைகளைப் பிரகாசிப்பித்து மோட்சத்தை அடைவிப்பன்.

மற்ற அபக்குவரைக் கன்மானு குணமாகப் போகத்தைப் புசித்துத் தொலைக்கையின்பொருட்டுப் புரியட்டகத்தைப் புவனசங்கேதமாகிய யோனிகள் தோறும் பிறந்து உழன்று திரிந்து மல கன்மங்கள் பரிபாகமானவாறே சிவன் சத்தியைப் பதித்து அவர் கள் அறிவை விளக்கி மோட்சத்தை அடைவிப்பர்.

புரியட்டகத்துடனே கூடினவர்களுள் சிலரை அநந்ததேவநாயனார் அப்புதத்துவத்தில் அமரேசர் ஆதியாகிய புவனத்திலிருக்கும் குய்யாட்டகராகிய எண்மருக்கும், தேயுவில் அரிச்சந்திராதி புவனத்தி லிருக்கும் அதிகுய்யாட்டகருக்கும், வாயுவில் தெலைய யாதியாகிய குய்யாத்குய்யாட்டகருக்கும், ஆகாயத் தில் வத்திர பதாதிபராகிய பவித்திராட்டகருக்கும் அகங்காரத்தில் சகலண்டாதியாகிய தாணுவட்டக ருக்குமாகப் புவனாதிபர்கள் நாற்பத்தின்மரையும் இவர் களை அடைவே அதிபராக்கி யோசியாநிற்பர்.

முற் கூறினவர்கள் அன்றி, சேடித்துள்ளாருள் சிலர் செய்த கன்மத்தாலே பிரளயாகலராய் இருந்தார் களே ஆயினும் அவர்களுக்கு மலபரிபாகம் வாராத படியாலே அநந்ததேவநாயனார் மாயா கர்ப்பாதிகாரி களாக கலா மத்தியத்தில் இருக்கும் ககேசர் முதலிய எண்மரையும், குணதத்துவத்தில் இருக்கும் குரோதர் முதலிய எண்மரையும், நூறு உருத்திரருக் கும் அதிட்டாதாவாய்ச் சூக்கும பிரகிருதியிலிருக்கும் வீரபத்திரரும், குணதத்துவத்தில் இருக்கும் சீகண்ட பரமேசுரன் அதற்குக் கீழ்ப்பட்ட புவனங்களுக்கும், பிரமா முதலாயினருக்கும், பிரமாண்டத்தராகிய கபாலீசுவரர் முதலிய உருத்திரர்கள் நூற்றுவருமாக நூற்றிருபத்தெண்மரையும் கர்த்தராக யோசியா நிற்பர்.

ஆகப் பிரளயாகலர் மூவகையர் என அறிக.

இவர்கள் சிருட்டி காலத்தில் அதிகார பாசத்த தாலே கலாதிகளுடனே கூடி பந்தப்படினும் கலாதி களால் சகலரைப்போல வசியரல்லர். அந்த

என்போல? என்னில், பாம்பின் கண்டத்தில் விடம் இருக்கினும் அது அதனை வாதியாதவாறு போல இவர்களும் அதனால் வாதையுறார்கள் என அறிக.

இதற்குச் சிந்தியத்தும், விசுவத்தும், மிருகேந்திரத்தும், கிரணத்தும் அறிக.

சகலராவார் யாவர்? என்னில், தேவர்கள், இருடிகள், மானுடர் முதலாயினர் என அறிக. அவர்கள் அதிபக்குவர், மந்தபக்குவர், அபக்குவர் என மூவகையர்.

அதிபக்குவராகிய தேவர்கள் தானவர்கள் முதலாயினரைச் சிவன் தீவிரம் முதலிய நால்வகைச் சத்தியைப் பதித்துத் திவ்வியமான திருமேனியை அதிட்டித்துக்கொண்டு, அவர்கள் பாசத்தைச் சேதித்து, அவர்கள் ஞானக் கிரியைகளை விளக்கி, திதிகாலம் முடியுமளவும் சுத்தாத்துவாவில் போகங்களைப் புசித்திருந்து மகாசங்காரத்திலே மோட்சத்தை அடைவிப்பர்.

தேவர்கள் முதல் என்பதனால் எறும்பு ஈருக என அறிக.

சிவன் மந்தமலபாகராய் உள்ள வைநயிகர் முதலாயினரை மந்தம் மந்ததரம் என்று சொல்லப்பட்ட சத்தியைப் பதித்து, ஆசாரியனை அதிட்டித்து, அவர்களுக்கு அனுகுணமான தீக்கையைச் செய்து, அவர்கள் யாதொரு பதத்திலே இருந்து போகம் புசிக்க விரும்பினார்கள் அந்த அந்தப பதத்திலே யோசியாநிற்பர்.

.. மலபரிபாகம் வாராத அபக்குவரை அவரவர்கள் செய்த கன்மத்துக்கு ஈடாகப் புவன சரீரத்தை எடுப்பித்துப் போகங்களைப் புசித்துத் தொலைந்த வாறே மலபரிபாகம் பிறப்பித்து ஆசாரியன் தீக்கை யைப் பண்ணி மோட்சத்தை அடைவிப்பன்.

இதற்குக் காமிகம் - பக்தானுக்கிரக படலத்தும், மிருகேந்திரத்தும், சூக்குமத்தும், சுவாயம்புவத்தும், சிந்தியத்தும், விசுவத்தும் அறிக.

" இமையார் இமைப்பவர் ஆகும் சகலர் "

என்னும் திருவாக்கிலும்,

" மும்மலங் கூடி முயங்கி மயங்குவோர்
அம்மெய்ச் சகலத்தார் தேவர் சுரர்நரர்
மெய்ம்மையில் வேதா விரிமிகு கீடாந்தத்
தம்முறை யோனிபுக் கார்க்கும் சகலரே."

—திருமந்திரம் - **2244.**

எனவும் அறிக.

இம்மூவரையும் தொகுத்தறியில் பதின்மர் என அறிக.

" விஞ்ஞானர் நால்வரும் மெய்ப்பிரள யாகலத்
தஞ்ஞானர் மூவரும் தாங்கும் சகலத்தின்
அஞ்ஞானர் மூவரும் ஆகும் பதின்மராம்
விஞ்ஞானர் ஆதியர் வேற்றுமை தானே."

—திருமந்திரம் - **493.**]

பகுதி அச்சிட்டபுத்தகத்தில்மட்டும் உள்ளது.

2. நிரம்பவழகியர் :

அ - கை : முன்னே சொல்லப்பட்ட ஆன்ம வர்க்கம் மூன்றுவகைப்பட்டிருக்கும் என்று அருளிச் செய்கின்றார்.

_ - ள் : உரைதரும் இ பசுவர்க்கம் மூன்று ஆம் - திவ்வியாகமங்களில் சொல்லப்பட்ட இந்த ஆன்மவர்க்கத்தை விசாரிக்கில் மூன்றுவகைப் பட்டிருக்கும்.—

அவையாவன,

உயரும் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் - மேலான விஞ்ஞானகலர் என்றும் பிரளயாகலர் என்றும் சகலர் என்றும்.—

நிரையின் மலம் மலம்கன்மம் மலம் கன்மம் மாயைநிற்கும் - இந்த அடைவிலே விஞ்ஞானகலர்க்கு ஆணவமலம் ஒன்றும், பிரளயாகலர்க்கு ஆணவ மலமும் கன்மமலமும் ஆக இரண்டும், சகலர்க்கு ஆணவமலமும் மாயாமலமும் கன்மமலமும் ஆக மூன்று மலமும் இவை அநாதியே உள்ளதாய் நிற்கும்.—

முதல் இருவர்க்கும் - முற்பட்ட ஞான கலரில் பிரளயாகலரில் பக்குவராய் உள்ள வகைக்கும்.—

நிராதாரம் ஆகி கரை இல் அருள் பரன் சந்நிபாதத்தால் கழிப்பன் மலம் - எல்லையில்லாத அநுக்கிரகத்தையுடைய பரமேசுவரன் அவர்களுக்குப்

பிராணனுய் நின்ற முறைமையிலே தீவிரம் தீவிர தரம் என்று சொல்லப்பட்ட இரண்டு சத்திநிபாதத் தாலும் மலங்களைப்போக்கி ஞானத்தைப் பிரகாசிப் பிப்பன்,—

சகலர்க்கு - சகலரில் பக்குவராயுள்ளவர்களுக்கு,—

கன்ம ஒப்பில் - புண்ணிய பாவங்கள் இரண்டும் தன்னில் ஏருமல் குறையாமல் இரண்டும் ஒத்த அவதரத்திலே,—

தரையில் ஆசான்மூர்த்தி ஆதாரம் ஆகி தரித்து ஒழிப்பன் மலம் - பூமியிலே ஆசாரியமூர்த்தியிலே அதிட்டித்துக்கொண்டு நின்று மலங்களைப் போக்கி ஞானத்தைப் பிரகாசிப்பிப்பன்,—

சதுர்த்தா சத்திநிபாதத்து ஆல் - மந்தம், மந்த தரம், தீவிரம், தீவிரதரம் என்று சொல்லப்பட்ட நாலுவகைச் சத்திநிபாதத்தானும் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம :*

*" மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்*
*கஞ்ஞான அச்சகலர்க் கக்குருவாய் - மெய்ஞ்ஞானம்*
*பின்னுணர்த்தும் அன்றிப் பிரளயா கலருக்கு*
*முன்னுணர்த்தும் தான்குருவாய் முன். "*

*—சிவஞானபோதம்: சூத் - 8, வெண்பா - 3.*

*என்னுமதும் கண்டுகொள்க.*

*இதனல் சொல்லியது, பரமேசுவரன் மூவகை ஆன்மவர்க்கத்தில் விஞ்ஞானகலர் பிரளயாகலரில் பக்குவராய் உள்ளவர்களுக்கு நிராதாரமாய் நின்று*

*தீவிரம் தீவிரதரம் எனகிற சத்திநிபாதத்தாலே மலங்களைப்போக்கி இரட்சிப்பன் என்றும, சகலரில் பக்குவராய் உள்ளவர்களுக்குக் கன்மவொப்பில் பூமியிலே ஆசாரியமூர்த்தியை அதிட்டித்து நின்று மந்தம் மந்ததரம தீவிரம் தீவிரதரம் என்கிற நாலு வகைச் சத்திநிபாதத்தாலும் இரட்சிப்பன் என்னும் முறைமையும் அறிவித்தது.* (உ)

செய்யுள்—254

**பலவிதம்ஆ சான்பாச மோசனந்தான் பண்ணும்**
**பரிசநயனத் தருள்பரிசம் வாசகமா னதமும்**
**அலகில்சாத் திரம்யோகம் அவுத் திராதி**
**அநேகமுள அவற்றினவுத் திரிஇரண்டு திறனும்**
**இலகுஞா னம்கிரியை எனஞானம் மனத்தால்**
**இயற்றுவது கிரியைஎழில் குண்டமண்ட லாதி**
**நிலவுவித்துச் செய்தல்கிரி யாவதிதான் இன்னும்**
**நிர்ப்பீசம் சபீசமென இரண்டாகி நிகழும்.**

**1.** மறைஞானசம்பந்தர் :

சகலர்க்கு ஆசாரியர் பண்ணும் தீட்சாபேதம் உணர்த்துகின்றார்.

**என்பது:** பலவிதம் ஆசான் பாச மோசனம் தான் பண்ணும்படி - ஆன்மாக்கட்கு ஆசாரியன் பாசச்சேதனம் பண்ணும் தீட்சை பலபிரகாரமாய் இருக்கும்,—

*அஃது எவ்வாறு? என்னில், சாதிபேதத்தானும், பாகதாரதம்மியத்தானும் என்க. அவையாவன:*

ஆசாரியன் மாணுக்கனது இதயகமலத்தில் நாடி சந்தான மார்க்கத்திலே பிரவேசித்து அவ்விதயத்தின் நடுவே விந்து ரூபமாக இருக்கின்ற ஆன்மாவைச் சுழுமுனுநாடி வழியாலே பிரமரந்திரம் அளவாகக் கொண்டு போந்து அகண்ட பரிபூரணமாகிய சோதி மயமான சிவரூபத்திலே யோசித்து அநுக்கிரகம் பண்ணுகை யோகதீட்சை என அறிக.

*இவ் ஆறுவகையினையும் இம்முறை அறிக.*

*இவ்விதம் வருணபத்ததியினும் சாற்றியது என அறிக.*

*'' அந்நியர்க்குப் பாசம் அறுத்திடுக பார்வையினல்*
*தன்னதுகை வைத்தும் தலை ''*

*—சைவசமயநெறி - 65.*

*எனவும் அறிக.*

அவற்றுள் அவுத்திரி இரண்டு திறன் ஆம் இலகு ஞானம் கிரியை என - இங்ஙனம் சொன்ன தீட்சைகளுக்குள்ளே அவுத்திரிதீட்சையை விசாரித்தறியில் ஞானவதி என்றும் கிரியாவதி என்றும் இரண்டுவிதமாய் இருக்கும்; அவையாவன,—

ஞானம் மனத்தால் இயற்றுவது - அந்த ஞானவதியாவது தீவிரம் தீவிரதரம் என்னும் சத்திநிபாதத்தையுடைய அதிபரிபாகராகிய நன் மாணுக்கருக்கு அவ்விதிப்படி சிவஞானம் என்னும் திவ்விய சட்சுவினுலே பதியாதி திரிபதார்த்தங்களையும் தெரிசிக்கப்பட்டிருக்கிற ஞாஞசாரியன் அவ்விதிப்படி மனேவியாபாரத்தால் அந்தரியாகமாகப் பண்ணப்பட்ட சாம்பவதீட்சையாயின் முற்கூறிய மானத

தீட்சைக்கும் இதற்கும் பேதம் யாது ? எனில், சாமா னியம் விசேடம் என இருவிதமாய் இருக்கும். முற் கூறினது சாமானியம். அவுத்திரியில் ஈண்டுக்கூறினது விசேடம் ஆதலால் பேதம் என அறிக.—

*இதற்குக் காமிகம், சிந்தியம், விசுவசாதாக்கியம் இவற்றில் விரித்துக்கூறினமை ஆண்டுக்காண்க.*

கிரியை எழில் குண்டம் மண்டலாதி நிலவுவித்து செய்தல் - கிரியாவதிதீட்சையாவது அழகுபொருந்திய குண்டம் மண்டலம் முதலானவைகளை இட்டு மந்தம் மந்ததரம் ஆகிய சத்திநிபாதம் உடைய மாணுக்கர்க்கு ஆசாரியன் கிரியை பொருந்தச்செய்வது எனப் பெறும்.—

கிரியாவதிதான் நிர்ப்பீசம் சபீசம் என இரண்டு ஆகி நிகழும் - எனமும் அந்தக் கிரியா வதியின் விதியை விசாரிக்கில் பலவாயினும் முதற்கண் நிர்ப்பீசம் எனவும், சபீசம் எனவும் இரண்டுவிதமாக விளங்காநிற்கும் என்றவாறு.

*நிர்ப்பீசமாவது - சமயாசார அநுட்டானங்கள் விடப்பட்டிருப்பது என்றும், சபீசமாவது - அவைக ளுடன்கூடி அநுட்டிக்கப்படுவது என்றும் அறிக. அருள் என்பதை எவ்விடத்தும் கூட்டுக.*

*இவை வருணபத்ததியிற் காண்க.*

**2. நிரம்பவழகியர் :**

**அ - கை :** சிவன் ஆசாரிய மூர்த்தியை அதிட் டித்துக்கொண்டு நின்று சகலருடைய பாசத்தைப்

போக்குகிற முறைமை பலபிரகாரமாயிருக்கும் என்று அருளிச்செய்கின்றார்.

இ - ள்: பலவிதம் ஆசான் பாச மோசனம் பண்ணும்படி - சகலருடைய பாசத்தை ஆசாரியன் மோசனம்பண்ணும்படி பல பிரகாரமாயிருக்கும்; அவையாவன,—

நயனத்து அருள் பரிசம் வாசகம் மானதமும் அலகு இல் சாத்திரம் யோகம் அவுத்திரி ஆதி அநேகம் உள - தனது காருண்ணியத்தினாலே திருக்கண் சாத்தியும் சீபாதங்கள் பரிசித்தும் உபதேசித்தும் தன்னைப் போல நின்மலனாகப் பாவித்து எண்ணிறந்த நூலுரை காட்டியும் பொருளோடு கூட்டியும் குண்ட மண்டல மிட்டுச் செய்யும் தீட்சைமுதலாக அநேகம் உண்டு.—

அவற்றில் அவுத்திரி இரண்டு ஆம் அறியில் - அவையிற்றை விசாரித்துப்பார்க்கில் அவுத்திரி என்கிற தீட்சை இரண்டுவகைப்பட்டிருக்கும்.—

இலகு ஞானம் கிரியை எனும் - விளங்காநின்ற ஞானவதி என்றும், கிரியாவதி என்றும் சொல்லும்.—

*அஃது எங்ஙனே? என்னில்,*

ஞானம் மனத்தால் இயற்றுவது - ஞானவதி யாவது ஆசாரியன் தன்னுடைய மனோபாவகத்தினாலே மலங்களைப்போக்கி இவனுக்குப் பிராணனாய் நின்ற சிவன் தன்னைப் பிரகாசிப்பித்து.—

கிரியை எழில் குண்டம் மண்டலம் ஆதி நிலவு வித்துச் செய்தல் - கிரியாவதியாவது அழகிய குண்ட மண்டலங்களை இட்டு விளங்கச்செய்தல்.—

கிரியாவதி தான் இன்னும் நிர்ப்பீசம் சபீசம் என இரண்டு ஆகி நிகழும் - கிரியாவதியாவது இன்னமும் நிர்ப்பீசம் என்றும் சபீசம் என்றும் இரண்டாய் விளங்காநிற்கும் என்றவாறு.

*இதனால் சொல்லியது சிவன் ஆசாரியமூர்த்தியாக எழுந்தருளிச் சகலர்க்குப் பாசமோசனம் பண்ணுகிறமுறைமை பல பிரகாரமாய் இருக்கும் என்றும், இவர்களுக்குச் சமயம் விசேடம் நிருவாணம் என்கிற திட்சைகள் செய்யுமிடத்துக் கிரியாவதியாகவும் ஞானவதியாகவும் செய்யலாம் என்றும், கிரியாவதிதான் மேலும் நிர்ப்பீசம் என்றும் சபீசம் என்றும் இரண்டு வகையாயிருக்கும் என்றும் முறைமையும் அறிவித்தது.* (ந)

செய்யுள்—255

பாலரொடு வலியர் விருத்தர்பணி மொழியார்
　　பலபோகத் தவர்வியாதிப் பட்டவர்க்குப் பண்ணும்
சீலமது நிர்ப்பீசம் சமயாசாரம்
　　திகழ்சத்தி சமயபுத் திரர்க்கு நித்தத்(து)
வழுவாதி காரத்தை இயற்றித் தானும்
　　எழில்நிதி காரையெனா நின்றிரண்டாய் விளங்கும்
சாலநிகழ் தேகபா தத்தி னோடு
　　சத்தியா நிர்வாணமெனச் சாற்றுங் காலே.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் நிர்ப்பீச திட்சை யானது நிரதிகாரமாய் ருக்கும் என்பதும், அது

சத்தியோநிருவாணம் அசத்தியோநிருவாணம் என்று இருவிதப்படும் என்பதும், நிர்ப்பீச தீட்சைக்குரியர் இன்னார் என்றும் உணர்த்துகின்றார்.

**என்பது:** பாலரொடு வாலீசர் விருத்தர் பணி மொழியார் பல போகத்தவர் வியாதிப்பட்டவர்க்கு பண்ணும் சீலம் அது நிர்ப்பீசம் - மூன்று வயதுக்கு மேல் பதினாறு வயதளவும் உடைய பாலர்க்கும் கன்மம் அநுட்டிக்கும் அறிவு இல்லாதிருக்கும் வாலீசர்க்கும் எண்பது வயதுக்கு மேற்பட்ட விருத்தருக்கும் ஸ்திரீகளுக்கும் மிகுந்த போக இச்சகராகிய இராசாக்கட்கும் வியாதியினால் வருத்தமுற்றவருக்கும் சரீராந்தம் அநுட்டிக்கக் கடவதாகிய சமயாசாரங்களை ஆசாரியர் தீட்சை பண்ணும்காலத்தில் குண்டத்தில் அக்கினியிலே நந்தியாதி சண்டாந்தமான எட்டுக் கணங்களையும் பூசித்துச் சுவாகாந்தமான தந்தம் மந்திரங்களினால் ஒவ்வொருகால் ஓமம்பண்ணி சமயா சாரசோதனை நிமித்தமாக மூலத்தினால் ஐந்நூறு ஆகுதி பூரணாகுதி அந்தமாகப்பண்ணி, பராங்முக அருக்கியம் கொடுத்து, மாணாக்கனுடைய சமயாசார பாசத்தை வித்தியேசுரர் முதலாயினாராலே பாசசுத்தி செய்வது நிர்ப்பீசதீட்சை எனப்பெறும்.—

*இத்திக்கை பெறுதற்கு உரியர் யாவர்? எனில்,*

சமயாசாரம் திகழ் சுத்தி சமயி புத்திரர்க்கு - விளங் கப்பட்ட சமயாசாரசுத்தியென்னும் நிர்ப்பீசதீட்சை சமயிக்கும் புத்திரர்க்குமே.—

*இவர்கள் எந்தக்கிருத்தியங்களில் ஏவப்படுவார்? என்னில்,*

நித்தத்து ஏலும் அதிகாரத்தை இயற்றி தானும் எழில் நிரநிகாரை என - "புனன்மூழ்கித் தர்ப்பித் தமல னடி பூசித் தனலோம்பல் ஆநிநித்தியம்" (சைவசமய நெறி - 55) என்பதனுள் சமயிக்குப் புனல் மூழ்கித் தர்ப்பணமும் புத்திரனுக்கு அஃதுடன் கூடின பூசை செயமும் மூன்றிற்கும் உரிமையாக இருவருக்கும் பிரித்துக் கற்பித்து. இவ்விருவருக்கும் விதித்த சமயா சார அநுட்டானமாகிய நித்திய கன்மங்களை இயன்ற மாத்திரம்பண்ணி, நைமித்திகத்துக்கு அதிகாரம் இல் லாதபடியினலே நிரநிகாரை எனப் பேர்பெற்று நிற்கும்.—

நின்று இரண்டு ஆய் விளங்கும் சால நிகழ் தேக பாதத்தினேடு சத்திய நிர்வாணம் என சாற்றும் கால் ஏ - (சாற்றுங்கால் சாலநிகழ் தேக பாதத்தினேடு சத்திய நிர்வாணம் என நின்று இரண்டு ஆய் விளங்கும் எனக் கூட்டுக) இந்த நிர்ப்பீச தீட்சையைச் சொல்லு மிடத்து மிகவும் விளங்காநின்ற சத்தியோநிருவாணம் என்றும் அசத்தியோநிருவாணம் என்றும் இரண்டாக விளங்கும் என்றவாறு.

*சத்தியோ நிருவாணத்துக்கு அதிகாரி யாவர்? எனின், தேகாதி பிரபஞ்சங்களைக் கான்ற சோறு எனவும் தேகம் பரிக்கிறதிலே புழுத்த நாயைக் கழுத்தில் கட்டுண்டவனைப்போல வெறுத்து அவ் வுடம்பைக் காணுந்தோறும் ஐந்தலை நாகத்தைக் கண்டதுபோலப் பயமுற்று விரத்தராகிய பக்குவ ருக்குச் சஞ்சிதம் பிராரத்தம் ஆகாமியங்களாகிய கன்மசாலங்களைத் தீக்கையினலே சோதனைபண்ணி, முடிந்தவாறே சரீரபதனமாய் மோட்சத்தை அடை விப்பது சத்தியோநிருவாண தீக்கை. சஞ்சித ஆகாமிய*

*கன்மங்களைச் சோதித்து நிகழ்காலத்திலே பிராரத்த கன்மத்தைப் போகம் புசிக்கையின்பொருட்டுவைத்து அதிபக்குவமில்லாத பாலர் வாலீசர் முதலாயினருக்குத தீக்கைபண்ணி, பிராரத்தம் புசித்துத்தொலைந்த வாறே சரீர அந்தியத்திலே மோட்சத்தை அடை விப்பது அசத்தியோநிருவாணம் என அறிக.*

*இதற்குப் பிரமாணம் கிரணம், சித்தாந்தம் முதல*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** மேல் நிர்ப்பீச தீட்சை இன்னருக்கு என்றும், நிரதிகாரை அதிகாரையின் முறைமையும், சத்தியோ நிருவாணம் அசத்தியோ நிருவாணத்தின் முறைமையும் அருளிச்செய்கின்றார்.

**இ - ள் :** பாலரொடு வாலீசர் விருத்தர் பணி மொழியார் பல போகத்தவர் வியாதிப்பட்டவர்க்கு பண்ணும் சீலம் அது நிர்ப்பீசம் - சிறுபிள்ளைகளுக்கும் அவர்களோடு அயோக்கியர்க்கும், வயோதிகர்க்கும், ஸ்திரீகளுக்கும், வெகுவிதமான புசிப்புக்களை இச்சித்தவர்களுக்கும், வாத பித்த சிலேத்துமம் முதலான வியாதிகளினாலே துக்கப்படுகிறவர்களுக்கும் செய்கிற தீட்சையினுடைய முறைமை பீசம் கூடாமல் இருக்கிற தீட்சையாம்,—

சமய ஆசாரம் திகழ் சுத்தி சமயி புத்திரர்க்கு - சமயாசாரங்கள் விளங்காநின்ற சமய தீட்சையிலும் விசேடதீட்சையிலும் நின்றவர்களுக்கு,—

நித்தத்து ஏனும் அதிகாரத்தை இயற்றி - பொருந் தப்பட்ட நித்தியமான அதிகாரத்தைக்கற்பிக்கிறது.—

*அதுதான் ஏது? என்னில்,*

தானும் எழில் நிரதிகாரை என நின்று இரண்டாய் விளங்கும் - அதுதானும் அழகிய நிரதிகாரை என்றும் இது ஒழிந்து அதிகாரை என்றும் இரண்டாய் விளங்கா நிற்கும்; இன்னமும்,—

சால நிகழ் தேகபாதத்திேைடு சத்திய நிருவாணம் என சாற்றும் கால் ஏ - மிகவும் விளங்காநின்ற நிருவா ணம் இரண்டு வகைப்பட்டிருக்கும்; அது எங்ஙனே? என்னில், தீட்சை செய்தவுடனே சரீரத்தைக் கமன மாக்குகிறது சத்தியோநிருவாணம் என்றும், தீட்சை செய்த பின்பு சிலநாள் சரீரமிருந்து அந்தத்திலே முத்தியைக் கொடுக்கிறது அசத்தியோ நிருவாணம் என்றும் சொல்லப்படும் என்றவாறு.

*இதனால் சொல்லியது பாலராய் உள்ளவர்கள் முதல் வியாதியத்தர் ஈறாய் உள்ளவர்களுக்குச் செய்கிற முறைமை நிர்ப்பிச தீட்சை என்றும், சமய தீட்சை உடையவனுக்கும் விசேடதீட்சை உடையவ னுக்கும் அதற்குத் தக்க நித்திய கன்மங்களைக் கற்பிக்குமது நிரதிகாரை என்றும், விளங்கா நின்ற நிர்வாணம் இரண்டுவகைப் பட்டிருக்கும் என்றும், அவையாவன தீட்சை செய்தவுடனே சரீரத்தைக் கமனமாக்குகிறது சத்தியோ நிர்வாணம் என்றும், தீட்சை செய்த பின்பு சரீரம் சிலநாள் இருந்து தேகாந் தத்திலே முத்தியைக் கொடுக்கிறது அசத்தியோ நிருவாணம் என்னும்முறைமையும் அறிவித்தது (௪)*

*தரம் அபிமந்திரிதமாய் ஞானசத்தி சொரூபமாகிய கத்தரிகையைக்கொண்டு பிரமரந்திரத்துக்கு மேலே பன்னிரண்டு அங்குலமுடைய சிகையில் சத்தி வியாபினி சமனை உன்மனை இதற்குமேல் சிவம் வியாபித்திருக்கையால் அடியில் எட்டங்குலம்விட்டு ஆணவமாக் கருக்கு ஞானக் கிரியைகளைத் திரோதமபண்ணும் திரோதானசத்தி சொரூபமாயிருக்கிற மேல் நாலங்குலமுடைய சிகையை அத்திரத்தினாலே சேதித்துச் செய்யும தீக்கை சிவதருமிணி எனப்பெறும்.*

ஆனதினால் அதிகாரை ஆம் - ஆகையினால் அந்தச் சபீசதீட்சை சாதிகாரை எனப் பேர்பெறும்.—

சமயம் விசேடம் நிருவாணம் அபிடேகம் இவற்று அடங்கும் அன்று ஏ - இங்ஙனம் கூறிய நிர்ப்பீசத்தில் சமய விசேடதீட்சையும். சபீசத்தில் நிருவாண தீட்சையும் அபிடேகமும் அடங்கும் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் சுவச்சந்தம், வாதுளம், காமிகம், வருணபத்ததி, சட்சகத்திரம், ஞானரத்நாவலி, நிச்சுவாசம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** முன் சொன்ன நிர்ப்பீசம் சபீசம் என்ற இரண்டில் நிர்ப்பீசம் அருளிச்செய்து, மேல் சபீசதீட்சையின் முறைமையும், உலோகதருமிணி ணியின் முறைமையும் அருளிச்செய்கின்றார்.

**இ - ள் :** ஓதி உணர்ந்து ஒழுக்கநெறி இழுக்காநல்ல உத்தமர்க்கு செய்வது உயர் பீசம் - வேதாகம

சாத்திரங்கள் எல்லாத்தையும் அதிகரித்து அவையிற் றில் உண்டானவர் தங்களேயும் அறிந்து அந்தச்சாத் திரம் சொன்ன முறைமையில் ஒழுங்கு தப்பாமல் நடக்கிற உத்தமரில் உத்தமராய் உள்ளவர்களுக்குச் செய்வது மேலான சபீசதீட்சை,—

இவர் தம்மை - இந்த உத்தமர்களே—

நீதியினுல் நித்திய நைமித்திக காமியத்தில் நிறுத்தி - அவரவர்க்குத் தக்கமுறைமையாக நித்திய நைமித்திக கன்மங்களேயும். காமியத்தையும் கற்பித்து நிறுத்தி,—

நிரம்ப அதிகாரம் நிகழ்த்துவதும் செய்து - பரா னுக்கிரகம் முதலான எல்லா அதிகாரத்தையும் குறை வறக் கொடுத்து,—

சாதகர் ஆசாரியரும் ஆக்கி—நிருவிகற்ப சமாதி முதலாயினவற்றையும் கற்பித்து ஆசாரிய அபிடேக மும் செய்து,—

வீடு தருவிக்கும் - மோட்சத்தையும் கொடுப்பிக் கும்; அது,—

உலோக சிவதருமிணி என்று இரண்டு ஆம் - ஆசாரியன் இந்த ஆன்மாவை இவன் போகங்களுக்கு இச்சையானபுவனங்களிலே யோசிப்பிக்கிறது உலோக தருமிணி என்றும் சிவனுடனே யோசிப்பிக்கிறது சிவதருமிணி என்றும் இரண்டுவகைப்பட்டிருக்கும்,–

ஆதலினுல் அதிகாரையாம் - இப்படிச்சொல்லி வந்த தீட்சைகளின் விசேஷங்களினுல் இவை எல்லாம் அதிகாரையாம்.—

சமய விசேட நிருவாணம் அபிடேகம் இவற்று அடங்கும் அன்று ஏ - முன் சொல்லிவந்த தீட்சைகள் எல்லாம் சமயத்திலும், விசேடத்திலும், நிருவாணத் திலும், அபிடேகத்திலும் இந்த நாலு தீட்சையிலும் அடங்கும் என்றவாறு.

*'பாலரொடு வாலீசர்' என்ற திருவிருத்தத்தில், 'நிரதிகாரை என நின்று இரண்டாய் விளங்கும்' என்ற பதத்துக்கு வியாக்கியானம் 'இவற்றடங்கும் அன்றே' என்ற அளவும் வந்துமுடிந்தது. இது அதி காரை என்னுமதும் கண்டுகொள்க.*

*இதனால் சொல்லியது, வேதாகம சாத்திரங்களை ஓதி உணர்ந்து அந்தச் சாத்திரம் சொன்ன முறைமை யினாலே நிற்கிற உள்ளத்தவர்களுக்குச் செய்வது சபீசதீட்சை என்றும், இவர்களுக்கு முறைமையிலே நித்தியம நைமித்திகங்களையும் கற்பிக்கிறது அதிகா ரையாம் என்றும், இந்தத் தீட்சைகள் எல்லாம் சமயம் விசேடம் நிருவாணம் அபிடேகம் என்கிற நாலிலும் அடங்கும் என்னும முறைமையும் அறி*

## செய்யுள் —257

**அழிவிலாக் கிரியையினுன் ஆதல்சத்தி மந்தான்**
**ஆதல்அத்து வாசுத்தி பண்ணிமலம் அகற்றி**
**ஒழிவிலாச் சிவம்பிரகா சித்தற்கு ஞானம்**
**உதிப்பித்துற் பவந்துடைப்பன் அரன்ஒருமூ வர்க்கும்**
**வழுவிலா வழிஆறும் மந்திரங்கள் பதங்கள்**
**வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள்**
**கழிவிலா துரைத்தமுறை யொன்றினென்று வியாத்தி**
**கருதுகலை சத்தியின்கண் சத்திசிவன் கண்ணும்.**

**1. மறைஞானசம்பந்தர் :**

மேல் தீக்கை ஒருவிதத்தால் அத்துவசுத்தி என்பதும், அத்துவா ஆறு என்பதும், அதனது வியாத்தியும் உணர்த்துகின்றார்.

**என்பது:** அழிவு இலா கிரியையினுன் ஆதல் சத்திமத்தான் ஆதல் - கெடுதலில்லாத கிரியாவதி என்னும் தீக்கையினுன் ஆதல் அந்தரங்க வியாபாரத்தால் செய்யும் ஞானதீக்கையினுன் ஆதல் அவரவர் சத்திநிபாதானு குணமாக,—

அத்துவாசுத்தி பண்ணி மலம் அகற்றி - தத்துவாத்துவா முதலான எல்லாம் பாசபந்தம் ஆகலான் அவைகளைப் பஞ்சகலைகளினும் அடைத்துச் சுத்தி செய்து ஆணவம் முதலிய மூன்று பாசங்களைச் சேதிப்பதும் செய்து,—

ஒழிவு இலா சிவம் பிரகாசித்தற்கு ஞானம் உதிப்பித்து - அஞ்ஞானம் நீங்கவே இவனைவிட்டு நீங்காது சிவஞானம் இரண்டறத்தரிசனம் ஆகையின் பொருட்டுச் சர்வஞ்ஞத்துவாதி குணங்களைப் பிரகாசிக்கும்படி செய்து,—

உற்பவம் துடைப்பன் - மேல் திரும்பவும் செனனம் எடாதபடி செய்வன்,—

அரன் ஒரு மூவர்க்கும் - அரன் என்னும் திருநாமத்தையுடைய சிவன் மூவகைப்பட்ட ஆன்மாக்களுக்கும்,—

*அப்படி அத்துவசுத்தி செய்யுமிடத்து,*

வழு இலா வழி ஆறு ஆம் மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள் - குற்றமில்லாத அத்துவா ஆறுவிதமாம்; அவையாவை? எனின், அத்தரூபமும் சத்தரூபமும் ஆகிய மந்திராத்துவா முதல் கலாத்துவா ஈறுவனவாம்.—

கழிவு இலாது உரைத்த முறை ஒன்றின் ஒன்று வியாத்தி - இங்ஙனம் கூறிய ஆறு அத்துவாவும் ஒன்றும்குறையாமற் சொன்னமுறையிலே ஒன்றிலொன்று வியாத்தியாய் இருக்கும்.—

*அஃது எவ்வாறு? எனில், மந்திரம் பதத்திலும் பதம் வன்னத்திலும் வன்னம் புவனத்திலும் புவனம் தத்துவத்திலும் தத்துவம் கலையிலுமாக வியாத்தியாய் இருக்கும். பதம் என்பது அட்சரங்களின் கூட்டம்.*

கருது கலை சத்தியின்கண் சத்தி சிவன்கண் ஆம் - சத்தி துணைக்காரணம் ஆதலால் அதனிடத்தில் கலை வியாத்தியாய் இருக்கும்; சிவனுக்குச் சத்தி சமவேதை யாகையால் சிவனிடத்து அந்தச்சத்தி வியாத்தியாய் இருக்கும் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் வருணபத்ததி எனா அறிக.*

2. நிரம்பவழகியர் :

**அ - கை :** பரமேசுவரன் கிரியாவதியால் ஆதல் ஞானவதியால் ஆதல் அத்துவாக்களைச் சோதித்து ஆன்மாக்கள் மலங்களைப் போக்குகிற முறைமை மேல் அருளிச்செய்கின்றார்.

இ - ள் : அழிவு இலா கிரியையினுன் ஆதல் சத்தி மத்தான் ஆதல் - அநாதியே நித்தியமாயுள்ள கிரியாவதி யாலாதல் ஞானவதியாலாதல்,—

அத்துவாசுத்தி பண்ணி - அத்துவாக்களிலே செனனங்களுக்கு ஏதுவான கன்மங்களை எல்லாம் சுத்திகரித்து.—

மலம் அகற்றி – மல மாயாதி கன்மங்களைப் போக்கி.—

ஒழிவு இலா சிவம் பிரகாசித்தற்கு ஞானம் உதிப் பித்து உற்பவம் துடைப்பன் அரன் ஒரு மூவர்க்கும் - உயிர்க்கு உயிராய் அநாதியே இவனைவிட்டு நீங்கா மல் நிற்கிற சிவப்பிரகாசத்தை உண்டாக்குகிற பரஞானத்தையும் தோற்றுவித்துச் செனனத்தையும் அறுப்பன் பரமேசுவரன் மூன்றுவகைப்பட்ட ஆன் மாக்களுக்கும்,

வழுவு இலா வழி ஆறு ஆம் - மலத்தைப் போக் குகைக்கு ஏதுவாய் இருக்கிற குற்றமற்ற அத்துவாக் கள் ஆறுவகைப்பட்டிருக்கும்; அவையாவன,—

மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள் - மந்திரங்கள், பதங்கள், அக் கரங்கள், புவனங்கள், தத்துவங்கள், கலைகள் என்கிற இந்த ஆறின் உண்மையும்,—

கழிவு இலாது உரைத்த முறை - வழுவு அற வேதாகமங்கள் சொன்ன முறைமை,—

ஒன்றில் ஒன்று வியாத்தி - இந்த ஆறு அத்துவாவும் தன்னில் ஒன்றிலே ஒன்ருக வியாபித்திருக்கும்.—

*இவை ஏது இடமாகநிற்கும் என்று விசாரிக்கில்,*

கருது கலை சத்தியின் கண் - மற்றுள்ள அஞ்சு அத்துவாக்களும் நிற்கைக்கு இடம் இது என்று கருதப்பட்ட கலைகள்; இந்தக் கலைகள் நிற்கைக்கு இடமாய் இருக்கும் சத்தி; இச்சத்திக்கு இடம் ஏது? என்னில்,—

சத்தி சிவன் கண் ஆம் - இவையிதற்கு எல்லாம் மேலான சத்தி பரமேச்சுவரன் இடமாக நிற்கும் என்றவாறு.

*இதனல் சொல்லியது ஆன்மாக்களுக்குப் பரமேசுவரன் அத்துவாக்களைச் சோதித்து மலத்தையும் போக்கி அநாதியே உயிர்க்குயிராய் நிற்கிற தன்னைத் தரிசிப்பிக்கிற ஞானத்தையும் தோற்றுவித்து இவர்கள் செனனத்தையும் அறுப்பன் என்றும், அத்துவாக்கள் அறுவகைப்பட்டிருக்கும் என்றும், இவை ஒன்றிலே ஒன்று வியாபித்து இருக்கும் என்றும், இந்த அத்துவாக்கள் சத்தியிடமாக நிற்கும் என்றும், இந்தச் சத்தி சிவனிடமாக நிற்கும் என்னும் முறைமையும் அறிவித்தது.*

(சா)

செய்யுள்—258

**மந்திரங்கள் முதலஐந்தும் கலைஐந்தின் வியாத்தி**
**மருவுமந் திரமிரண்டு பதங்கள் நாலேழ்**
**அந்தநிலை எழுத்தொன்று புவனம் நூற்றெட்(டு)**
**அவனிதத் துவமொன்று நிவிர்த்திஅயன் தெய்வம்**

வந்திடுமந் திரம்இரண்டு பதங்கள் மூவேழ்
வன்னங்கள் நாலாறு புரம்ஐம்பத் தாறு
தந்திடும்தத் துவங்கள்இரு பத்து மூன்று
தரும்பிரதிட் டாகலைமால் அதிதெய்வம் தானும்.

1. மறைஞானசம்பந்தர் :

இங்ஙனம் வியாத்தியினது முறைமை தொகுத்துக்கூறி, தீக்கையின் மந்திரம் முதலிய ஐந்தும் பஞ்சகலைகளினும் வியாத்தியாக நிற்கும் முறைமையினைப் பிறித்து அடைவே மூன்று திருவிருத்தத்தால் உணர்த்துகின்றார்.

**என்பது :** மந்திரங்கள் முதல் ஐந்தும் கலை ஐந்தின் வியாத்தி - மந்திரம் முதலிய ஐந்து அத்துவாவும் பஞ்ச கலைகளினும் வியாத்தியாயிருக்கும்,—

*அஃது எங்ஙனம்? என்னில்,*

மருவும் மந்திரம் இரண்டு - பொருந்தப்பட்ட சத்தியோசாதம் இருதயம் ஆக மந்திரம் இரண்டு,—

பதங்கள் நால் ஏழ் - ஸத்பாவேச்வர ([illegible]) இந்தப்பதமந்திரத்துக்கு அட்சரம் 5, மஹாதேஜ: ([illegible]) இதற்கு அட்சரம் - 4, யோகாதிபதே ([illegible]) இதற்கு அட்சரம் - 5, முஞ்ச முஞ்ச ([illegible]) இதற்கு அட்சரம் 4, ப்ரதம ப்ரதம ([illegible]) - 6, சர்வ சர்வ ([illegible]) - 4, பவ பவ ([illegible]) - 4, பவோத்பவ

(ஹவொ_ஹவ) - 4, ஸர்வபூத ஸுகப்ரத (ஸவ-பூ ஸு-ப்ரத ஸுவபூத) - 8, ஸர்வ ஸாந்நித்யகர (ஸவ-ஸாநி த்யகர) - 7, ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரபர (ப்ரஹ்மவிஷ்ணு ருத்ரபர) - 8, அநர்ச்சித அநர்ச்சித (அநர்ச்சித அநர்ச்சித) - 8, அஸம் ஸ்துத அஸம் ஸ்துத (அஸம் ஸ்துத அஸம் ஸ்துத) - 8, பூர்வ ஸ்தித பூர்வ ஸ்தித (பூர்வஸ்தித பூர்வஸ்தித) - 8, ஸாக்ஷி ஸாக்ஷி (ஸா ஸா) - 4, துருதுரு (துருதுரு) - 4, பதங்க பதங்க (பதங்க பதங்க) - 6. பிங்க பிங்க (பிங்க பிங்க) - 4, ஜ்ஞாந ஜ்ஞாந (ஜ்ஞாந ஜ்ஞாந) - 4, சப்த சப்த (சப்த சப்த) - 4, ஸூக்ஷ்ம ஸூக்ஷ்ம (ஸூக்ஷ்ம ஸூக்ஷ்ம) - 4, சிவ (சிவ) - 2, சர்வ (சர்வ) - 2, ஸர்வத (ஸர்வத) - 3, ஓம்நமோநம: (ஓம்நமோ நம:) - 5, ஓம் சிவாய (ஓம்சிவாய) - 4, நமோநம: (நமோநம:) - 4; ஓம் (ஓம்) - 1 எனப் பதம் இருபத்தெட்டு: இப்பதங்கட்கு அட்சரம் - 134.

அந்த நிலை எழுத்து ஒன்று - அந்தத்தில் நின்ற அட்சரம் ஒன்று.—

புவனம் நூற்றெட்டு - பிரமாண்டத்துக்குள்ளே பூமிக்குக்கீழே காலாக்கினி, கூர்மாண்டம், ஆடகம் - 3, பூமிக்குமேலே பிரமாண்டத்துக்கு உள்ளே பிரமம், வைணவம், உருத்திரம் - 3 ஆக புவனம் 6; பிரமாண்டத்தின் மேலே கிழக்குத்திசையில் கபாலீச, சட, புத்த, வச்சிரதேக, பிரமர்த்தன, விபூதி, அவ்வியய, சாத்த, பிஞகி, திரிதசாதிப என்னும் புவனம் - 10;

தென்கிழக்கில் அக்கினி ருத்திர, உதாசன, பிங்கல, காதக, அர, சுவலன, தகன, பப்புரு, பற்பாந்தக, கயாந் தக என்னும் புவனம் - 10; தெற்கில் யாமிய, மிருத் தியு, அர, தாதா, விதாதா, கர்த்தா, சையோத்தா, வியோத்தா, தர்மா, அதர்மபதி என்னும் புவனம் - 10; தென்மேற்கில் நிருதி, மாரண, அந்தா, குரூரதிட்டி, பயானக, ஊர்த்துவகேச, விரூபாட்ச, தூமிர, உலோ கித, தமிட்டிரி என்னும் புவனம் - 10; மேற்கில் பல, அதிபல, பாசவத்த, மகாபல, சுவேத, சயபத்திர, தீர்க்க பாகு, சலாந்தக, மேகநாத, சுநாத என்னும் புவனம் - 10; வடமேற்கில் சீக்கிர, இலகு, வாயுவேக, சூக்கும, தீக்கண, கயாந்தக, பஞ்சாந்த்க, பஞ்சசிக, கபர்த்தி, மேகவாகன என்னும் புவனம் - 10; வடக்கில் நிதீச, உருபவான், தன்னிய, சௌமியதேக, சடாதர, இலக் குமிதர, இரத்தினதர, சீதர, பிரசாத, பிரகாமத என்னும் புவனம் - 10; வடகிழக்கில் வித்தியாதிப, ஈச, சர்வஞ்ஞ, ஞானபுக்கு, வேதபாரக, சுரேச, சர்வ, சேட்ட, பூத பால, பலிப்பிரிய என்னும் புவனம் - 10; கீழ்த்திசை யில் இடப, இடபதர, அனந்த, குரோதன, மாருதாசன, கிரசன, உதும்பர, ஈச, பணீந்திர, வச்சிரதமுட்டிரி என்னும் புவனம் - 10; பூமிக்கு மேற்கில் பிரமன் திசையில் சம்பு, விபு, கணத்தியக்க, திரியக்க, திரித சேச, சமுவாக, விவாக, நப, இலீச்சு, திரிலோசன என்னும் புவனம் - 10; பிரமாண்டத்தின் மேலே வாயிலில் வீரபத்திர, பத்திரகாளி என்னும் புவனம் - 2. இப்படியே பிரமாண்டத்துக்குள்ளே ஆறு புவனமும், பிரமாண்டத்துக்குப் புறம்பே அண்ட கடாகத்திலே பத்துத் திசையிலும் திசைக்குப் பத்தாக நூறுபுவன மும், அண்டத்தின் மேல்வாயிலில் இரண்டு புவனமும்

ஆக நூற்றெட்டுப் புவனம் இருக்கும் முறைமை அறிக.

அவனி தத்துவம் ஒன்று - தத்துவம் ஒன்று,—

நிவிர்த்தி அயன்தெய்வம் - இங்ஙனம் கூறியவைகள் எல்லாம் நிவிர்த்திகலையில் வியாத்தமாய்ப் பொருந்தி யிருக்கும்; இந்த நிவிர்த்திகலைக்கு அதிபதி பிரமா.—

*நிவிர்த்தி என்னும் பெயர் எக்காரணத்தால்? என்னில், தன்னிடத்திற் கூடின பக்குவான்மாக்கட்குச் சங்கற்பங்களை விடுவித்து நிற்கையால் என்க.*

வந்திடும் மந்திரம் இர - வாமதேவம் சிரசு என்று வரப்பட்ட மந்திரம்

பதங்கள் மூ ஏழ் - ப்ரதம ப்ரதம - 6, தேஜஸ் 3: - 4, ஜ்யோதிர் ஜ்யோதி: - 4, அரூப - 3, அநக்நி - 3, அதூம - 3, அபஸ்ம - 3, அநாதே - 3, நாநா நாநா - 4, தூது தூது - 4, ஓம் பூ: - 2, ஓம் புவ: - 3, ஓம் ஸுவ: - 3, அநிதந - 4, நிதந - 3, நிதநோத்பவ - 5, சிவ - 2, சர்வ - 2. பரமாத்மந் - 4, மஹேச்வர - 4, மஹாதேவ - 4, (𑌪𑍍𑌰𑌥𑌮𑌪𑍍𑌰𑌥𑌮, 𑌤𑍇𑌜𑌸𑍍𑌤𑍇𑌜𑌃, 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃, 𑌅𑌰𑍂𑌪𑍇, 𑌅𑌨𑌗𑍍𑌨𑌿, 𑌅𑌧𑍂𑌮𑌾, 𑌅𑌭𑌸𑍍𑌮, 𑌅𑌨𑌾𑌧𑍇, 𑌨𑌾𑌨𑌾 𑌨𑌾𑌨𑌾, 𑌧𑍂𑌧𑍂 𑌧𑍂𑌧𑍂, 𑌓𑌂 𑌭𑍂𑌃, 𑌓𑌂 𑌭𑍁𑌵𑌃, 𑌓𑌂 𑌸𑍁𑌵𑌃, 𑌅𑌨𑌿𑌧𑌨, 𑌨𑌿𑌧𑌨, 𑌨𑌿𑌧𑌨𑍋𑌦𑍍𑌭𑌵, 𑌶𑌿𑌵, 𑌶𑌰𑍍𑌵, 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍍, 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰, 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵) எனப் பதம் இருபத்தொன்று; ஆகப் பதங்கட்கு அட்சரம் - 70,—

வன்னங்கள் நால் ஆறு - ளகாரம் முதல் டகாரம் ஈறுக: அவையாவன:—𑌟, 𑌠, 𑌡, 𑌢, 𑌣, 𑌤, 𑌥, 𑌦, 𑌧, 𑌨, 𑌪, 𑌫, 𑌬, 𑌭, 𑌮, 𑌯, 𑌰, 𑌲, 𑌵, 𑌶, 𑌷, 𑌸, 𑌹, 𑌳 என அட்சரம் 24.—

புரம் ஐம்பத்தாறு - குஹ்யாட்டகம் என்னும் பெயரினையுடைய அமரேச, பிரபாச, நைமிச, புட்கர, ஆசாடி, திண்டிமுண்டி, பாரபூதி, இலகுளீச என்னும் புவனம் எட்டும் கிரமத்திலே இந்திரதிக்கு முதல் எட்டுத்திக்கிலும் சூழ்ந்து அப்பு தத்துவத்திலிருக்கும்;

அதிகுஹ்யாட்டகம் ஆகிய அரிச்சந்திர, சீசயில, செற்பேச, ஆமிராதக, மத்திமேச, மாகாள, கேதார, பைரவ என்னும் புவனம் எட்டும் இந்திராதி திக்கைச் சூழ்ந்து அக்கினிதத்துவத்தில் இருக்கும்;

குஹ்யாகுஹ்யாட்டகம் (குய்யதராட்டகம்) ஆகிய கயை, குருக்கேத்திர, நகல, நாகல, விமல, அட்டகாச, மகேந்திர, பீமேச என்னும் புவனம் எட்டும் இந்திராதி திக்கைச் சூழ்ந்து வாயுதத்துவத்திலிருக்கும்;

பவித்திராட்டகம் ஆகிய வத்திரபத, உருத்திர கோடி, அவிமுத்த, மகாலய, கோகர்ண, பத்திரகர்ண, சுவர்ணக்க, தாணு என்னும் புவனம் எட்டும் இந்திராதி திக்கைச்சூழ ஆகாயதத்துவத்தில் இருக்கும்;

தாணு அட்டகம் என்னும் பெயரை உடைய சகலண்ட, துவிரண்ட, மாகோட, மண்டலேசுவர, காளாஞ்சர, சங்குகன்ன, தூலேச்சர, தலேச்சர எனும் புவனம் எட்டும் இந்திராதி திக்கைச்சூழ ஆங்கார

தத்துவத்தில் இருக்கும்; இவையிற்றில் சகலண்ட, துவிரண்ட, மாகோட, மண்டலேசுவர என்னும் நாலு புவனமும் தன்மாத்திரைகளில் இருக்கும்; காளாஞ்சரம் என்னும் புவனம் ஒன்றும் கன்மேந்திரியத்தில் இருக்கும்; சங்குகன்னம் என்னும் புவனம் ஒன்றும் ஞானேந்திரியத்தில் இருக்கும்; தாலேச்சரம் என்னும் புவனம் ஒன்றும் மனத்தத்துவத்தில் இருக்கும்; தலேச்சரம் என்னும் புவனம் ஒன்றும் அகங்காரத்தில் இருக்கும்; கன்மேந்திரியமும் தன்மாத்திரையும் ஞானேந்திரியமும் மனமும் ஆகப் பதினாறு தத்துவமும் அகங்காரத்திலிருக்கும்; இப்படியே அகங்காரத்தில் இருக்கும் புவனம் எட்டுக்கும் வகை அறிக.

இங்ஙனம் கூறிய பஞ்சாட்டகத்தானங்கள் நாற்பதினுடைய பேர் பெற்றுப் பூமியின்கண்ணும் மிக உத்கிருட்டமான சிதம்பரம் ஆதி தானங்கள் நாற்பத்து சிவத்தானங்கள் உண்டு. இவையிற்றில் செனித்தவரும் வசித்தவரும், மரித்தவரும் பாவங்கள் எல்லாம் அகன்று முன்னர்க்கூறிய பஞ்சாட்டகங்களில் அந்த அந்தப் புவனத்தை அடைந்து இன்புற்று அமர்ந்து இருப்பர் என அறிக.

புண்ணியாட்டகமாகிய (சூக்கும புவனாட்டகம்) பைசாச, இராக்கத, இயக்க, காந்தருவ, ஐந்திர, சௌமிய, பிராசேச, பிராம என்னும் தேவயோனிகளாகிய எட்டுப் புவனமும் புத்திதத்துவத்தில் இருக்கும்; யோகாட்டகமாகிய அகிருத, கிருத, வைரவ, பிராம, வைணவ, கௌமார, அவும, சிரீகண்ட என்னும் எட்டுப்புவனமும் குணதத்துவத்தில் இருக்கும்; ஆகப்புவனம் ஐம்பத்தாறு —

தந்திடும் தத்துவங்கள் இருபத்து மூன்று - அப்பு அக்கினி வாயு ஆகாயம் ஆகப் பூதம் 4, தன்மாத் திரை 5, கன்மேந்திரியம் 5, ஞானேந்திரியம் 5, மனம் அகங்காரம் புத்தி குணம் ஆக அந்தக்கரணம் 4, ஆகப் பிரகிருதி தத்துவம் இருபத்துமூன்று.—

தரும் பிரதிட்டாகலை - வித்தியாகலை தரப்பட்ட பிரதிட்டாகலையில் இவையெல்லாம் பொருந்தி வியாத் தமாயிருக்கும்.—

மால் அதிதெய்வம் தான் ஆம் - இந்தப்பிரதிட்டா கலைக்கு விட்டுணுமூர்த்தி காரணேசுவரராம் என்ற வாறு.

*இதற்குப் பிரதிட்டாகலை என்றது எக்காரண ஞல்? என்னில், தனலை அடைந்த ஆன்மாக்கட்கு முன்னமடைறப்பட்ட சங்கறபத்தை விசேடித்து நிலை நிறுத்தலால் என அறிக.*

2. நிரம்பவழகியர் :

அ - கை : முன் சொல்லி வந்த அத்துவாக்கள் ஆறில் மந்திரம் முதலான ஐந்து அத்துவாவும் கலை அத்துவாவிலே வியாப்தியாய் இருக்கிற முறைமை மேல் அருளிச்செய்கின்ருர்.

இ - ள் : மந்திரங்கள் முதல் ஐந்தும் கலை ஐந்தில் வியாத்தி - மந்திரங்கள் முதலாக எண்ணப்பட்ட ஐந்து அத்துவாவும் கலைகள் ஐந்திலும் வியாத்தமாய் இருக் கும்.—

*அது எங்ஙனே ? என்னில்,*

மருவு மந்திரம இரண்டு பதங்கள் நாலு ஏழு அந்த நிலை எழுத்து ஒன்று புவனம் நூற்று எட்டு அவனிதத்துவம் ஒன்று நிவிர்த்தி அயன் தெய்வம் - நிவிர்த்தி கலையிலே பொருந்தப்பட்ட மந்திரம் இரண்டும் பதங்கள் இருபத்தெட்டும் அதிலே நிலை பெற்று நிற்கும் அக்கரம் ஒன்றும் புவனம் நூற்றெட்டும் பிருதிவிதத்துவம் ஒன்றும் இதற்குந் தெய்வம் பிரமாவும் ஆகும்.—

வந்திடும் மந்திரம் இரண்டு பதங்கள் மூவேழ் வன்னங்கள் நால் ஆறு புரம் ஐம்பத்தாறு தந்திடும் தத்துவங்கள் இருபத்துமூன்று தரும் பிரதிட்டாகலை மால் அதிதெய்வம் தான் ஆம் - பிரதிட்டாகலையிலே இரண்டு மந்திரமும் இருபத்தொரு பதமும் இருபத்து நாலு அக்கரமும் ஐம்பத்தாறு புவனமும் இதற்குள்ள இருபத்துமூன்று தத்துவமும் ஆகப் பொருந்தும்; இதற்குத் தெய்வம் விட்டுணுவுமாம் என்றவாறு.

*இதனால் சொல்லியது, மந்திரங்கள் முதலானவை ஐந்து அத்துவாவும் கலைகள் ஐந்திலும் வியாத்தமா யிருக்கும் என்றும், நிவிர்த்தி கலையிலே இரண்டு மந்திரமும் இருபத்தெட்டுப் பதமும், ஓரக்கரமும், நூற்றெட்டுப் புவனமும், பிருதிவி தத்துவம் ஒன்றும் தெய்வம் பிரமாவுமாகப் பொருந்தி நிற்கும் என்றும், பிரதிட்டா கலையிலே இரண்டு மந்திரமும் இருபத் தொரு பதமும் இருபத்துநாலு அக்கரமும் ஐம்பத் தாறு புவனமும் இருபத்துமூன்று தத்துவமும் தெய்வம் விட்டுணுவுமாகப் பொருந்தி நிற்கும் என் னும் முறைமையும் அறிவித்தது.* (ש)

செய்யுள்—259

வித்தையின்மந் திரமிரண்டு பதம்நா லைந்து
விரவும்எழுத் தேழுபுரம் இருபத் தேழு
தத்துவமும் ஒரேழு தங்குமதி தெய்வம்
நாவில்உருத் திரனாகும் சாந்தி தன்னின்
வைத்தனமந் திரமிரண்டு பதங்கள்பதி னொன்று
வன்னமொரு மூன்றுபுரம் பதினெட் டாகும்
உத்தமமாம் தத்துவமும் ஒருமூன் றாகும்
உணரில்அதி தேவதையும் உயரீச னாமே.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் வித்தியாகலையின் முறைமை உணர்த்து கின்றார்.

என்பது: வித்தையின் மந்திரம் இரண்டு - வித்தியாகலையில் அகோரம் சிகை என்னும் மந்திரம்

பதம் நால் ஐந்து - த்யாநஹாராய - 5, ஓம் நமச்சிவாய - 6, ஸர்வப்ரபவே - 5, சிவாய - 3, ஈசாநமூர்த்தாய - 6, தத்புருஷ வக்த்ராய - 7, அகோரஹ்ருதயாய - 7, வாமதேவகுஹ்யாய - 7, ஸத்யோஜாதமூர்த்தயே - 7, ஓம் நமோநம: - 5, குஹ்யாதிகுஹ்யாய - 6, கோப்த்ரே - 2, அநிதநாய - 5. ஸர்வ யோகாதிக்ருதாய - 8 ஸர்வ வித்யாதிபாய - 7, ஜ்யோதிருபாய - 5, பரமேச்வரபராய - 8, அசேதந அசேதந - 7. வ்யோமிந் வ்யோமிந் - 4, வ்யாபிந் வ்யாபிந் - 4, அருபிந் அருபிந் - 6 ( ध्यानहाराय, ॐ नमश्शिवाय, सर्वप्रभवे,

𑌶𑌿𑌵𑌾𑌯, 𑌈𑌶𑌾𑌨𑌮𑍂𑌰𑍍𑌧𑌾𑌯, 𑌤𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷 𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌾𑌯,
𑌅𑌘𑍋𑌰𑌹𑍃𑌦𑌯𑌾𑌯, 𑌵𑌾𑌮𑌦𑍇𑌵𑌗𑍁𑌹𑍍𑌯𑌾𑌯, 𑌸𑌦𑍍𑌯𑍋
𑌜𑌾𑌤𑌮𑍂𑌰𑍍𑌤𑌯𑍇, 𑌓𑌂 𑌨𑌮𑍋𑌨𑌮𑌃, 𑌗𑍁𑌹𑍍𑌯𑌾𑌤𑌿 𑌗𑍁
𑌹𑍍𑌯𑌾𑌯, 𑌗𑍋𑌪𑍍𑌤𑍍𑌰𑍇, 𑌅𑌨𑌿𑌧𑌨𑌾𑌯, 𑌸𑌰𑍍𑌵 𑌯𑍋𑌗𑌾𑌧𑌿
𑌕𑍃𑌤𑌾𑌯, 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌧𑌿𑌪𑌾𑌯, 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍂𑌪𑌾𑌯,
𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰 𑌪𑌰𑌾𑌯, 𑌅𑌚𑍇𑌤𑌨 𑌅𑌚𑍇𑌤𑌨, 𑌵𑍍𑌯𑍋𑌮𑌿𑌨𑍍
𑌵𑍍𑌯𑍋𑌮𑌿𑌨𑍍, 𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌨𑍍 𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌨𑍍, 𑌅𑌰𑍂𑌪𑌿𑌨𑍍 𑌅𑌰𑍂
𑌪𑌿𑌨𑍍 ) எனப் பதம் இருபது; இந்தப் பதங்கட்கு
அட்சரம் - 111.—

பும் எழுத்து ஏழு - ஞகாரம் முதல் சகாரம்
ஈறுக: அவையாவன:- ஙு, ஊ, ஷ, ஹ, ஜ, ஈ, ஞ,
எனப்பொருந்தும் அக்கரம் ஏழு.—

புரம் இருபத்தேழு - வாம, பீம, உக்கிர, பவ,
ஈசான, ஏகவீர, ஆகப் புருடதத்துவபுவனம் - 6, புருட
தத்துவம் நிரவயவமூர்தலாலே இந்தப் புவனம் ஆறும்
பிரகிருதியின் மத்தகத்தில் இருக்கும் என்று அறிக.
பிரசண்ட, உமாபதி, அச, அனந்த, ஏகசிவ என்னும்
அராக தத்துவபுவனம் - 5, சண்ட, குரோத என்னும்
வித்தையிற்புவனம் - 2, சோதி, சமுவர்த்த என்னும்
கலையிற்புவனம் - 2, சூர, பஞ்சாந்தக என்னும் நியதி
யிற்புவனம் - 2, ஏகவீர, சிகேத என்னும் காலதத்துவ
புவனம் - 2, அங்குட்டமாத்திர, ஈசான, ஏகேக்கண,
ஏகபிங்க, பவோற்பவ, வாமதேவ, மகாதேவ, புவ
னேச என்னும் மாயா தத்துவபுவனம் 8; ஆக வித்
தியாகலையிற்புவனம் இருபத்தேழு.—

தத்துவமும் ஓர் ஏழு - புருடன் அராகம் வித்தை கலை நியதி காலம் மாயை ஆகத் தத்துவம் ஏழு.—

தங்கும் - இவையெல்லாம் பொருந்தி வியாத்த மாய் இருக்கும்.—

அதிதெய்வம் தாவு இல் உருத்திரன் ஆகும் - இந்த வித்தியாகலைக்கு அதிட்டாதாவாகும் கேடில்லாத உருத்திரமூர்த்தி.—

*வித்தியாகலை என்றது எக்காரணனல்? என்னில், தன்னை அடைந்திருக்கும் ஆன்மாக்கட்கு அறிவைப் பிரகாசிப்பிக்கையால் என்று அறிக.*

சாந்திதன்னில் வைத்தன மந்திரம் இரண்டு - சாந்திகலையிலே தற்புருடமும் கவசமும் என வைக்கப் பட்ட மந்திரம் இரண்டாம்.—

பதங்கள் பதினொன்று - வியோமவ்யாபிநே - 5. வ்யோமரூபாய - 5. ஸர்வவ்யாபிநே - 5. சிவாய - 3. அநந்தாய - 4. அநாதாய - 4. அநாச்ரிதாய - 5. த்ருவாய - 3. சாச்வதாய - 4. யோகபீட ஸம்ஸ்திதாய - 8. நித்தியயோகிநே - 5. (𑌵𑍍𑌯𑍋𑌮𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌨𑍇, 𑌵𑍍𑌯𑍋𑌮𑌰𑍂𑌪𑌾𑌯, 𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌨𑍇, 𑌶𑌿𑌵𑌾𑌯, 𑌅𑌨𑌨𑍍𑌤𑌾𑌯, 𑌅𑌨𑌾𑌥𑌾𑌯, 𑌅𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌯, 𑌧𑍍𑌰𑍁𑌵𑌾𑌯, 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌾𑌯, 𑌯𑍋𑌗𑌪𑍀𑌠𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌯, 𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍋𑌗𑌿𑌨𑍇) எனப் பதம் பதினொன்றுக்கு அட்சரம் ஐம்பத்தொன்று.—

வன்னம் ஒரு மூன்று - க, வ, ம என்னும் அட்சரம் மூன்று.—

புரம் பதினெட்டு ஆகும் - வாமை, சேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப் பிரதமனி, சர்வபூததமனி, மனோன்மனி எனச் சுத்த வித்தியாதத்துவத்தில் புவனம் 9; அனந்த, சூக்கும, சிவோத்தம, ஏகநேத்திர, ஏகருத்திர, திரிமூர்த்தி, சிகண்ட, சிகண்டி என ஈசுரதத்துவத்தில் புவனம் - 8; சதாசிவதத்துவத்தில் சாதாக்கியம் என்னும் புவனம் - 1, ஆகப்புவனம் பதினெட்டு.—

உத்தமம் ஆம் தத்துவமும் ஒரு மூன்று ஆகும் - உத்தமமாகச் சொல்லப்பட்ட சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம் எனத் தத்துவம் மூன்று; இவை எல்லாம் வியாத்தமாயிருக்கும்.—

உணரில் அதிதேவதையும் உயர் ஈசன் ஆம் ஏ - இந்தக் கலைக்கு அதிதேவதையை விசாரித்து அறியின் மகேசுரமூர்த்தியாம் என்றவாறு.

*இந்தக் கலைக்குச் சாந்தியென்னும் பெயர் எக் காரணனால்? என்னில், இதனை அடைந்திருக்கும ஆன்மாக்கட்கு இராகத்துவேடம் இல்லாமையாலும், சங்கற்பித்தற்குப் பரமமான சாந்தி வருகையினாலும் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** மேல் வித்தைக்கும் சாந்திக்கும் அத்துவாக்கள் நின்ற முறைமை அருளிச் செய்கின்றார்.

**இ - ள் :** வித்தையின் மந்திரம் இரண்டு பதம் நால் ஐந்து விரவும் எழுத்து ஏழு புரம் இருபத்தேழு

தத்துவமும் ஓர் ஏழு தங்கும் அதி தெய்வம் தாவு இல் உருத்திரன் ஆகும் – வித்தியாகலையிலே பொருந்தப்பட்ட இரண்டு மந்திரமும் இருபதுபதமும் ஏழு அக்கரமும் இருபத்தேழு புவனமும் ஏழு தத்துவமும் இதற்கு நிற்கும் அதிதெய்வம் விட்டு நீங்காத உருத்திரனும் ஆகும்.—

சாந்தி தன்னில் வைத்தன மந்திரம் இரண்டு பதங்கள் பதினொன்று வன்னம் ஒரு மூன்று புரம் பதினெட்டு ஆகும் உத்தமமாம் தத்துவமும் ஒரு மூன்று ஆகும் உணரில் அதிதெய்வம் உயர் ஈசன் ஆம் ஏ - சாந்தி கலைக்கு மந்திரம் இரண்டும் பதினொரு பதமும் மூன்று அக்கரமும் பதினெட்டுப் புவனமும் நன்மைப்பதியினையுடைய தத்துவம் மூன்றும் விசாரித்துப் பார்க்கில் அதிதெய்வம் மேலான மகேசுவரனும் ஆகும் என்றவாறு.

*இதனால் சொல்லியது வித்தியா கலையிலே இரண்டு மந்திரமும் இருபது பதமும் ஏழு அக்கரமும இருபத்தேழு புவனமும் ஏழு தத்துவமும் அதி தெய்வம் உருத்திரனும் ஆகப் பொருந்தி நிற்கும் என்றும், சாந்தி கலையிலே இரண்டு மந்திரமும் பதினொரு பதமும் மூன்று அக்கரமும் பதினெட்டுப் புவனமும் மூன்று தத்துவமும் அதிதெய்வம் மகேசுவரனுமாம் என்னும் முறைமையும் அறிவித்தது.* (அ)

### செய்யுள்—260

சாந்தியா தீதகலை தன்னின்மந் திரங்கள்
தாம்மூன்று பதமொன்(று) அக் கரங்கள்பதி னாறு
வாய்ந்தபுரம் மூவைந்து தத்துவங்கள் இரண்டு
மருவும்அதி தேவதையும் மன்னுசதா சிவராம்

**ஏய்ந்தமுறை மந்திரங்கள் பதினொன்று பதங்கள்**
**எண்பத்தொன் றக்கரங்கள் ஐம்பத்தொன் றாகும்**
**ஆய்ந்தபுரம் இருநூற்றே டிருபத்து நாலாம்**
**அறிதருதத் துவம்முப்பத் தாறுகலை ஐந்தே.**

1. மறைஞானசம்பந்தர் :

மேல் சாந்தியாதீத கலையினது முறைமையை

என்பது: சாந்தியாதீதகலை தன்னின் மந்திரங்கள் தாம் மூன்று - சாந்தியாதீதகலையிலே ஈசானம், அஸ்திரம், சிவ என்னும் மூலம் ஆக மந்திரம் மூன்று.—

பதம் ஒன்று - ஓம்; இதற்கு அட்சரம் ஒன்று; ஓது சிவான்மிகமாய் இருக்கும்.—

அக்கரங்கள் பதினாறு - அ: என்னும் ஈற்றட்சரம் முதலாக அ என்னும் ஆதியட்சரம் ஈறான அட்சரங்கள்; அவையாவன: க, கூ, இ, ஈ, உ, ஊ, ஜ, ஜூ, ள, ள: வள, வௌ. ஒ, ஔ, கம், க:
அட்சரம் பதினாறு.—

வாய்ந்த புரம் மூ ஐந்து - சத்திதத்துவத்தில் இருக்கும் நிவிர்த்தி பிரதிட்டை வித்தை சாந்தி சாந்தியதீதை என்னும் விந்துகலாபுவனம் 5 ; சிவதத்துவத்தில் இருக்கும் இந்திகை, தீபிகை, இரோசிகை, மோசிகை, ஊர்த்துவகாமினி என்னும் நாதகலாபுவனம் 5 ; வியாபினி, வியோமரூபை, அநந்தை, அநாதை, அநாசிருதை என்னும் சத்திகலாபுவனம் 5; ஆக புவனம் 15.—

*சதாசிவதத்துவ அண்டத்தின் மேலே இருக்கும் என்று அறிக.*

தத்துவங்கள் - சத்தி சிவம் என்னும் தத்துவம் இரண்டு இவையெல்லாம் வியாத்தி யாய் இருக்கும்.—

மருவும் அதிதேவதையும் மன்னு சதாசிவர் ஆம் - இந்தக் கலைக்குச் சதாசிவ தேவநாயனுர் காரணேசுர ராகப் பொருந்தாநிற்பர்.—

ஏய்ந்த முறை - இப்படிப் பொருந்தின முறை யைத் தொகையாகச் சொல்லுமிடத்து.—

மந்திரங்கள் பதினொன்று பதங்கள் எண்பத் தொன்று அக்கரங்கள் ஐம்பத்தொன்று ஆகும் ஆய்ந்த புரம் இரு நூற்றேடு இருபத்துநாலு ஆம் அறிதரு தத்துவம் முப்பத்தாறு கலை ஐந்து ஏ - ஈசானம் முதல் மந்திரம் பதினொன்று, ஓம் என்னும் பதம் முதலாகப் பதங்கள் எண்பத்தொன்று, அ என்னும் அட்சரம் முதலாக அட்சரம் ஐம்பத்தொன்று, காலாக்கினி புவனம் முதலாகப் புவனம் இருநூற்று இருபத்து நான்கு, பிருதிவி முதலாகத் தத்துவங்கள் முப்பத்தாறு, நிவிர்த்தி முதலிய கலைகள் ஐந்தினும் அடங்கா நிற்கும் என்றவாறு.

*அருவமான எல்லாம் உருவத்தை ஆசிரயித்துக் கொண்டிருத்தலால் பூதசரீரம் அவை இருக்கும் தானம் இருதயம் கண்டம் தாலு புருவமத்தியம் பிரம ரந்திரம் என அறிக. இக் கலைகளுக்கு அடையாளம் ஆகிருதி, வன்னம், பீசம், இந்திரியம், விடயம், குணம்,*

*மண்டலம், அவத்தை, நாடிகள், வாயுக்கள் இவை யெல்லாம் தனித்தனி ஈண்டுக் கூறுமிடத்து விரியும் ஆதலால் ஈண்டுக் கூறிற்றிலம்; ஆகமத்தில் வந்துழிக் காண்க.*

*சில ஆகமத்தின நேத்திரத்தைக்கூட்டி மந்திரம் பன்னிரண்டு என்றும், பதங்களைத் தொண்ணூற்று நாலு என்றும் சொல்லும். இஃதனைறி அதனை விசாரிக்கில் அளவுபடாது என்றும் காலோத்தரத்தில் கூறினர். சுத்தாத்துவாவில் புவனம் முப்பத்து மூன்ருகவும், அசுத்தாததுவாவில் புவனம் இருநூற்று நாலாகவும் ஆகப் புவனம் 237 என்று மதங்கம் முதலியவற்றில் கூறும். அப்படிக் கூறினும் சிருட்டி பேதத்தால் தந்திரபேதம ஒதியது: ஆதலால் விரோதமாகாதென்க.*

*இந்த மூன்று திருவிருத்தத்தினும் கூறப்பட்ட வைகள் எல்லாம வருணபத்ததியினும், இரத்தினத் திரயத்தினும், காலரூபப் பிரகாசிகையினும், ஞானம் முதலியவற்றினும் அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** மேல் சாந்தியாதீதகலைக்கு அத்துவாக் கள் நின்ற முறைமையும் இந்த அத்துவாக்களுக்குத் தொகையும் அருளிச்செய்கின்றுர்.

இ - ள்: சாந்தியாதீதகலை தன்னில் மந்திரங்கள் தான் மூன்று பதம் ஒன்று அக்கரங்கள் பதிறுைறு வாய்ந்த புரம் மூ ஐந்து தத்துவங்கள் இரண்டு மருளும் அதிதேவதையும் மன்னு சதாசிவராம் – சாந்தியாதீத

கலைக்கு மூன்று மந்திரமும் ஒருபதமும் பதினாறு அக்கரங்களும் வாய்ந்த புவனங்கள் பதினைந்தும் இரண்டு தத்துவமும் இதற்குப் பொருந்தும் அதி தெய்வம் நிலைபெற்ற சதாசிவமாகும். —

*'மந்திரம் முதல் ஐந்தும் கலையைந்தின் வியாத்தி' என்ற பதத்துக்கு இவ்வளவும் வந்து முடிந்தது. மேல் இந்த அத்துவாக்களுக்குத் தொகை அருளிச் செய்கின்றார் :*

ஏய்ந்த முறை - இப்படி முன்சொன்ன அடைவே. —

மந்திரங்கள் பதினொன்று பதங்கள் எண்பத்து ஒன்று அக்கரங்கள் ஐம்பத்து ஒன்று ஆகும் ஆய்ந்த புரம் இரு நூற்றோடு இருபத்துநாலு ஆம் அறிதரு தத்துவம் முப்பத்தாறு கலை ஐந்து ஏ – ஆக மந்திரங்கள் பதினொன்றும் பதம் எண்பத்தொன்றும் அக்கரங்கள் ஐம்பத்தொன்றும் ஆராயப்பட்ட புவனம் இருநூற்று இருபத்து நாலும் அறியப்பட்ட தத்துவம் முப்பத்தாறும் கலை ஐந்துமாம் என்றவாறு.

*இதனால் சொல்லியது சாந்தியாதீதகலைக்கு மூன்று மந்திரமும் ஒரு பதமும் பதினாறு அக்கரங்களும் பதினைந்து புவனமும் இரண்டு தத்துவமும அதிதெய்வம் சதாசிவமும் பொருந்தும் என்றும், ஆறு அத்துவாக்களுக்கும் தொகை மந்திரங்கள் பதினொன்று என்றும், பதங்கள் எண்பத்தொன்று என்றும், அக்கரங்கள் ஐம்பத்தொன்று என்றும், புவனம் இருநூற்றிருபத்துநான்கு என்றும், தத்துவங்கள் முப்பத்தாறு என்றும், கலைகள் ஐந்து*

என்றும ஆக ஆறத்துவாக்களுக்கும வகை இப்படி என்னும் முறைமை அறிவித்தது. (கூ)

### செய்யுள்—261

மூன்றுதிறத் தணுக்கள்செயும் கன்மங் கட்கு
  முன்னிலையா மூவிரண்டாம் அத்து வாவின்
ஆன்றமுறை அவைஅருத்தி அறுத்துமல முதிர்வித்(து)
  அரும்பருவம் அடைதலுமே ஆசா னுகித்
தோன்றிநுக ராதவகை முற்செய் கன்மத்
  துகளறுத்தங் கத்துவாத் தொடக்கறவே சோதித்(து)
ஏன்றஉடற் கன்மம்அநு பவத்தினல் அறுத்திங்(கு)
  இனிச்செய்கன்மம் மூலமலம் ஞானத்தால் இடிப்பன்.

1. மறைஞானசம்பந்தர் :

மேல், பரமேசுவரன் ஆசாரியனை அதிட்டித்துக் கொண்டு அநேகம் யோனியில் உண்டாய்க் கட்டுப் பட்டுப் புவன தேகத்துக்குக் காரணமாய் இருக்கிற சஞ்சித கன்மங்களை மந்திர சாமர்த்தியத்தால் புசிப் பித்துத் தொலைப்பித்து, பிராரத்தகன்மம் புசிப்பித்துத் தொலைப்பித்து, ஆகாமியம் ஏருதபடி ஞானத்தால் கெடுக்கும் முறைமையும் ஆணவம் போக்கும்படியும் உணர்த்துகின்ருர்.

என்பது: மூன்று விதத்து அணுக்கள் செய்யும் கன்மங்கட்கு முன்னிலை ஆ மூ இரண்டு ஆம் அத்து வாவின் ஆன்ற முறை அவை அருத்தி அறுத்து மலம் முதிர்வித்து - ஆன்மாக்கள் மனம் வாக்குக் காயம் ஆகிய மூன்று திறத்திஞலே செய்யும் கன்மங்கட்குத்

கரணுதி முன்னிலையான அத்துவா ஆறினும் ஆர்ந்த கன்மங்களை அதற்கு அதற்கு ஏற்ற சரீரங்களைக் கொடுத்து முறைமையிலே புசிப்பித்துத் தொலைப் பித்து மலத்தைப் பக்குவப்படுத்தி,—

அரு பருவம் அடைதலும் ஏ
தோன்றி நுகராதவகை முன் செய் கன்மம்
அறுத்து அங்கு அத்துவா துடக்கு அறவே சோதித்து - மாணுக்கர்க்குக் கிட்டுதற்கு அரிய மிகுந்த பக்குவம் வரவே அஃதாவது தேகாதிப் பிரபஞ்சமே மெய் என்று புத்தி பண்ணினவனே மீண்டு அதனைப் பொய் என்று மதித்து வெறுத்து இந்தச் சங்கர சாகரத்தைக் கடப்பிப்பர் யாரோ என்று தேடும் அறிவு உண்டா கையும் சிவாகமங்களிலும் சிவபத்தரிடங்களிலும் வாஞ்சையுண்டாய் மோட்ச இச்சை யுண்டாகையும் இப்படிப் பருவம் வரவே சிவன் ஆசாரியனை அதிட் டித்து முன் ஆர்ச்சித்த சஞ்சித கன்மங்களை அந்தந்த வினைக்கு ஏற்ற சரீரங்களை எடுத்துப் புசித்துச் செனன மரணப்பட்டுத் திரியாதபடி அந்தக் கன்மங்களைத் திட்சையினுலே கெடுத்து அத்துவசோதனைபண்ணி,—

ஏன்ற உடல் கன்மம் அநுபவத்திஞல் அறுத்து - எடுத்த தேகத்துக்கு அமைத்த பிராரத்தகன்மத்தைப் புசிப்பித்துத் தொலைப்பித்து,—

இங்கு இனி செய் கன்மம் மூலமலம் ஞானத்தால் இடிப்பன் - திட்சோத்தரகாலம் ஏறுகின்ற ஆகாமியத் தையும் ஆணவமலத்தையும் ஞாணுக்கினியினுலே தகித்துப்போடுவன் என்றவாறு.

## 2. நிரம்பவழகியர் :

அ - கை: முன் சொல்லப்பட்ட ஆறு வாக்களிலும் ஆன்மாக்களுக்குக் கட்டுப்பட்டுக் கிடக்கிற கன்மங்களைக் கர்த்தா புசிப்பித்துப் போக்கு கிறபடி எப்படி? என்ற மாணுக்கனுக்கு மேல் அருளிச்செய்கின்ருர்.

இ - ள்: மூன்று திறத்து அணுக்கள் செய்யும் கன்மங்கட்கு முன்னிலை ஆம் மூ இரண்டு ஆம் அத்துவாவின் – மூன்று வகைப்பட்ட ஆன்மாக்களும் அநாதியே செய்த கன்மங்கள் அநாதியே கட்டுப் படுகைக்கு முன்னிலையான சடாத்துவாக்களிலே,—

ஆன்றமுறை அவை அருத்தி அறுத்து மலம் முதிர்வித்து - அவரவர் செய்ததற்குத் தக்கதாக அமைத்து, அமைத்த அடைவிலே அவையிற்றைப் புசிப்பித்துத் தொலைப்பித்து மலத்தையும் பக்குவம்

அரும் பருவம் அடைதலும் ஏ – இந்த ஆன்மாக் களுக்குச் சொல்லுதற்கு அரிதான மிக்க பக்குவம் உண்டாகவே,—

ஆசான் ஆகி தோன்றி - பரமேசுவரன் தனது காருண்ணியத்தினுலே ஆசாரிய மூர்த்தியாக எழுந் தருளிவந்து, —

நுகராதவகை முன் செய் கன்மம் துகள் அறுத்து- முன்பு செய்யப்பட்ட கன்மமாய் அத்துவாவிலே கட்டுப்பட்டுக்கிடக்கிற சஞ்சிதமான புண்ணியபாவங் களையும் இவன் புசியாதபடி நாசம் ஆக்கி,—

அங்கு அத்துவா துடக்கு அறவே சோதித்து - அந்தப் பாசம் நாசம்பண்ணின அவதரத்திலே அத்துவாக்களில் உண்டான தொந்தனைகளையும் அறுத்து.—

ஏன்ற உடல் கன்மம் அநுபவத்தினால் அறுத்து - தேகத்துக்கு அடைத்த பிராரத்த கன்மத்தை அநுபவத்தினாலே நேராக இல்லையாக்கி,—

இங்கு இனி செய் கன்மம் மூலமலம் ஞானத்தால் இடிப்பன் – கன்மங்கள் எல்லாம் போக்கியும் சரீரம் இருக்கையாலே மீளவும் பிராரத்தமும் ஆகாமியமும் வாதனையாலே போகாது; அது போகைக்கு இவ்விடத்திலே மேல்செய்யப்பட்ட ஆகாமியத்தையும் அதற்கு ஏதுவான ஆணவ மலத்தையும் பரமேசுவரன் தன்னுடைய ஞானத்தினாலே இவனுக்கு இல்லையாக்கி விடுவன் என்றவாறு.

*இதனால் சொல்லியது பரமேசுவரன் மூன்று வகைப்பட்ட ஆன்மாக்களும செய்த கன்மம அத்துவாக்களிலே கட்டுண்டு கிடக்கிறவையிற்றை அடைவிலே புசிப்பித்துத் தொலைப்பித்து மலத்தையும பாகம் வருத்தி ஆன்மாவுக்கு மிக்கதொரு பககுவத்திலே ஆசாரிய மூர்த்தியாக எழுந்தருளிவந்து அத்துவ சோதனையினாலே சஞ்சிதத்தையும் அநுபவத்தினாலே பிராரத்தத்தையும மேல் ஏறுகிற ஆகாமியத்தையும் ஆணவமலத்தையும தன்னுடைய சிவ ஞானத்தினாலே போக்குவன் என்னும முறைமையும் அறிவித்தது.*

*'பலவிதம ஆசான்' என்ற திருவிருத்தம் முதல 'மூன்றுநிறத்து அணுக்கள்' என்ற திருவிருத்தம்*

ஈறாக எட்டுத் திருவிருத்தமும் சகலரைப் பற்றிய எனக்கொள்க. இதற்குப் பிரமாணம்:

" மெய்ஞ்ஞானம் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான அச்சகலர்க் கக்குருவாய் - மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்தும் அன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்தும் தான்குருவாய் முன் "

—சிவஞானபோதம்: சூ - 8. வெண்பா 3.

என்னுமதும் கண்டுகொள்க.

'உரைதரும் இப் பசுவர்க்கம்' என்ற திருவிருத்தத்தில் 'சகலர்க்குக் கன்ம ஒப்பில் தரையில் ஆசான் மூர்த்தி ஆதாரமாகித் தரித்தொழிப்பன் மலம் சதுர்த்தா சத்திநிபாதத்தால்' என்ற பதத்திற்கு வியாக்கியானம் இவ்வளவும் வந்துமுடிந்தது. (ம)

## செய்யுள்—262

புறச்சமய நெறிநின்றும் அகச்சமயம் புக்கும்
புகல்மிருதி வழிஉழன்றும் புகலும்ஆச் சிரம
அறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்தும்
அருங்கலைகள் பலதெரிந்தும் ஆரணங்கள் படித்தும்
சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்தும் சென்றால் சைவத்
திறத்தடைவர் இதிற்சரியை கிரியா யோகர்
செலுத்தியபின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் இத்தீட்சையினன்றிப் பரமமுத்தியை அடையப்படாது என்பதும், புறச்சமயத்தினின்றும் அந்தச் சமயவிதியானவனுட்டான சற்கன்மங்களாலே பின்பு

சைவசமய அதிகாரிகளாவர் என்பதும் உணர்த்து கின்றார்.

**என்பது:** புறச் சமய நெறி நின்றும் அகச் சமயம் புக்கும் - உலோகாயதன் பௌத்தன் அருகன் மீமாஞ் சகன் மாயாவாதி பாஞ்சராத்திரி என்னும் தூலமாகிய புறச்சமயங்கள் ஆறினின்றும் சைவம் பாசுபதம் மகா விரதம் காளாமுகம் வாமம் வயிரவம் என்னும் சூக்குமமாகிய உட்சமயம் ஆறினும் புக்கு நின்றும்.—

புகல் மிருதிவழி உழன்றும் - மனு முதல் கௌத மாந்தமான பதினெட்டு ஆசிரியர்கள் தத்தம் பெயர் களால் பண்ணப்பட்ட தன்மசாத்திரம் பதினெட்டின் வழி அநுட்டித்தும்.—

புகலும் ஆச்சிரம அறத்துறைகள் அவை அடைந் தும் - வேதத்தில் சொல்லப்பட்ட பிரமசரியம் முதலிய ரமங்கள் நான்கின்வழிநின்று அநுட்டித்தும்.—

*அவையாவன: நைட்டிகம், பௌதிகம் என பிரமசரியம் இருவிதம. சாதகன, உதாசீனன என இல்லறம் இருவிதம். சபர்மிகன், விகர்மிகன் என வானப்பிரத்தன் இருவிதம. வித்துவான், விவிதுசு, தபசுவி எனச் சந்நியாசி மூவிதமாம். இஃதனறியும, இவை வைதிகத்தில் ஒன்றொன்று நன்னானகாகப் பதினாறுகக் கூறும். அவையாவன: காயத்திரம், பிராமம், பிராசாபத்தியம, நயிட்டிகம எனப் பிரம சரியம் நான்குவிதமாம். வாரத்தா, விருத்திசாலிநீ, விருத்தியாயா, வாமகோசாரம எனக் கிருகபதியும நான்கு விதம் ஆம். வயிரஞ்சம, வாலகில்லியம், தென்பம, (?) என வானப்பிரத்தம் நானகுவிதமாம்.*

*வேகூதகம, குடீசகம், அம்சகம், பரமாம்சகம எனச் சந்நியாசமும் நான்குவிதமாம் என்க.*

அரு தவங்கள் புரிந்தும் - அநுட்டித்தற்கு அரிதாகிய பஞ்சாக்கினி முதலியவற்றினின்று அரிய தபசுகளைப் பண்ணியும்,—

அரு கலைகள் பல தெரிந்தும் - அரிதாகிய கலைஞானங்களை ஆராய்ந்தும்,—

ஆரணங்கள் படித்தும் - இருக்காதி நால்வேதங்களைச் சந்தை இரட்டை முதலிய இலக்கணத்தோடு ஓதியும்,—

சிறப்பு உடைய புராணங்கள் உணர்ந்தும் - வைணவம் நாரதீயம் காருடம் பாகவதம் பாற்மம் வராகம் பிரமம் பிரமாண்டம் பிரமகைவர்த்தம் மார்க்கண்டேயம் பவுடிகம் வாமனம் இலிங்கம் சைவம் ஆக்கினேயம் காந்தம் கூர்மம் மச்சம் என்று சொல்லப்பட்ட சிறப்புடைய பதினெண் புராணங்களை ஓதியுணர்ந்தும்,—

வேத சிரப்பொருளை மிக தெளிந்தும் - வேதாந்தத்தில் சொல்லிய பிருகதாரண்ணியம் முதல் பாரத்துவாசம் அந்தமான முப்பதிற்றிரண்டு உபநிடதத்தினையும் ஓதி மிகவும் தெளிந்தும்,—

சென்றால் சைவத்திறத்து அடைவர் - இங்ஙனம் சொன்ன சமயசாத்திரா நுட்டானை தபோபலத்தாலே சைவ சித்தாந்தமாகிய காமிகாதி இருபத்தெட்டு ஆகமத்தையும் அதிகரித்தற்கு உரித்தாவார்கள்,—

இதில் சரியை கிரியா யோகம் செலுத்தியபின் ஞானத்தால் சிவன் அடியை சேர்வர் - இங்ஙனம் கூறிய ஆகமங்களில் சொல்லியபடியே ஞானுசாரிய னிடத்தில் திட்சையைப் பெற்றுச் சரியை கிரியை யோகங்களை அநுட்டித்து அந்த அநுட்டான தபோ பலத்தினுலே ஞானத்தைப்பெற்று அந்த ஞானத்தால் முத்தியை அடைவார்கள் என்றவாறு.

*இதற்குப பிரமாணம யோகம், சிந்தியம், விசுவ சாதாக்கியம், சுப்பிரபேதம், தேவிகாலோத்தரம், சைவ புராணம் என அறிக.*

2. யா

அ - கை : இப்படி முன் சொல்லப்பட்ட ஞானம், ஆன்மாக்களுக்கு உண்டாம்படி எப்படி? என்றமாணுக்கனேநோக்கி மேல் அருளிச்செய்கின்ருர்.

இ - ள் : புறச்சமய நெறி நின்றும் – உலோகாய தன் முதல் பாஞ்சராத்திரி ஈருகச் சொல்லப்பட்ட புறச்சமயங்களிலே சென்று சென்று அந்தந்தச் சாத் திரம் சொன்ன முறைமையிலே அநுட்டித்தும்,—

அகச்சமயம் புக்கும் - உட்சமயமாகிய பாசுபதம் மாவிரதம் காளாமுகம் வாமம் வயிரவம் என்று சொல்லப்பட்ட அந்த அந்தச் சமயங்களிலே புகுந்து அந்த அந்தச் சாத்திரங்கள் சொன்ன முறைமையிலே அநுட்டித்தும்,—

புகல் மிருதிவழி உழன்றும் – சொல்லப்பட்ட மிருதிவழிகளிலே திரிந்தும்,—

புகலும் ஆச்சிரம அறத்துறைகள் அவை அடைந்தும் - கொண்டாடப்பட்ட ஆச்சிரமமான தன்மநெறிகளைச் செய்தும்,—

அரு தவங்கள் புரிந்தும் - பஞ்சாக்கினி முதலான அரிய தபசுகளை விரும்பிச் செய்தும்,—

அரு கலைகள் பலதெரிந்தும் - அரிய சாத்திரங்கள் பலவும் ஓதி உணர்ந்தும்,—

ஆரணங்கள் படித்தும் – வேதங்களை ஓதியும்.—

சிறப்பு உடைய புராணங்கள் உணர்ந்தும் – நன்மைப்பகுதிகளைச் சொல்லுகிற புராணங்களை ஓதி அறிந்தும்,—

வேதச் சிரப்பொருளை மிக தெரிந்தும் – வேதாங் தத்தின் அத்தங்களை மிகவும் ஆராய்ந்து இதுவே அத்தம் என்று அறுதியிட்டு அறிந்தும்.—

சென்றால் சைவத்திறத்து அடைவர் - இவை யிற்றை வழுவறச் செய்து முடித்தது யாதொரு செனனம், அந்தச் செனனம் போய் மற்றச் செனனத் திலே சைவநெறியைச் சென்று பொருந்துவார்கள்,—

இதில் சரியை கிரியா யோகம் செலுத்தியபின் – சமயத்திலே நின்று சரியை கிரியா யோகங் செய்து அவையிற்றின் முதிர்ச்சியினாலே ஞானத்தைப் பெற்று.—

ஞானத்தால் சிவனடியைச் சேர்வர் – அந்த ஞானத்தினாலே சிவனுடைய சீபாதத்தைப் பொருந்து வார்கள் என்றவாறு.

என்னவே கிரியையாலே மோட்சம் என்ற சைவரை மறுத்து ஞானத்தினாலே மோட்சம் என்றது எனக்கொள்க. இதற்குப் பிரமாணம் :

" பல்பணி ஞான காரணம் என்னில்
தொல்பணி தொறும்பயன் தொடுப்பத னாலும்
ஒருபணி செய்யாச் சிரபுரச் சிறுவரும்
அரச ராய தருணத் தலைவரும்
முதிர்பர சமயத் திதமுறும் அரசரும்
ஞானம் பெற்ற நன்மையி னாலும்
ஈனமில் பணிஅருட் கேதுவன் றென்றால்
ஞானோற் பத்தி நிமித்தம்இத் தொழில்என
ஏனோர்க் கிறைநூல் இயம்பிற் றென்றும் "

—சங்கற்ப - சைவவாதி நிராகரணம்.

என்றும்,

" தவஞ்செய்தார் என்றும் தவலோகம் சார்ந்து
பவம்செய்து பற்றறுப்பா ராகத் - தவம்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றார்சூழ் சொல்லுமாம் கண்டு "

—சிவஞானபோதம். சூத் - 8, வெண்பா - 1.

என்னுமதும் கண்டுகொள்க.

இதனால் சொல்லியது உலோகாயதன், புத்தரில் சவுத்திராந்திகன், யோகாசாரன், மாத்துமிகன், வைபாடிகன், அமணரில் நிகண்டவாதி, ஆசீவகன், மீமாஞ்சகரில் பட்டாசாரியன், பிரபாகரன, நையாயிகன், மாயாவாதி, பாற்கரியன, நிரீச்சுரசாங்கியன, பாஞ்சராத்திரி ஆகப் புறச்சமயத்தில் பேதம் பதினாலும்; அந்தந்த முறைமைகளிலே நின்றும் பாசுபதம் மகாவிரதம் காளாமுகம் வாமம் வயிரவம் என்கிற உட்சமயத்தின் பேதமைந்திலும்புக்கு அந்தந்த முறைமை

களிலே நின்றும் 'புகல்மிருதி' என்றபதமுதல் 'வேதச் சிரப்பொருளை மிகத் தெளிந்தும்' என்ற பதம் ஈருக உழன்றும் அடைந்தும் புரிந்தும் தெரிந்தும் படித்தும் உணர்ந்து மிகத்தெளிந்தும் இங்ஙனம் சொல்லப் பட்ட முறைமைகளை வழுவறச் செய்து முடித்தால் சைவநெறியைப் பொருந்துவார்கள் என்றும், இதிலே நின்று சரியை கிரியை யோகங்களை அனுட்டித்தால் அந்த முதிர்ச்சியினுலே ஞானம் உண்டாய் அந்த ஞானத்தினுலே சிவனுடைய ஸ்ரீபாதத்தை இரண் டறச் சென்று பொருந்துவர்கள் என்னும் முறைமை யும் அறிவித்தது. (கக)

செய்யுள்—263

இம்மையே ஈரெட்டாண் டெய்திஎழி லாரும்
ஏந்திழையார் முத்தியென்றும் இருஞ்சுவர்க்க முத்தி
அம்மையே யென்றுமுத்தி ஐந்து கந்தம்
அறக்கெடுகை என்றும்அட்ட குணமுத்தி என்றும்
மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தி என்றும்
விவேகமுத்தி என்றும்தன் மெய்வடிவம் சிவத்தைச்
செம்மையே பெறுகைமுத்தி என்றும்செப் புவர்கள்
சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங் கியாமே.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் உலோகாயதன் முதலியோர் முத்தி சிறப் பின்மை என்றும், சித்தாந்தமுத்தியே மேலானமுத்தி என்றும் உணர்த்துகின்றூர்.

**என்பது:** இம்மையே ஈர் எட்டு ஆண்டு எய்தி எழில் ஆரும் ஏந்து இழையார் முத்தி என்றும் - இம்மையிலே யௌவனத்தோடு பதினறு வயதினே

அடைந்து அழகு நிறைந்த மங்கைப் பருவத்தை யடைந்த ஸ்திரீகளைக் கூடி அவர்களிடத்துள்ள இன்பங்களை அநுபவிப்பதே முத்தியென்று **உலோகாயதனும்,—**

இரு சுவர்க்கமுத்தி அம்மையே என்றும் - வேதத்தில் கிரியா பாதத்தைப்பற்றிச் சோதிட்டோமம் முதலிய யாகாதி கன்மங்களால் சுவர்க்கத்தை அடைந்து அங்குள்ள போகங்களை அநுபவிக்கிறதே முத்தியென்று **மீமாஞ்சகனும்,—**

முத்தி ஐந்து கந்தம் அற கெடுகை என்றும் - புத்தி தத்துவம் முதல் கீழுள்ள தத்துவம் அடங்கலும் கணிகமாய் இருக்கும் ஆன்மாவும் ஈசுரனும் என்பது ஒன்றில்லை என்றும் சதுர்ப்பூத உபாதாய கூட்டர வென்னும் உருவுக்கந்தமும் சுகதுக்க மோகாத்மக மாகிய புத்தியினுடைய சந்ததியாகிய வேதனைகந்தமும் பஞ்சேந்திரியமும் மனமும் ஆகிய குறிப்புகந்தமும் மனோவாக்குக் காயமாகிய பாவனைகந்தமும் இந்த நாலு கந்தங்களிலும் பொருந்தி அறிகின்ற விஞ்ஞான கந்தமும் இந்தப் பஞ்சகந்தமும் தோன்றியழிதல் பந்தமென்றும் இந்தநூலை உபதேசித்த சுகதபகவானையே தெய்வமென்று வழிபட்டு இவைகளை அறிந்து இந்தப் பஞ்சகந்தமும் அறக்கேடாக அழிதலே முத்தி என்னும்

அட்டகுணம் முத்தி என்றும் - அட்ட குணத்தைப் பெறுதலே முத்தி என்னும் **ஆருகதனும்,—**

*அவையாவன: அனந்தஞானம், அனந்ததரிசனம், வேதநியமம், ஆயுஷ்யம், மோகனுவர்ணியம, நாமம்,*

கோத்திரம், அந்தராயம் ஆக எட்டு. இவையிற்றில் மதி, சுருதம், அவமதி, மணபரியயம், கேவலம் என அநந்தஞானம ஐந்து விதப்படும். சட்சுதரிசனம், அசட்சுதரிசனம், அவதிதரிசனம, கேவலதரிசனம், நித்திரை, நித்திரா நித்திரை, பிறசலே, பிறசலா பிறசலே, தியானக்கிராந்தி எனத் தரிசனுவரணியம் ஒன்பது விதப்படும். சாதவேதநீயம், அசாதவேத நீயம் என வேதநீயம இரண்டுவிதப்படும். தேவா யுட்சியம், திரியக்காயுட்சியம், மனுடாயுட்சியம், நாகா யுட்சியம என நான்கு பேதப்படும. மித்தியாத்துவம், மிருகவுமித்தியாத்துவம், சம்மியற்க பிறகனுநி அந் தானுசத்தி குரோதம் மானம மாயாலோபம் அப் பிரத்தி ஆக்கியானக் குரோதம ஆச்சுவலனம் அநிக் குரோதம அதிமானம் அதிமாயா அதிலோபம் கிரிப்பு அரதிரதி சோகம பயம நிந்தை மாதாவேதம் புருட வேதம அவிவேதம் சத்தாவலோகனம் மாநிரு தரிசனம மசாகார கிரகணம் தரிசனம ஞானமோன மோகனுவரணியம் என இருபத்தெட்டு பேதப்படும். நாமம் தொண்ணூற்றுமூன்று பேதப்படும். அவை யாவன: வப்பிரமம் கந்தம் இரதம் பரிசம் உத்தி யோகம் உச்சுவாசமவாதாம பரியாதநி அபரியாதநி சூக்குமம வியாயோகநி பிரசத்தம அப்பிரசத்தம் சுபக துற்பக ஆதேய அனுதேய சத்தி அசத்தி அப கிதநி அகுருலகு உபகாதா பாகாதா அநுபூர்வி இவைமுதலாகப் பிண்டாபிண்ட பிரகிருதி பேதத்தி ஞலே அவைகளை அறிக.

உயர்ந்தகோத்திரம் தாழ்ந்தகோத்திரம் எனக் கோத்திரம இரண்டுவிதம். தானந்தராயம் இலா பாந்தராயம் போகாந்தராயம உபபோகாந்தராயம்

*வீரியாயந்தராயம் என அந்தராயம் ஐந்து பேதப் பட்டுவரும். இந்த அட்டவித தன்மங்களை விசாரித் தறியின் நூற்றுநாற்பத்தெட்டு எனஅறிக. விரிக்கிற் பெருகும.*

மெய்ம்மையே பாடாணம் போல்கை முத்தி என்றும் - உண்மையாகவே கருவி கரணுதிகள் எல் லாம் கழன்று சுகதுக்கங்கள் அற்றுப் பாடாணம் போலக் கிடக்கிறதே முத்தி என்னும் **பாடாண வாதியும்,—**

விவேகமுத்தி என்றும் - சமுத்திரத்தினிடத்தில் திரைதோன்றி அதனில் ஒடுங்குமாறுபோலப் பிரமத்தி னிடத்தில் சகம்தோன்றி அதனில் ஒடுங்கும் என்று மாயா இலக்கணமான பிரமத்தை வேதாந்த ஞானத் தால் விவேகித்து அறிகிறதே முத்தி என்னும் மாயா **வாதியும்,—**

தன் மெய் வடிவு ஆம் சிவத்தை செம்மையே பெறுகை முத்தி என்றும் செப்புவர்கள் - தமக்கு உண்மையே வடிவமான சதாசிவமூர்த்தியினுடைய சொருபத்தைப் பெற்றுப் பஞ்சகிருத்தியம் பண்ணு மது முத்தியென்னும் **சிவசமவாதியும்,** இப்படிச் சம யங்கடோறும் முத்தியைப் பலவாகக் கூருநிற்பார்கள்: இவையெல்லாம் சுபாவமுத்தி என்று அறிக.—

சிவன் அடியை சேரும் முத்தி செப்புவது இங்கு யாம் ஏ - தீட்சையினுலே ஆணவாதி பாசச்சேதம் வந்து சிவனைப்போலச் சர்வஞ்ஞத்துவாதி குணங்கள் அபிவியத்தமாய் அழியாத சுவானந்தானுபூதியைப் பெறுகிறதே யாம் சொல்லும் மேலான சுபாவமுத்தி என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் சிந்தியம், மிருகேந்திரம், நிச்சுவாசம், "ஆன்மச்சேதோ" என்னும் சுலோகம், 'அரிவையரின் புறுமுத்தி' என்னும் சார்பு நூல் (சிவப் பிரகாசம் - செய் - 50) என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

அ - கை : மேல் முத்தித்தொகை அருளிச் செய்கின்றார்.

இ - ள் : இம்மையே ஈர் எட்டு ஆண்டு எய்தி எழில் ஆரும் ஏந்திழையார் முத்தி என்றும் - இம்மை யிலே பதினாறு வயதைப் பொருந்தி அழகினையும் பொருந்தி ஆபரணங்களையும் தரித்திருப்பதாய் உள்ள ஸ்திரீகளுடனேகூடி அவர்களிடத்து உண்டான சுகத்தை அநுபவிக்கிறதே முத்தி என்னும் உலோகா யதன் முறைமையும்,—

இரும் சுவர்க்கம் முத்தி அம்மை என்றும் - எக்ஞாதி கன்மங்களைச் செய்து மறுமையிலே சுவர்க் கத்தைப் பெறுகிறதே முத்தி என்னும் பட்டாசாரியன் முறைமையும்,—

முத்தி ஐந்து கந்தம் அறக்கெடுகை என்றும் - உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்கிற பஞ்சகந்தங்களும் நேராகக் கெடுகிறதே முத்தி என் னும் பௌத்தரில் சவுத்திராந்திகன் முறைமையும்,—

அட்டகுணம் முத்தி என்றும் - எட்டு பதினேழு ஆறு என்னும் மூன்றுவகையாய் உள்ள குணங்களை விடுகிறதே முத்தி என்னும் சமணரில் நிகண்டவாதி முறைமையும்,—

மெய்ம்மையே பாடாணம் போல்கை முத்தி என்றும் - உண்மையாகவே ஆன்மா ஒன்றும் அறியாமல் கற்களைப்போலே கிடப்பதே முத்தி என்னும் அகச்சமயத்தில் பாடாணவாதி முறைமையும்,—

விவேக முத்தி என்றும் - இந்தச் சீவான்மாவுக்கு விவேக ஞானம் உண்டாகிறதே முத்தி என்னும் மாயாவாதி முறைமையும்,—

தன் மெய் வடிவு ஆம் சிவத்தை செம்மையே பெறுகை முத்தி என்றும் - ஆன்மா தனக்குள்ள இந்தச் சரீரமானது சுவரூபத்தைப் பெற்று நித்தியமாய் இருக்கிறதே முத்தி என்னும் அகச்சமயத்தில் சமவாதி முறைமையும்,—

செப்புவர்கள் - இப்படிப் பலவாகச் சொல்லுவார்கள்; இப்படிச் சொல்லுகிற இவை குற்றத்தைப் பொருந்தின முத்திகளாம்.—

சிவன் அடியை சேரும் முத்தி செப்புவது இங்கு யாம் ஏ - ஆகையால் பரமேசுவரனுடைய சீபாதத்தைப் பெறுகிற முத்தியே இவ்விடத்தில் முத்தி என்று சொல்லப்படுவதும், யாம் கொள்ளப்படுவதும் அதுவே என்றவாறு.

*'இம்மையே ஈரெட்டாண்டு எய்தி எழிலாரும் ஏந்திழையார் முத்தி' என்றது உலோகாயதன். பிரத்தியட்சம் ஒழிந்து அனுமானம் முதலானவை கொள்ளாதபடியாலே இம்மைப்பயனாகிய மகளிரிடத்துச் சிற்றின்பமே முத்தியென்று கொண்டான் எனக் கொள்க. இதற்குப் பிரமாணம் :*

"ஊடுவ துணர்வ துற்ற
கலவிமங் கையரை உள்கி
வாடுவ தடியில் வீழ்ந்து
வருந்துவ தருந்த வம்பின்
கூடுவ துணர்வு கெட்டுக்
குணமெலாம் வேட்கை யேயாய்
நீடுவ தின்ப முத்தி
இத்தில்நின் றூர்கள் முத்தர்"
—சித்தி - பரபக்கம் - உலோகாயதன்மதம் 20.

என்றும், அவன் மறுமைப்பயன் கொள்ளான் என்ப தற்குப் பிரமாணம் :

"வீட்டினை உளதென் றோடி
மெலிவதிங் கென்னை வீடு
காட்டினோர் கண்டோர் கேட்டோர்
கரியவை உண்டேல் காட்டீர்
நாட்டினில் அரசன் ஆணைக்(கு)
இசையவே நடந்து நாளும்
ஈட்டிய பொருள்கொண் டிங்கே
இன்பத்துள் இசைந்தி டீரே"
—சித்தி - பரபக்கம் - உலோகாயதன்மதம் 21.

என்னுமதும் கண்டுகொள்க.

'இரும் சுவர்க்கம் முத்தி அம்மை' என்றது பட்டாசாரியன். இம்மையிலே நித்திய கன்மங்களைச் செய்ய நன்மைப் பகுதிகள் உண்டாம என்றும், சோமயாகம் முதலா உள்ள யாகங்களைச்செய்ய மறுமையிலே மகத்தாகிய சுவர்க்கத்தைப் பெறுகிறதே முத்தியென்றும் கொண்டான் எனக்கொள்க. இதற்குப் பிரமாணம் :

"நீதியா நித்த கன்மம்
நிகழ்த்திடச் சுபத்தை நீங்கார்

தீதிலா இச்சா கன்மம்
செந்தழல் ஓம்பிச் செய்ய
ஏதுதான் வேண்டிற் றெல்லாம்
எய்தலாம் சோம யாகம்
ஆதிதான் ஆசை வீசி
அமைத்திட வீட தாமே ''

—சித்தி - பரபக்கம் - பட்டாசாரிமதம் 11.

என்ற திருவிருத்தத்தில் கண்டுகொள்க.

அவன், செயல்களே முத்தியைக் கொடுக்குமது ஒழிந்து ஒரு கர்த்தா உண்டு என்று கொள்ளான என்பதற்குப பிரமாணம் :

'' கருதிய கன்ம ஞானம்
இரண்டும்கா லாகக் கொண்டு ''

—சித்தி - பரபக்கம் - பட்டாசாரிமதம் 12.

என்ற திருவிருத்தத்தில் கண்டுகொள்க.

'முத்தி ஐந்து கந்தம் அறக்கெடுகை' என்றது சவுந்திராந்திகன். பிருதிவி அபபு தேயு வாயு என்ற பூதரூபம் நாலும் அறிவு கந்தம இரதம வன்னம் என்கிற உபாதான ரூபம நாலும் ஆக ரூபகந்தம் எட்டு; குசலாவேதனை அகுசலாவேதனை குசலா குசலாவேதனை என்கிற வேதனாகந்தம் மூன்று, சோத்திரம் தொக்கு சட்சு சிங்குவை ஆக்ராணம் மனம் என்கிற குறிப்பு கந்தம் ஆறு; பொய்சொல் லல் கோள்சொல்லல் கோபித்துச்சொல்லல் பயனில சொல்லல் என்கிற வாக்கின் குணம நாலும், களவுக் குப்போகல் வறிதேதொழில்செய்தல் கொலைசெய்தல் ஆகக் காயத்தின் குணம் மூன்றும்,

காமப்பற்று ஆசை என்கிற மனதின் குணம் மூன்றும் ஆகத் தீக்குணம் பத்து; மெய்யுரைத்தல் வார்த்தை இனியனகூறல் பயன்படுசொல் என்கிற வாக்கின் குணம் நாலும், பள்ளி வலம்வருதல் தவம் புரிதல் தானம்செய்தல் என்கிற காயத்தின் குணம் மூன்றும், அருள் நினைவு ஆசையறுத்தல் தவப் பற்று என்கிற மனத்தின் குணம் மூன்றும் ஆக நற்குணம் பத்து; ஆக பாவனை கந்தம் இருபது. சத்த பரிச ரூப ரச கந்தம் சித்தம் என்கிற விஞ்ஞான கந்தம் ஆறு. ஆக இங்ஙனம் நாற்பத்தொன்றாக எண்ணப்பட்டு வருகிற பஞ்சகந்தங்கள் ஐந்தும் காரணங்கிடக்கக் காரியம் கிடக்கும் என்பது மிருத் துரையில் வழக்குமாய்ப் பந்தத் துக்கமுமாய் இது குற்றவீடு என்றும் கந்தங்கள் ஐந்தும் நேராகக் கெட்டு வீட்டின்பத்தை அடையும் என்பதுவே முத்தி இன்பமாகக் கொண்டான் எனக்கொள்க. இதற்குப் பிரமாணம் :

"ஓங்கிய உருவ மோடும்
வேதனை குறிப்பி னோடும்"

—சித்தி - பரபக்கம் - சௌத்தி - மதம் 30.

என்னும் திருவிருத்தத்தில் கண்டுகொள்க.

'அட்டகுணம் முத்தி' என்றது நிகண்டவாதி. அட்டகுணம் முதலாய் உள்ள மூன்றுவகைக் குணங் களையும் விடுகிறதே முத்தி என்று கொண்டான் எனக்கொள்க.

மூன்றுவகைக் குணமாவன ஞானாவர்ணியம் தரிச னாவர்ணியம் வேதநீயம் மோகநீயம் ஆயுஷியநாமம்

கோத்திரநாமம் ஆயுஅந்தராயம் காயஅந்தராயம் என்கிற குணங்கள எட்டும, பசித்தல் தாகம் பயம் செற்றம் உவகை மோகம சிந்தனே பழித்தல் நோய் நசித்தல் வேர்வை கேதம் மதம் அதிசயித்தல் புசிப்பு பிறப்பு உறக்கம் என்கிற குணங்கள் பதினேழும், அர்ச்சிகம இந்தி ஆரம் சோகம் சுகிச்சை பயம் எனகிற குணம் ஆறும் ஆக இங்ஙனம் சொல்லப் பட்ட முப்பத்திரண்டு குணம் முதலான மூவகைக் குணங்களேயும விட்டுப் பூர்வத்தில் உண்டாகிய கன்மங்களேப் புசித்துத் தொலேந்த அவதரந்தானே வீட்டின்பம் எனக் கொளக.

முதற்சொன்ன ஞானுவர்ணியம் ஆதியாயுள்ள எட்டுக்கும் பிரமாணம் :

" ஈறி லாதன அனந்த ஞானமுதல்
எண்கு ணங்களெனும் ஒண்குணம்
மாறி லாதமதி மேவு சீதமென
மன்னி வானவர் வணங்கவே
வேறு லாவுகுண ஞான ஆவரணி
ஆதி எட்டினேயும் விட்டசீர்
ஏறு பான்மையுடை நீடு வாழருகன்
எங்க ளுக்கிறைவன் என்றனன் "

எனவும்,

" பசித்தல் தாகபயம் செற்ற மோடுவகை
மோக சிந்தனே பழித்தல்நோய்
நசித்தல் வேர்விஞேடு கேத மோடுமதம்
வேண்டல் ஈண்டதி சயித்தலும்
புசிப்பு வந்திடு பிறப்பு றக்கமிவை
விட்டொ ரட்டகுண பூதஞய்
வசித்த வன்னுலகின் மேலிருந் தொருசொல்
இகல னுக்கருளும் என்றனன் "

—சித்தி - பரபக்கம் - நிகண்டவாதிமதம் - 2, 4.

எனவும், மூன்றாவது சொன்ன அர்ச்சிகம் ஆதியாய் உள்ள குணங்கள் ஆறுக்கும்,

“ ஏணும் ஒன்றுடைய வாகி எங்குமணு
வாயி ரும்புகல் மரங்களும்
பூணும் அங்குருவெ லாமு மாகுமிவை
புற்க லப்பொருள்கள் என்னலாம்
காணும் அங்கறு வகைத்தொ ழில்களவை
கட்டு விட்டநெறி கன்மமேல்
மாண நின்றுவரு மாறி மாறிமுன்
வகைந்த துண்டுவிட மாட்சியே ”

—சித்தி - பரபக்கம் - நிகண்டவாதிமதம் 8,

எனவும் வரும் பிரமாணங்கள் கண்டுகொள்க.

‘மெய்ம்மையே பாடாணம் போல்கை முத்தி’ என்றது பாடாணவாதி. அறிவிலாதவர்கள் ஒறுத்தப் பட்டுக் கிடக்குந்தன்மைபோல ஆன்மாச் சுத்தாவத்தையிலும் ஒன்றும் அறியாமல் கல்லைப்போலே கிடக்கிறதே முத்தி என்று கொண்டான் எனக்கொள்க. இதற்குப் பிரமாணம் :

“ கொத்தை மாந்தர் உய்த்துறும் துயில்போல்
காட்சி என்னக் காணாத் துயரம்
மாட்சியை முத்தி எனவகுத் தனரே ”

சங்கற்ப - பாடாணவாதி சங்கற்பம்.

என்னுமதும் கண்டுகொள்க.

“விவேகமுத்தி” என்றது மாயாவாதி. நின்மலமாய் இருக்கிற ஆகாயத்தை மேகம் மறைந்த தன்மைபோல, சுத்தமாய் இருக்கிற பரப்பிரமம் மாயா உபாதிகளினாலே வாதிக்கப்பட்டு இந்த உடலிலே மயங்கி

டினமா டீவது; அந்த ஆகாயத்திலே ஒரு வாயுத்தோன்றி அந்த மேகத்தை நீக்கின தன்மைபோலே, தன்னிடத்திலே ஒரு விவேகஞானந் தோன்றி அந்த மாயா அவத்தையை நீக்குகிறதே முத்தி என்று கொண்டான் எனக்கொள்க. இதற்குப் பிரமாணம் :

> ரியற் பந்தப் பவ்வம தகல
> விண்முதல் தந்த கொண்மூப் படலத்து
> இருள்அற உதித்த கால்தக விவேகம்
> தன்னில் தோன்றிச் சாதகம் அனைத்தையும்
> மன்னகப் பிரிப்பும் மடியிழை வாங்கலும்
> போல ஞாலம் பொய்யறக் கழீஇத்
> தானே தானுய்த் தன்னில் தன்னைத்
> தானே கண்டு தன்னலம் உற்று ''
>
> —சங்கற்ப - மாயாவாதி சங்கற்பம்.

என்னுமது கண்டுகொள்க.

“ தன்மெய் வடிவாம் சிவத்தைச் செம்மையே பெறுகை முத்தி ” என்றது சமவாதி. வேட்டுவாளி ஒன்றும் அறியாத பச்சைப் புழுவை எடுத்துத் தற் சொரூபம ஆக்கின தனமைபோல, ஒனறும அறியா மல் கிடக்கிற ஆனமாவையும சிவனுடைய ஞானம் எடுத்துத் தற்சொரூபம் ஆக்கி அந்த உடலே நித்தத் துவத்தைப் பெறறிருப்பது முத்தி எனக்கொண்டான் எனக் கொள்க. இதற்குப் பிரமாணம் :

> '' முன்னேன் தனது முதிர்ஒளி ஞானம்
> அறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த
> வண்டென உயிரைக் கொண்டிடும் உயிரது
> தன்னை நோக்கித் தான்அது வாகி
> ஐவகைத் தொழிலும் மெய்வகை உணர்வும்

பிரியா வாறு பெற்றுத்
திரியாப் பெரியோர் திரட்சிசேர்ந் திடுமே ''

—சங்கற்ப - சிவசமவாதி சங்கற்பம்.

என்னுமதும் கண்டுகொள்க.

'செப்புவர்கள்' என்றது உலோகாயதன் முதலாயுள்ள எழுவகை முத்தியையும் குற்றத்தை உடைய முத்தி எனருர் எனக்கொள்க. அவை வருமாறு :

உலோகாயதன் முத்தி குற்றத்தைப் பொருந்தின முத்தி என்றது, பனறியானது கன்மத்துக்கு ஈடாக விட்டை விரும்பிப் புசிக்கும் தன்மைபோல, அசுத்தமாகிய மகளிரிடத்து உண்டாகிய சிற்றின்பத்தையும் கன்மத்துக்கு ஈடாக விரும்பிப் புசிக்கையினுல் எனக்கொள்க. இதற்குப் பிரமாணம் :

'' ஆசை யுற்றுழல் சூக ரங்கள் அசுத்த மேவி ''

—சித்தி - பரபக்கம் - உலோகாயதன்மறுதலை 28.

என்கிற திருவிருத்தத்தில் கண்டுகொள்க.

பட்டாசாரியன் முத்தி குற்றத்தைப் பொருந்தின முத்தி எனறது, கனமத்தினுலும் ஞானத்தினுலும் மோட்சம் என்று சொல்லுகையில் கன்மத்தினுலே ஆசை உண்டாய் அதனுலே முத்தி உண்டாகாது ஆகையினுல் எனக் கொள்க. இதற்குப பிரமாணம் :

'' கருமங்கள் ஞானமது வுடன்நின்ற லான்மருவு
கதிதங்க லாகும் எனின்நீ ''

—சித்தி - பரபக்கம் - பட்டாசாரிமறுதலை 10.

என்னும திருவிருத்தத்தில் கண்டுகொள்க.

சவுத்திராந்திகன் முத்தி குற்றத்தைப் பொருந்தின முத்தி என்றது, கருப்பூர விளக்குப்போலக் கந்தம் ஐந்தும் அறக் கெடுகையினுலே பெறுவான் இல்லாதபடியினுல் எனக்கொள்க. இதற்குப் பிரமாணம:

''ஐந்துகந்தஞ் சந்தானத் தழிதல்பந்த துக்கம்''

—சித்தி - பரபக்கம் - சௌத்தி - மறுதலை 39.

என்னும் திருவிருத்தத்தில் கண்டுகொள்க.

நிகண்டவாதிமுத்தியைக் குற்றம் பொருந்தின முத்தி என்றது, குணங்களை விட்ட இடம் தவம் ஆகாது என்பதாலும், பூர்வகன்மம் நிச்சயித்துப் புசிக்கைக்கு இவ்விடத்து ஆன்மாவுக்குத் தனக்கு என வேறு ஓர் அறிவு இல்லாதபடியாலும் எனக் கொள்க. இதறகுப் பிரமாணம :

'' ஆறு காரி யங்கண் மாற
வேத வங்க ளாமெனின் ''

—சித்தி - பரபக்கம் - நிகண்டவாதிமறுதலை 11.

என னும திருவிருததததிலும,

'' பூர்வ கன்ம மற்றி டப்பு சித்த பின்பு ''

என்னும் திருவிருத்தத்தில்,

'' தெண்கடல்
நீர்வ றந்த பின்பு பூளை மீன ருந்த நின்றதே ''

—சித்தி - பரபக்கம் - நிகண்டவாதிமறுதலை 13.

என்னுமதும் கண்டுகொள்க.

பாடாணவாதிமுத்தியைக் குற்றம பொருந்தின முத்தி என்றது, அவன் கேவலப்பட்டுக் கிடக்கிறதை முத்தி என்று சொல்லுகையினுல் அது முத்தியாகா தெனக்கொள்க. இதற்குப் பிரமாணம் :

" காட்சி என்னக் காணுத் துயர
மாட்சியை முத்தி எனவகுத் துரைக்கில்
கரணு பாவம் மரணம் கருமரம்
ஏய்ந்தவர் முத்தி சேர்ந்தவர் அன்றே
அனைய கதிக்கோர் முனைவரும் வேண்டா
தனிதரு துயரம் எனும்இது திடமே
பாடா ணத்திற் கூடா முத்தி "

—சங்கற்ப - பாடாணவாதி நிராகரணம்.

என்னுமதும் கண்டுகொள்க.

மாயாவாதிமுத்தியைக் குற்றத்தைப் பொருந்தின முத்தி எனறது, இவனிடத்திலே தோன்றின விவேகஞானம முன்பே உள்ளதாமாகில் ; மயக்கம்வர வழககில்லை; பின்பு உண்டானதா ஆகாயப்பூப்போல இல்லாதது உண்டாகாது ஆகை யால் எனக்கொள்க. இதற்குப் பிரமாணம :

" பந்தம தகல முந்து விவேகம்
வான்வளி எனத்தனில் தானே தோன்றின்
முன்புள தாயின் மயங்கா திலதெனின்
பின்புள தாகா திலதுள தெனின்வெளி
மலரது தருமணம் "

—சங்கற்ப - மாயாவாதி நிராகரணம்.

;ண்டுகொள்க.

சமவாதிமுத்தியைக் குற்றத்தைப் பொருந்தின முத்தி என்றது, அருவினைப்பொருந்தின ஆன்மாக்க ளுடைய மாயாதேகம தானே நித்தியதத்துவத்தைப்

பெற்றிருக்கிறது பதமுத்தியாம்; அது ஒழிந்து சாயுச்சியம ஆகாது: ஆகையினுலும் யாதொரு யாதொரு சரீர தொந்தனே உள்ளமட்டும மூனறு மலங்களும நீங்காது ஆகையினுலும எனக்கொளக. இதற்குப் பிரமாணம் :

“ முத்தி உற்ற நற்றவர் அவையிடைச்
சேர்வர் என்றனே சார்தரு முத்தி
சாலோக் கியமோ சாயுச் சியம்எனில்
பந்த முற்ற கந்தல கழித்த
அறிவிஞே டறிவு பிறியாப் பெற்றி
வேண்டும் என்றதற் கீண்டிவர் இவ்வாறு
இருப்பர் என்பதற் குருத்தான் வேண்டும் ”

—சங்கற்ப - சிவசமவாதி நிராகரணம்.

என்னுமதும் கண்டுகொள்க.

‘சிவனடியைச் சேரும் முத்தி செப்புவது ரகுயாமே’ என்றதற்குப் பிரமாணம :

“ அஞுதிமுத்த ஞய்ப்பரஞய் அசலஞய் எல்லா
அறிவுதொழில் அநுக்கிரகம் உடையஅரன் கன்மம்
நுஞுதிகமற் ஞெத்தவிடத் தேசத்தி நிபாதம்
நுழைவித்து மலங்களெலாம் நுங்க நோக்கி
மஞுதிகர ணங்களெலாம் அடக்கித் தன்னே
வழிபடுநல் லறிவருளி மாக்கருணைக் கையால்
இஞுதபிறப் பினில்நின்றும் எடுத்து மாருு
இன்பமுத்திக் கேவைப்ப னெங்கள்முத்தி யிதுவே”

—சித்தி - பரபக்கம் - சௌத்தி - மறுதலே 40.

எனனுமதும் கண்டுகொள்க.

இதஞல் சொல்லியது உலோகாயதன் முதலாயுள்ள சமயிகள கொள்ளப்படும் முத்திகள் குற்றத்தைப் பொருந்தின முத்தி எனறும்,

*முத்தி என்று சொல்லப்படுவது பரமேசுவரனுடைய சீபாதத்தைப் பொருந்துவதே முத்தி யென்னும் முறைமையும அறிவித்தது.* (கஉ)

செய்யுள்—264

**ஓதுசம யங்கள்பொரு ளுணரு நூல்கள்**
**ஒன்றேடொன் றெவ்வாமல் உளபலவும் இவற்றுள்**
**யாதுசம யம்பொருள்நூல் யாதிங் கென்னில்**
**இதுவாகும் அதுவல்ல தெனும்பிணக்க தின்றி**
**நீதியினல் இவையெல்லாம் ஓரிடத்தே காண**
**நின்றதுயா தொருசமயம் அதுசமயம் பொருள்நூல்**
**ஆதலினல் இவையெல்லாம் அருமறைஆ கமத்தே**
**அடங்கியிடும் அவையிரண்டும் அரனடிக்கீழ்**
**[அடங்கும்.**

**1.** மறைஞானசம்பந்தர் :

மேல் இந்தச் சித்தாந்தமே சிறப்புடைத்து என்று உணர்த்துகின்றார்.

**என்பது:** ஓது சமயங்கள் பொருள் உணரும் நூல்கள் ஒன்றேடு ஒன்று ஒவ்வாமல் உள பலவும் இவற்றுள் யாது சமயம் பொருள்நூல் யாது இங்கு என்னில் - இப்படிப் பலவாகச் சொல்லப்பட்ட சமயங்களும் அதற்கு ஏற்ற தேவதைகளும் அதற்கு ஏற்ற சாத்திரங்களும் ஒன்றுக்கொன்று ஒவ்வாமல் மாறுபட்டு முன்பின் மலேவாய் இருப்பன அநேகம் உள; இவற்றுள் யாது மேலான சமயம்? யாது மேலான பொருள்? யாது மேலான சாத்திரம்? என்று கேட்கிறாயாகில்,—

இது ஆகும் அது அல்லது எனும் பிணக்கது இன்றி நீதியினால் இவை எல்லாம் ஓர் இடத்தே காணநின்றது யாது ஒரு சமயம் அது சமயம் பொருள் நூல்,—

> '' புன்சமய நூலும் சிலரால் புகல்வித்தான்
> தன்கருணை யாலமலன் தான் ''

> '' ஒற்றைவரி மற்றைவரி எல்லாம் ஒருவனே
> கற்பிக்கக் கண்டோமே காண் ''

> '' பவுத்தரெழு வாயான் மாதிபயின் றுய்ந்தார்
> சிவத்தையடை வார்சைவம் சேர்ந்து ''

என்னும் திருவாக்கினானே இந்தச் சமயமே மேலான சமயம் இந்தச் சமயப்பொருளே மேலான பொருள் இந்தச் சமய சாத்திரமே மேலான சாத்திரம் இவை கட்கு அந்நியமாயிருக்கிற அந்தச்சமயம் அந்தச்சமய சாத்திரம் அந்தச்சமயிகளுடைய பந்தம் மோட்சங் கள் இவையெல்லாம் அறிந்து அளவிட்டு நிச்சயித்துச் சொல்லப்பட்டு இப்படிப்பட்ட சிறப்புடைய அந்தச் சமயநிலையை யாவை சில சமயங்களால் அறிந்து அள விட்டுச் சொல்லப்படவில்லை அதுவே உயர்ந்த சமயம் அதுவே உயர்ந்தபொருள் அதுவே உயர்ந்த நூல் ஆகையால் இப்படிப்பட்ட சமயத்துள் துணிந்து கூறப்பட்டதே பரமமான மோட்சம்.—

ஆதலினால் இவை எல்லாம் அருமறை ஆகமத்தே அடங்கியிடும் - இச்சிறப்பினையுடையது ஆதலினாலே பிறமதங்களை அறிந்து சுவமதத்தாபனம்பண்ணி முன் பின் மலைவின்றிக் குற்றமின்றி இருத்தலால் இச்சமயப்

பொருள்கள் எல்லாம் வேதாகமங்கள் ரண்டிலும் அடங்கியிருக்கும்,—

அவை இரண்டும் அரன் அடிக்கீழ் அடங்கும் - இந்த வேதாகமங்களாகிய இரண்டும் பரமாத்தனுகிய பரமசிவனுல் சொல்லப்பட்டு அவனுடைய திருவடி வியாபகத்துள் அடங்காநிற்கும் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம சிந்தியம், சிவதருமோத் தரம், மகுடம், காமிகம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை:** முன் சொல்லப்பட்ட சமயங்களும் அதற்கு அதற்குப் பொருந்தின அர்த்தங்களும் அதற்கு அதற்குப் பொருந்தின நூல்களும் ஒன்றுக்கு ஒன்று ஒவ்வாமல் எண்ணிறந்து இருக்கையினுல் இவையிற் றுள் எந்தச்சமயத்தை எந்தப்பொருளை எந்தநூலைப் பொருளாகக்கொள்வது ? என்ற மாணுக்கனை நோக்கி மேல் அருளிச்செய்கின்றுர்.

**இ - ள்:** ஓது சமயங்கள் பொருள் உணரும் நூல்கள் ஒன்றோடு ஒன்று ஒவ்வாமல் உள பலவும் - சொல்லப்பட்ட சமயங்களும் அந்த அந்தச் சமயிகள் கொள்ளத்தக்க அர்த்தங்களும் அதற்கு அதற்கு அறி யத்தக்க சாத்திரங்களும் இவை ஒன்றுக்கு ஒன்று ஒவ்வாமல் இருப்பது அநேக விருத்தி உண்டா யிருக்கும்,—

இவற்றுள் - இவையிற்றுக்குள்ளே,—

யாது சமயம் பொருள்நூல் யாது இங்கு என்னில் - எந்தச் சமயத்தை எந்த அத்தத்தை எந்த நூலை உண்மையாகக் கொள்ளுவது? என்று நீ கேட்கில்,—

இது ஆகும் அது அல்ல எனும் பிணக்கது இன்றி - இந்தச்சமயமும் இந்தப்பொருளும் இந்தச்சாத்திரமும் ஆம் என்றும் அந்தச்சமயமும் அந்தப்பொருளும் அந்தச்சாத்திரமும் அல்ல என்றும் சொல்லுகின்ற மாறுபாடு இல்லையாய்,—

நீதியினால் இவை எல்லாம் ஓர் இடத்தே காண நின்றது யாது ஒரு சமயம் அது சமயம் பொருள் நூல் - உலோகாயதன் முதல் பாஞ்சராத்திரி ஈறுகப் புறச்சமயத்தின் பேதம் பதினாலும் பாசுபதம் முதல் வயிரவம் ஈறுக உட்சமயத்தின் பேதம் ஐந்தும் சைவத்தில் ஐக்கியவாதி முதல் சைவர் ஈறுகப் பேதம் எட்டும் ஆக இருபத்தேழு சமயபேதத்துக்கும் அதற்கு அதற்குத் தக்கதாகப் பொருந்தின பொருளும் அதற்கு அதற்குப் பொருந்தின சாத்திரங்களும் அவரவர் பக்குவத்திற்குத் தக்கதாகப் பரமேசுவரன் அருளிச் செய்தான் என்கிற முறைமையை ஒருசமயத்திலே அறியப்பட்டது யாதொரு சமயம் அதுவே உண்மையான சமயம் என்பதும் அதுவே உண்மையான அத்தம் என்பதும் அதுவே உண்மையான சாத்திரம் என்பதும் இந்த உண்மையைச் சொல்லுகிற சாத்திரம் தான் ஏது? என்னில்,—

ஆதலினால் இவை எல்லாம் அருமறை ஆகமத்தே அடங்கியிடும் - சருவத்தையும் சொல்லுகிற வேதாகமங்கள் ஆகையினால் முன் சொல்லப்பட்டவை

எல்லாம் ஒருவராலும் அறியப்படாத வேதாகமங்களிலே அடங்காநிற்கும்.—

*அந்த வேதாகமங்கள் இரண்டும் எங்கே? அடங்கும் என்னில்,*

அவை இரண்டும் அரன் அடிக்கீழ் அடங்கும் - அந்த வேதமும் ஆகமமும் இரண்டும் பரமேசுவரனுடைய ஞானமாகிய சீபாதத்தின்கீழே ஒடுங்கும்; என்னவே சைவசமயமே சமயமும் சைவசித்தாந்தமே சித்தாந்தமும் வேதாகமமே சாத்திரமும் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் :*

*" பெருங்கடல் உதவும் கருங்கடு வாங்கிக்*
*கந்தரத் தமைத்த அந்தமில் கடவுள்*
*பாலரை உணர்த்தும் மேலவர் போலக்*
*கேட்போர் அளவைக் கோட்படு பொருளால்*
*அருளிய கலைகள் அலகில வால்அவை*
*பலபல சமயப் பான்மைத் தன்றே, அஃதால்*
*அந்நூற் றன்மை உன்னிய மாந்தர்*
*இதுவே பொருளென் றதன்நிலை அறைதலின்*
*வேற்றோர் பனுவல் ஏற்றோர்க் கிசையா*
*மாறு பாடு கூறுவர் அதனால்*
*புறச்சம யங்கள் சிறப்பில வாகி*
*அருளில் மாந்தரை வெருளுற மயக்கி*
*அலகைத் தேரின் நிலையில் தீரும்*
*ஈங்கிவை நிற்க நீங்காச் சமயம்*
*மூவிரு தகுதி மேவிய தாமும்*
*ஒன்றோ டொன்று சென்றுறும் நிலையில்*
*ஆறும் மாறா வீறுடைத் திவற்றுள்*
*எவ்வம் இல்லாச் சைவநற் சமயத்து*
*அலகில் ஆகமம் நிலவுதல் உளஅவை*
*கனகம் இரணியம் காஞ்சனம் ஈழம்*
*தனம்நிதி ஆடகம் தமனியம் என்றிப்*

பலபெயர் பயப்பதோர் பொருளே போலப்
பதிபசு பாச விதிமுறை கிளக்கும் ''

—சங்கற்ப - பாயிரம்.

என்னுமது கண்டுகொள்க.

இதனால் சொல்லியது, சொல்லப்பட்ட சமயங்களும் பொருள்களும் சாத்திரங்களும் ஒன்றோடு ஒன்று ஒவ்வாமல் பலவாகச் சொல்லுகையினாலே எந்தச்சமயத்தை எந்தப்பொருள்களை எந்தநூல்களை உண்மையாகக்கொள்வது என்று மாணுக்கன் கேட்க, ஆன்மாக்கள் பக்குவத்துக்கு ஈடாகப் பரமேசுவரன் இப்படிப் பலவாக அருளிச்செய்தான் என்று அறிகிறது சைவம் ஆகையினால் சைவசமயமே சமயமும் சைவசித்தாந்தமே பொருளும் வேதாகமங்களே நூலும் என்று அருளிச்செய்தது என்னும் முறைமையும் அறிவித்தது. (கஙு)

## செய்யுள் —265

அருமறையா கமமுதனூ லனைத்துமுரைக் கையினன்
அளப்பரிதா மப்பொருளை அரனருளால் அணுக்கள்
தருவர்கள்பின் தனித்தனியே தாமறிந்த அளவில்
தர்க்கமொடுத் தரங்களினால் சமயம்சா தித்து
மிருதிபுரா ணம்கலைகள் மற்று மெல்லாம்
மெய்ந்நூலின் வழிபுடையாம் அங்கம்வே தாங்கம்
சுருதிசிவா கமம்ஒழியச் சொல்லுவதொன் றில்லை
சொல்லுவார் தமக்கறையோ சொல்லொ ணாதே.

**1.** மறைஞானசம்பந்தர்:

வேதாகமப் பிராமாணியமும், அவைகட்கு முன்னூல் முதலிய மூவிதமும் உண்டு என்பது உணர்த்துகின்றார்.

**என்பது :** அரு மறை ஆகமம் முதல்நூல் - அள விடுதற்கரிய இருக்காதி நாலு வேதங்களும், காமிகாதி இருபத்தெட்டு ஆகமங்களும் முதலாயிருக்கும்,—

*அஃது எக்காரணனுல்? எனில்,*

அனைத்தும் உரைக்கையினுல் - அநாதி மலமுத்த னாய்ச் சருவக்கினனாய் இருக்கிற பரமகர்த்தாவால் சொல்லப்பட்டு அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினையும் உரைக்கையினுலே,—

*" வினையின் நீங்கி விளங்கிய அறிவின்*
*முனைவன் கண்டது முதனூ லாகும் "*

*என்றார் தொல்காப்பியனார்.*

அளப்ப அரிது ஆம் அ பொருளை அரன் அருளால் அணுக்கள் தருவர்கள் - வேதம் அனந்தம் சாகையால் அளத்தற்கு அரிதாய் இருக்கிற அந்தப் பொருள்களைப் பரமகர்த்தாவாகிய சிவனது காருண்ணியத்தினுலே அனந்தமாகிய வேதத்தை வியாதபகவான் நாலாகப் பிரித்து விளங்க அருளிச்செய்தார்,—

பின் தனி தனியே தாம் அறிந்த அளவில் தர்க்க மொடு உத்தரங்களினுல் சமயம் சாதித்து - அதனை உற்றுநோக்கி ஆராய்ந்து தாம் அறிந்தமாத்திரம் தமக்கு ஏற்ற கடாவானும் விடையானும் தமது பொருளையே மேலாக்கி அந்த வேதத்தைப் பின்சென்று சமயபேதங் களையும் அதற்கு அதற்கு ஏற்ற பொருள்களையும் சாதித்து,—

மிருதி புராணம் கலைகள் மற்றும் எல்லாம் மெய்ந் நூலின் வழி - மனு முதலிய மிருதி பதினெட்டும் அட்டாதச புராணமும் அறுபத்துநாலு கலையும் மற்றும் உள்ளன எல்லாம் அவ்வேதத்தின்வழியாத லால் வழிநூல் எனப்பெறும்,—

*" முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்*
*பின்னோன் வேண்டும் விகற்பம் கூறி*
*அழியா மரபினது வழிநூ லாகும் "*

புடை ஆம் அங்கம் வேதாங்கம் - வேதங்கட்கு அங்கமாகிய சிட்சை முதலிய ஆறும், உபாங்கமாகிய மீமாஞ்சை முதலிய நாலுமாகப் பத்தும் புடைநூல் எனப்பெறும்,—

*உபாங்கத்தைத் தலைக்குறைத்தலாக்கி அங்கம் என்றார். வேதம் என்பதனை இருபாலும் கூட்டிப் பொருளுரைக்க. அவையாவன: சிட்சை, கற்பம், நிருத்தம், சந்தோவிசிதி, சோதிடம், வியாகரணம். இவற்றால் பிரயோசனம் யாதோ? எனின, வேதோச் சாரணத்திற்கு வன்னத்தில் தோற்றும் சுரத்தையும் மாத்திரா பேதத்தினையும் விளங்கச் சொல்லுகையால் சிட்சை என்ப பெயராயிற்று.*

*வேதம் ஓதுதற்குக் கிரமத்தையும் கன்மப்பிர யோசனத்தையும் சொல்லுதலால் கற்பம் எனப்பெய ராயிற்று. வேதவசனங்களுக்கு அர்த்தத்தை விளங் கத் தக்கதாக அந்தப்பதங்களோடு நிர்வசனத்தைச் சொல்லுதலால் நிருத்தம் எனப் பெயராயிற்று.*

*வேதத்தில் சொல்லிய மந்திரங்களினது வன்னத்* *டய கணனையினையும், மாத்திராவிருத்தம்*

ஆகிய உக்தை முதலிய இருபத்தாறு சந்தபேதத்தினையும், வன்னவிருத்தமாய பத்தியை முதலியை ஆரியை நீதி முதல் காதை ஈறாக உள்ள லட்சணங்களையும விளங்கக் கூறுதலால் சந்தோவிசிதியாம்.

லௌகிக வைதிக கன்மங்களுக்குபயோகமாகிய துடி, லவை முதலிய கால விசேடங்களை இதற்கு இது என்று அறுதியிட்டு விதிப்பது சோதிடம் ஆம.

சங்கிதபதங்களையும, அறுவிதமான பதப்புணர்ச்சி முதலிய விதியாகிய சத்தலட்சணத்தை விளங்கச் சொல்லுகிறது வியாகரணம் என அறிக.

மீமாஞ்சை, நியாயம், புராணம, மிருதி இந் நான்கும் உபாங்கம் என அறிக.

"இருவர் நூற்கும் ஒருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்"

என மூவிதத்தினையும அறிக.

இனி, ஆகமங்களுக்கும் காமிகாதி ஆகமங்கள் முன்னூலாயிருக்கும. நாரசிங்கம முதலிய உபாகமங்கள இருநூற்றேழும வழிநூல் எனப்பெறும். முன்னூலாகிய ஆகமங்களையும், வழிநூலாகிய உபாகமங்களையும் உற்றுநோக்கி உக்கிரசோதிகள் சத்திய சோதிகள் பிருகற்பதி பரதர் முதலாகிய ஆசிரியரால் செய்யப்பட்ட போககாரிகை, மோட்சகாரிகை முதலிய பிரகரணங்கள் புடைநூல் என்று சொல்லப்பெறும். ஆனால் வேதாகமங்களை முதனூல் என்னவேணுமோ? கபிலர், பதஞ்சலி முதலாயினர் வாக்கியங்கள் முதனூல் ஆகாதோ? என்னின், ஆகாது; அஃது எக்காரணால் ? எனனில், அந்த வேதாகமங்களை

*அருளிச்செய்த பரமசிவன் அநாதி நின்மலனுமாய், ஆயுள்வேதம் மந்திரவாதம் இரசவாதம் முதலியவற்றை எல்லாம் கூறுகையினாலே சர்வக்ஞனுமாய், இராகத்துவேடம் இல்லாதவனுமாய், அந்நூல் மோட்ச சாதனம் ஆகையினாலும் அவன் வாக்கியமாகிய வேதாகமமே முதனூல் எனவும்; கபிலர் பதஞ்சலியர் மலசகிதருமாய் சர்வக்ஞத்துவம் இல்லாதவர்களுமாய் இராகத்துவேடருமாய் அந்நூல் கிஞ்சித்போகசாதனம் ஆகையினாலும் அவர்கள் வாக்கியமாகிய சாத்திரம் முதனூலெனப்பெறாது எனவும் அறிக. இந்தத் தன்மையுடைத்து ஆகையினாலே;*

சுருதி சிவாகமம் ஒழிய சொல்லுவது ஒன்று இல்லை - இந்த வேதாகமங்களே பிராமாணியசாத்திரம்; மற்றுள்ள நூல்கட்குப் பிராமாணியம் உண்டு என்று சொல்லப்பெறா,—

சொல்லுவார் தமக்கு அறையோ சொல்லொணாதது ஏ - இதற்கு வேறாக இருக்கிற சாத்திரம் பிராமாணியம் என்று சொல்லுவார்கட்கு நாம் என்ன சொல்லப்போகிறோம் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் அசிதம், காமிகம், மிருகேந்திரம், சுவாயம்புவம், பராசரோபபுராணம், சர்வசித்தாந்த சங்கிரகம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** முன்சொன்ன வேதாகமங்களிலே எல்லாம் அடங்குமாகில் மற்றுள்ள நூல்கள் ஏதுக்கு? என்ற மாணாக்கனைநோக்கி அருளிச்செய்கின்றார்.

இ - ள்: அருமறை ஆகமம் முதல் நூல் - அறிதற்கு அரிய வேதாகமங்க ம் எல்லாத்துக்கும் முன்னூல்,—

உரைக்கையினுல் - சர்வத்தையும் விரியச் சொல்லுகையினுலே,—

அளப்ப அரிது ஆம் - அந்த நூல்களில் உண்டாகிய அத்தங்களைச் சேர ஆராய்ந்து அறிகைக்கு அரிதாயிருக்கையினுலே,—

அ பொருளை அரன் அருளால் அணுக்கள் தருவர்கள் - அந்த வேதாகமங்களை விரியச்சொன்ன அத்தங்களைத் தம்பிரானுர் திருவருளைப்பெற்ற பெரியோர்கள் அந்தத் திருவருளினுலே சுருக்கி ஒருநூலாகச்செய்து அந்த அத்தத்தைப் பக்குவான்மாக்களுக்குக் கடாக்ஷிப்பார்கள்; இ

பின் தனி தனியே தாம் அறிந்த அளவில் தர்க்கமொடு உத்தரங்களினுல் சமயம் சாதித்து - இந்த நூல்களை அன்றிப் பின்னையும் பரமேசுவரனை அறியாதவர்கள் ஒருவர் சொன்னது ஒருவர்க்குப் பொருந்தாமல் தங்கள் தங்கள் போதத்துக்குத்தக்க சங்கற்பங்களையும் அதனுடன் நிராகரணங்களையும் வைத்துக்கொண்டு அதற்கு அதற்குத் தக்க சமயங்களைச் சாதித்துச் சொல்லுகிற நூல்களும் அநேகம்; இப்படி ஆன்ம போதத்தாலே சொல்லுகிற இந்தநூல்களும் இன்றி,—

மிருதி புராணம் கலைகள் மற்றும் எல்லாம் மெய் நூலின் வழி புடை ஆம் - மிருதி என்கிற நூலும்

புராணங்களும் சாத்திரங்களும் இவை ஒழிந்து சொல்லப்பட்டவை எல்லாம் சத்தியமாய் இருந்துள்ள வேதாகமங்களின்வழியே வந்து விரிந்தநூல்களாம்.—

அங்கம் வேதாங்கம் - சந்தை கற்பம் வியாகரணம் நிருத்தம் சிட்சை சோதிடம் என்னும் அங்கம் ஆறும் வேதத்துக்குச் சொரூபமாய் இருக்கும்.—

சுருதி சிவாகமம் ஒழிய சொல்லுவது ஒன்று இல்லை - வேதமும் ஆகமமும் ஒழிய வேறொன்று இப்படிச் சர்வத்தையும் சொல்லமாட்டாது.—

சொல்லுவார் தமக்கு அறையோ சொல்லொணுதுஏ - அந்த நூல்களைப்போல மற்றுள்ள நூல்களையும் நூல் என்று சொல்லுவார்க்கெல்லாம் சொல்லவோ! சொல்ல என்று விசாரிக்கில் சொல்லிமுடியப்போகாது என்றவாறு.

*'பின் தனித்தனியே தாமறிந்த அளவில் தர்க்கமொடு உத்தரங்களினுல் சமயம சாதித்துச் சொன்ன நூல்' என்றது பரசமயிகளைப் பற்றியது எனக் கொள்க.*

*உலோகாயதன் சமயஞ்சாதித்துச் சொன்ன நூல் என்றதற்குப் பிரமாணம்:*

*' இந்திர புரோகிதன் இயம்புமொரு நூலின்*
*தந்திரம் எனுதறிவி னேடருளி லாமல்*
*சந்தனை புயத்துமண மாலைகள் தயங்க*
*உந்தியுல கத்திலுல காயதன் உரைப்பான் ''*

*—சித்தி - பரபக்கம் - உலோகாயதன்மதம் - 1.*

என்றும், புத்தன் சமயம் சாதித்துச் சொன்ன நூல் என்றதற்குப் பிரமாணம் :

‘ நீதியார் வேத நூலின்
நெறியலா அறங்கள் நாளும்
ஓதியோர் ஐந்து சீலம்
உடையராய் உடலம் மூடிப்
போதிநீள் மரத்தின் மேவும்
புத்தர்நால் வரினும் வைத்துச்
சாதிதான் இலாத கொள்கைச்
சௌத்திராந் திகன்முன் சாற்றும் ’’

—சித்தி - பரபக்கம் - சௌ ... மதம் - 1.

என்றும், அமணன் சமயம் சாதித்துச் சொன்ன நூல் என்றதற்குப் பிரமாணம் :

‘‘ அந்த வாய்மொழியி னுலவன் சரணம்
ஆதி யோகமுத லானநூல்
இந்த மாநில மயங்கி டாதவகை
இங்கி யம்பினன் இதன்பொருள்
வந்த காலமுயிர் தன்ம தன்மியறம்
மற்றும் விண்மருவு புற்கலம்
பந்தம் வீட்டினொ டநாதி யாயிவை
படைப்ப தின்றியுள பத்துமே ’’

—சித்தி - பரபக்கம் - நிகண்டவாதி - மதம் - 5.

என்றும், பிரபாகரன் சமயம் சாதித்துச்சொன்ன நூல் என்றதற்குப் பிரமாணம் :

‘ நாதன்
...விண்ணில் ஏறச்
சேதமாம் கன்மம் செய்யச்
சைமினி செப்பு நூலின்
...யே கொண்டு பட்டா
சாரியன் நிகழ்த்து நீர்மை

ர் ஞாலத் துள்ளே
உள்ளவா றுரைக்க லுற்றும் ''

—சித்தி - பரபக்கம் - பட்டாசாரிமதம் - 1.

என்றும், மாயாவாதி சமயம் சாதித்துச் சொன்ன நூல் என்றதற்குப் பிரமாணம் :

'' நானே பிரமம் என்றுரைத்து
ஞாலம் பேய்த்தேர் எனஎண்ணி
ஊனே புகுந்து நின்றுயிர்கட்
குபதே சங்கள் உரைத்துவரும்
மானு மதிகே டனுமாய
மாயா வாதி பேயாகித்
தானே உரைக்கும் அந்நூலின்
உண்மை தன்னைச் சாற்றுவாம் ''

—சித்தி - பரபக்கம் - மாயாவாதிமதம் - 1.

என்றும், பாஞ்சராத்திரி சமயம் சாதித்துச் சொன்ன நூல் என்றதற்குப் பிரமாணம் :

'' ஆதியாய் அருவ மாகி
அகண்டபூ ரணமாய் ஞானச்
சோதியாய் நின்ற மாயன்
சுவேச்சையால் உருவு கொண்டு
நீதியார் கருணை யாலே
நீள்கடல் துயின்று நூலும்
என்று பாஞ்ச
ராத்திரி உரைப்பன் உற்றே ''

—சித்தி - பரபக்கம் - பாஞ்சராத்திரிமதம் - 1.

என்றும் ஆகச் சமயங்கள் ஆறும் கண்டுகொள்க.

இதனால் சொல்லியது வேதமும ஆகமமும் சர்வத்தையும் சொல்லுகையினால் அந்த அர்த்தம் எல்லா

வற்றையும் அறிதற்கு அரிது ஆனதுகொண்டு அவையிற்றுக்குள் வேண்டத்தக்கவையிற்றைத் தம பிரானுர் திருவருளைப் பெற்றவர்கள் சுருக்கிச்சொன்ன சாத்திரஙகளும வேண்டினது எனறும, அந்த இரண்டு நாலுக்கும அத்தம் தெரியாமல் தங்கள தங்கள் கருத்துக்குத்தக்க சமயம சாதித்துச்சொன்ன நூல்களும் அநேகம் உண்டு என்றும, இபபடிச் சொல்லப்பட்ட நூல்களும மிருதி முதலான மறறும உளள நூல்களும இந்த இரண்டு நூலினும் உளளது ஒழிந்து வேறு அல்ல எனனும் முறைமையும அறிவித்தது. (கச)

### செய்யுள்—266

வேதநூல் சைவநூலென் றிரண்டே நூல்கள்
வேறுரைக்கும் நூல்இவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூல் அனுதிஅம லன்தருநூ லிரண்டும்
ஆரணநூல் பொதுசைவம் அருஞ்சிறப்பு நூலாம்
நீதியினுல் உலகர்க்கும் சத்திநிபா தர்க்கும்
நிகழ்த்தியது நீள்மறையி னெழிபொருள்வே தாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கும் நூல்சைவம் பிறநூல்
திகழ்பூர்வம் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்.

1. மறைஞானசம்பந்தர் :

ஆதிகாலத்திலே ஞானம் ஒன்ருயிருக்க வேதாகமங்கள் என்று இரண்டாகக் கூறியது என்னே? எனில், அதிகார பேதத்தால் என்பதும், அவைகளுள் சித்தாந்தம் சிறப்புடைத்து என்பதும் உணர்த்துகின்ருர்.

**என்பது :** வேதநூல் சைவநூல் என்று இரண்டே நூல்கள் - ஆப்த வாக்கியமாகிய வேதாகமங்கள் இரண்டுமே உலகத்தில் சிறப்புடைய நூல்கள்.—

வேறு உரைக்கும் நூல் இவற்றின் விரிந்த நூல்கள் ஆதிநூல் அநாதி அமலன் தரு நூல் இரண்டும் - அநாதியிலே மலம் இல்லாத நிட்களபரமசிவனிடத்தினின்றும் பிரபஞ்சமாகப் புறப்படாநின்ற வாக்கை ஒருவராலும் தரித்திருக்கப்படாதபடியினாலே மகா சதாசிவதேவ நாயனார் அதனைத் தரித்து ஆன்மாக்களுக்கு உபயோகப்படுகையின்பொருட்டுத் தமது மேலான பஞ்ச வதனத்தினின்றும் சிருட்டி காலத்திலே வேதாகமங்களை உண்டாக்கினது; அந்த வேதத்தில் விரித்துக் கூறியவற்றை உற்று நோக்கி, அட்சபாதர் நியாயத்தையும், கணாதர் வைசேடிகத்தையும், கபிலர் சாங்கியத்தையும், சைமினிபகவான் மீமாஞ்சையையும், வாசுதேவன் வயிட்டிணவத்தையும், பிரபாகரன் பிரபாகரத்தையும் வேதாந்தத்தையும் செய்தனர்; அவைகளும், வேதத்தின்வழியே உண்டான சாத்திரங்களும் ஆதிநூல் எனப்பெறும்.—

*திவ்வியாகமங்களை உற்றுநோக்கிச் சிலர் மாயாவாதம், ஐக்கியவாதம், சிவசமவாதம், பேதவாதம், பாடாணவாதம், சங்கிராந்தவாதம், நிமித்தகாரண பரிணமவாதம் முதலாகக்கூறிய சமய பேதங்களைப் பிரித்து நிறுத்தி, அதனை மறுத்துச் சாத்திரங்களாக்கிக் கூறியவைகளும் ஆதிநூல் எனப்பெறும்.*

*அந்த முன்னூலாகிய இரண்டும் தம்மில் ஒக்குமோ? என்னில்,*

ஆரணநூல் பொது - அந்த இரண்டு நூல்களுக்குள்ளே வேதநூல் சாமானியம் எனப் பெறும்.—

*அஃது எக்காரணனல்? என்னில், அதோமுகமாகியதற்புருடமாதியான நானகுதிருமுகத்தினும் உண்டாகையால் என அறிக. ஆனல், அந்த நாலு வேதமும தமமில் ஒக்குமோ? எனனில், சததியோசாதத்தில் தோற்றிய இருக்கைப்பறற வாமதேவத்தில் தோற்றிய யசுர்வேதம் சிறப்புடைத்து; அதைப் பற்ற அகோரத்தில் தோறறிய சாமவேதம சிறப்புடைத்து; அதைபபற்றத் தற்புருடததில் தோற்றிய அதர்வணம சிறபபுடைத்து என அறிக.*

*எனனவே, தம முகபேதத்தால் உத்தரோத்தரம தம்மில் விசிட்டம ஆயிறறு; ஆதலால், ஒவ்வாது என அறிக.*

சைவம் அரு சிறப்பு நூல் ஆம் - காமிகாதி ஆகமம் இருபத்தெட்டும் அரிய சிறப்பினை உடைய நூல் எனப்பெறும்.—

*அஃது யாது காரணனல்? எனனில், ஈசான முகத்தில் தோற்றிய ஆதலானும், அதற்குமேல் தோறறம இன்மையானும, அதற்குமேலான நூல் வேறினமையானும் சிறப்பாயிற்று என்க. சிவனுடைய திருவாககு ஒன்ருயிருககப் பொது என்றும சிறப்பு எனறும இருவிதபபடுத்திக் கூறியது என? என்னில், அதிகாரபேதத்தால் பரம் அபரம என இரண்டுவிதம் ஆயிறறு. அஃது எனபோல? என்னில், கண்ணெனும தன்மை எல்லார்க்கும் ஒன்ருயிருக்கவும இராததிரியில் விலாளத்துக்கும் (பூனை) மானிடர்க்கும்*

*விலக்கணமாகச் சிவிககக் கண்டோமே! ஆதலால், அதுபோல் என அறிக.*

நீதியினுல் உலகர்க்கும் சத்திநிபாதர்க்கும் நிகழ்த்தியது - பார்ப்பார் முதலிய வன்னத்தாரில் சதுராசிரமிகளாகிய அதிகாரிகட்கு வருணுசிரம ஆசார நீதிகளை அநுட்டிக்கும்பொருட்டுச் சொல்லியது வேதம்; நால்வகைச் சத்திநிபாதாநுகுணமாகச் சிவதீட்சையினையுடைய அதிகாரியராகிய பக்குவான்மாக்கட்கு அருளிச்செய்தது ஆகமம்,—

நீள் மறையின் ஒழி பொருள் வேதாந்த தீது இல் பொருள் கொண்டு உரைக்கும் நூல் சைவம் - அநேக சாகைகளையுடையதாய் அளவுபடாத பெரிய வேதங்களில் தெரிவரிதாகிய வேதாந்தத்தின் நிச்சயம்பண்ணப்பட்ட குற்றமற்ற பொருளை அறுதியிட்டுக்கூறும் சிறப்பினையுடையது ஆகமம்,—

*" வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தத் திறன் "*

*—சிவப்பிரகாசம் - 7.*

*என்பதனுனும அறிக.*

பிறநூல் திகழ் பூர்வம் சிவாகமங்கள் சித்தாந்தம் ஆகும் - ஆகையினுலே வேதங்களில் சொல்லுவன பூர்வபட்சம் என்றும், விளங்கப்பட்ட சிவாகமங்களில் கூறப்படுவன சித்தாந்தம் என்றும் சொல்லப் பெறும் என்றவாறு.

*சில ஆகமங்கள, இருபத்தெட்டு ஆகமஙகளும் பஞ்சவத்திரத்தில் தோன்றிய என்று சொல்லியிருக்க ாணடு ஈசானத்தில் தோன்றின என்று சொல்லியது*

*விருத்தமல்லவோ? என்னில், சிருட்டி பேதத்தால் ஆம; ஆகையால் விருத்தமில்லை என்று அறிக.*

*இதற்குப் பிரமாணம காமிகம் - தந்திராவதாரம்- ஆசாரியாபிடேகம், பஞ்சப்பிரமபாடியம், சுவாயம்புவம், மோகசூரோத்திரம், மூலதந்திராவதாரம், இரத்தினத் திரயம் என அறிக. இனனும,*

> '' வேதமோ டாகமம் மெய்யாம் இறைவனூல்
> ஓதும் பொதுவும் சிறப்புமென் றுள்ளன
> நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்
> பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே.''

*என்னும திருமந்திரத்தானும (2397) அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை:** வேதம் என்றும் ஆகமம் என்றும் புராணம் என்கிறது முதலாக இப்படி நூல்கள் வெகு விதமாய் இருக்குமோ? என்ற மாணுக்கனை நோக்கி மேலும் அருளிச்செய்கின்ருர்.

**இ - ள்:** வேதநூல் சைவநூல் என்று இரண்டு ஏ நூல்கள் - வேதநூல் என்றும் ஆகமநூல் என்றும் சொல்லப்பட்ட இரண்டுமே நூல் என்பது.—

*மற்றும் உளள நூல்கள எல்லாம நூல் அல்லவோ ? எனனில்,*

வேறு உரைக்கும் நூல் இவற்றின் விரிந்த நூல் கள் - இது ஒழிந்து வேறு சொல்லப்பட்ட நூல்கள் எல்லாம் இவை இரண்டிலே நின்றும் தங்களுக்கு

வேண்டத்தக்க அர்த்தங்களை எடுத்துக்கொண்டு விரித்துச் சொல்லப்பட்ட நூல்களாம்.—

ஆதி நூல் - அவை இரண்டையும் முன்னூல் என்று சொல்லப்படும்.—

அநாதி அமலன் தரு நூல் இரண்டும் - அநாதியே மலரகிதனுயிருந்துள்ள பரமேசுவரன் அருளிச்செய்யப்பட்டதாய் இருக்கும் வேதாகமங்கள் இரண்டும்.—

*ஒருவனா அருளிச்செய்தானுமாயின ஒரு நூலே அமையாதோ? இரண்டு நூல் ஏன? எனில்,*

ஆரண நூல் பொது - இவையிற்றில் வேதநூல் சாமானியமாய் இருக்கும். —

சைவம் அரும் சிறப்பு நூல் ஆம் – ஆகமந்தான் விசேடத்துவம் உடைய நூலாயிருக்கும்.—

*இந்த நூல்கள் யாருக்குச்சொனனது? என்னில்,*

நீதியினுல் உலகர்க்கும் சத்தினிபாதர்க்கும் நிகழ்த்தியது - உலகியல்பு வேதநூல் ஒழுக்கமாயிருக்கையால் உலகத்திலுள்ளவர்களுக்கும் ஆகமநூல் சத்திநிபாதம் பதிந்த பக்குவர்களாய் உள்ளவர்களுக்கும் சொன்னதாயிருக்கும்.—

*இந்த நூல் இரண்டையும் பொது என்றும், சிறப்பு எனறும் சொன்னது எப்படி? என்னில்,*

நீள் மறையின் ஒழிபொருள் வேதாந்த தீது இல் பொருள்கொண்டு உரைக்கும் நூல் சைவம் - அநாதியாயுள்ள வேதத்திலும் சொல்லாத உபதேசப்பொருள்

களையும் வேதாந்தத்திலே சொல்லப்பட்ட குற்றம் இல்லாத அர்த்தங்களையும் கூட்டிக்கொண்டு தெளியச் சொல்லப்பட்ட நூல் சிவாகமம்.—

பிற நூல் திகழ் பூர்வம் - பெரிய வேதமானது விளங்காநின்ற பூர்வபக்கமாயிருக்கும்.—

சிவாகமங்கள் சித்தாந்தம் ஆகும் - திவ்வியாக மங்கள் உண்மையாகிய உத்தரபாகமாயிருக்கும் என்றவாறு.

*இதனால் சொல்லியது வேதாகமங்கள இரண்டும் அநாதியே பரமேசுவரனாலே அருளிச் செய்யபபட்டது என்றும, மறறு உண்டான நூல்கள் எல்லாம் அந்த இரணடு நூலிலும விரித்த நூல்கள் என்றும, வேதம பொதுவாக உலகர்க்குச் சொனனது என்றும, ஆகமம உண்மையாகச் சத்திநிபாதம் பதிந்த வாகளுககுச் சொனனது எனனும முறைமையும் அறிவித்தது.* (கரு)

செய்யுள்—267

சித்தாந்தத் தேசிவன்தன் திருக்கடைக்கண் சேர்த்திச்
  செனனமொன்றி லேசீவன் முத்த ராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
  மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை அறுத்து
முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்பன் என்று
  மொழிந்திடவும் உலகரெலாம் மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
  பெருங்குழியில் வீழ்ந்திடுவர் இதுவென்ன பிராந்தி.

1. மறைஞானசம்பந்தர் :

இங்ஙனம் கூறிய ஆகமத்திலே சிவன் ஞானசாரி யனை அதிட்டித்துக்கொண்டு தீட்சைபண்ணி, மலங் களைப்போக்கி, ஞானானந்தத்தைக் கொடுப்பன் என்று சொல்லியிருக்கவும் அந்த உண்மையை அறிந்து அதன் வழி நின்று கதியை அடையாமல் பிறிதின்வழி நின்று பாவத்தால் வரும் நரகத்து விழுமவர் குறையைக் குறித்து அவர்கள் மயக்கம் என்னவாயிருந்தது என்று உணர்த்துகின்றார்.

என்பது : சித்தாந்தத்தே - சிவாகமத்திலே,—

சிவன் தன் திரு கடைக்கண் சேர்த்தி - சிவன் தனது காருண்ணியத்தினாலே தன்னை வழிபட்ட பக்குவ ஆன்மாக்கட்கு ஞானசாரியனை அதிட்டித்துத் திருநோக்காகிய தீட்சையைச் செய்து,—

செனனம் ஒன்றிலே சீவன் முத்தர் ஆக வைத்து ஆண்டு மலம் கழுவி - மந்திர சாமர்த்தியத்தாலே வாகீசுவரி வாகீசுரரிடத்தில் செனிப்பித்து அநேக சென்மத்துக்குக் காரணமாய் இருக்கிற கன்மம் முதலிய பாசங்களைச் சேதித்துப்போக்கி எடுத்து ஆட் கொண்டு ஒரு செனனத்திலே தானே வருத்தமறச் சீவன்முத்தித்தன்மையை அடைவிப்பித்து,—

*அவ்வான்மாக்களுக்கு மலம்போனது காணப் படாதபடியினாலே மலக்ஷயம் பிறந்ததின்றாம் எனின, மந்திரத்தினாலே விடம்தீர்ந்தது காணாதிருக்கையிலே யும் பின்பு உள்ள தெளிவினாலும் வியாபாரத்தாலும்*

*விடம் தீர்ந்தது என்று கண்டதுபோல, ஒருவனுக்குத் தீட்சாநந்தரம் உள்ள அறிவினாலும் அநுட்டானாதி வியாபாரத்தாலும் கன்மாதிகளும் தம் பலம் கெட்டு அவனை வாதியா என அறிக.*

*இஃது அன்றி, ஒருவன் தீட்சைபெற்று முன்னம் துலையில் நிறுத்துப் பின்னும் அவனை நிறுத்த இடத்து முன்னையினும் குறையும் என்று ஆகமம் ஓதுகையானும் என அறிக.*

ஞான வாரி மடுத்து - சுவானந்தானுபூதி ஆகிற சமுத்திரத்திலே அனவரதமும் முழுகும்படி அழுத்தி,—

ஆனந்தம் பொழிந்து - "ஆனந்தமாக்கடல் ஆடு சிற்றம்பலம்" என்றார். இவனுக்குச் சிவத்துவாபிவியத்தியை நன்றாகப் பிரகாசிப்பித்து,—

*அஃதாவது யானையினிடத்திலே வியாபித்திருந்த மதமானது பருவம் வந்தவாறே புறமே புறப்பட்டுப் பிரகாசித்தலைப் போனறலின் 'பொழிதல்' என்றார். இத்தன்மையுடையன் ஆதலின்,*

வரும் பிறப்பை அறுத்து - அக்கினியைச்சேர்ந்த வித்தானது இனிமேல் முளைத்தற்குச் சாமர்த்தியமில்லாதவாறுபோல இவனுக்கு ஆகாமியம் ஏறாதபடியாலே மீண்டும் ஒரு சரீரம் எடாதபடி பண்ணி,—

முத்தாந்த பாத மலர் கீழ் வைப்பன் என்று மொழிந்திடவும் - முத்திக்கு முடிவாகிய சாயுச்சிய பதமாகிற தனது திருவடித்தாமரைக்கீழ் வைப்பன் என்று சொல்லியிருக்கவும்,—

உலகர் எல்லாம் மூர்க்கர் ஆகி - பிரபஞ்சத்தில் ஆன்மாக்கள் எல்லாம் மூர்க்க வியாபாரத்தை அடைந்து,—

பித்தாந்த பெரும் பிதற்று பிதற்றி - இந்தச் சித்தாந்த சாத்திரத்தின் ஆதிக்கத்தையும் உண்மையையும் அறியாமல் பித்துக்கொண்டவர்களைப்போலப் பரசமய நூலாகிய பசுசாத்திரங்களைப் பொருளென்று எண்ணிப் படித்து, அவையிற்றை மேல் என்று ஒருப்பட்டுச் சித்தாந்தம் என்னும் சர்வோத்கிருஷ்டமாகிய சிவாகமத்தை நிந்தைசெய்து,—

பாவ பெருங்குழியில் வீழ்ந்திடுவர் ‌‌‌‌‌‌ ।து என்ன பிராந்தி - இரௌரவாதி நரகங்களிலே வருந்துவர்; இது என்ன மயக்கம் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் சிவதருமோத்தரம், கிரணம், இரௌரவம், வாலஞானரத்நிஞவலி, இரத்நினத்நிரயம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** சத்திநிபாதம் பதிந்த பக்குவான்மாக்களைச் சிவன் இரக்ஷிப்பன் என்றது என்நம்பு, ஆன்மாக்களிலே விசேஷவான்கள் குருவாயிரக்ஷிக்குமது ஒழிந்து சிவன் அவாங்மனதீத கோசரனாய் இருக்கையால் அவன் குருமூர்த்தம் ஆகான் என்ற பாடாணவாதியை நோக்கி அருளிச்செய்கின்றார்.

· ள் : சிவன் திரு கடைக்கண்
செனனம் ல் ஏ சீவன் முத்தர் ஆக

வைத்து ஆண்டு மலம் கழுவி ஞானவாரி மடுத்து ஆனந்தம் பொழிந்து வரும் பிறப்பை அறுத்து முத் தாந்த பாதமலர் கீழ்வைப்பன் என்று மொழிந்திடவும் உலகர் எல்லாம் - (சிவன் திருக்கடைக்கண் சேர்த்தி செனனம் ஒன்றிலே சீவன்முத்தராக மலம் கழுவி ஞானவாரி மடுத்து ஆனந்தம் பொழிந்து வரும் பிறப்பை அறுத்து முத்தாந்த பாதமலர் கீழ் வைப்பன் என்று சித்தாந்தத்தே உலகர் எல்லாம் மொழிந்திட வும் என்று பொருள் கூட்டுக) - முன் செனனங்களில் செய்த தபோபலத்தாலே இருவினை ஒத்துச் சத்திநி பாதம் பதிந்த பக்குவான்மாக்களைப் பரமேசுவரன் தனது காருண்ணியத்தினுலே திருக்கண் சாத்தியருளி அந்தச் செனனந்தன்னிலே சரீரத்திலே கூடியிருந்து புசிக்கச்செய்தே அதில் தாக்கற நிற்கிற உண்மையை யும் தரிசிப்பித்து அடிமைகொண்டருளி ஆணவமலத் தால் உண்டாகிய அஞ்ஞானத்தையும் போக்கி ஞான சாகரத்திலே அழுத்திச் சிவபந்தத்தையும் நிறைத்து அநாதியே தொன்றுதொட்டு வருகிற செனனங்களை யும் போக்கி முத்திகளுக்கெல்லாம் முடிவாய் இருக் கிற தனது சீபாதத்தின்கீழே வைப்பன் என்று ஆக மத்திலே அருளிச்செய்திருக்கும் என்று உயர்ந்தோர் கள் எல்லாம் சொல்லுகைசெய்தேயும் ஆன்மாக்க ளின் விசேஷவான்களே ஆசாரியமூர்த்தி என்று.—

மூர்க்கர் ஆகி - சாத்திரம் சொன்னவழி ஒன்றும் அறியாமல் மூடராய்.—

பித்தாந்த பெரும் பிதற்று பிதற்றி - பித்தரது சுபாவம்போல அறிவும் அறியாமலுமாய் இருக்கிற பெரிய வார்த்தைகளையும் சொல்லி.—

பாவ பெரும் குழியில் வீழ்ந்திடுவர் - துக்கங் களுக்கு ஏதுவான பிறப்பு என்கிற குழியிலே வீழா நிற்பர்கள்,—

இது என்ன பிராந்தி - இந்த மதிமயக்கம் ஏது என்று அறிந்திலோம் என்றவாறு.

*என்னவே, ஆகமம் குருவே சிவம் என்று சொல் லும் என்பது கருத்து.*

*இதற்குப் பிரமாணம் :*

*" அறிவிக்க அன்றி அறியா உளங்கள்*
*செறியுமாம் முன்பின் வினைகள் - நெறியிற்*
*குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவற்றின் வீடாம்*
*குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு "*

*—சிவஞானபோதம்: சூத் - 8, வெண்பா 4.*

*என்றுமதும் கண்டுகொள்க.*

*இதனால் சொல்லியது ஆன்மாக்களுடைய பக்கு வத்திலே சிவனே ஆசாரிய மூர்த்தியாக எழுந் தருளித் திருக்கண் சாத்தி, அந்தச் செனனத்திலே சீவிக்கையிலே முத்தனாய் இருக்கத்தக்க உண்மை யிலே வைத்து இரட்சித்து, மலத்தையும் போக்கி, ஞானசாகரத்திலே அழுத்தி, சிவானந்தத்தையும் நிறைத்து, அநாதியே வருகிற செனன தொந்தங் களையும் அறுத்து, தனது திருவடித்தாமரையின் கீழே வைப்பன் என்று ஆகமத்திலே அருளிச்செய் யும் என்று பெரியோர்கள் சொல்லுகை செய்தேயும் சாத்திர கெதியையும் அறியாமல் மூடராய்ப் பித்த ரைப்போல அறிவும் அறியாமலுமாய்ப் பிதற்றிக்*

*கொண்டு திரிந்து நரகமாகிய பெரிய குழிகளிலே விழா நிற்பர்கள் என்னும் முறைமையும் அறிவித்தது,* (கசு)

செய்யுள்—268

இறைவனு வான்ஞான மெல்லா மெல்லா
முதன்மைஅனுக் கிரகமெல்லா மியல்புடையானியம்பு
மறைகளா கமங்களினுன் அறிவெல்லாந் தோற்றும்
மரபின்வழி வருவோர்க்கும் வாரா தோர்க்கும்
முறைமையினல் இன்பத்துன் பங்கொடுந்த லாலே
முதன்மையெலாம் அறிந்துமுயங் கிரண்டு போகந்
திறமதனல் வினைஅறுக்குஞ் செய்தி யாலே
சேரும்அனுக் கிரகமெலாம் காணுநம்நாம் சிவற்கே.

1. மறைஞானசம்பந்தர் :

சருவக்கினத்துவம், சருவகர்த்திருத்துவம், சருவானுக்கிரகம் எல்லாம் இயல்பாகவுடையவனே பரமகர்த்தா என்றும், அந்தக் கர்த்தாவுக்குச் சருவக்கினத்துவாதி மூன்றும் உண்டு என்பதற்கு ஏதுவும் காட்டி அப்படிப்பட்ட பரமகர்த்தா சிவனே என்றும் உணர்த்துகின்றூர்.

**என்பது :** இறைவன் ஆவான் ஞானம் எல்லாம் எல்லா முதன்மை அனுக்கிரகம் எல்லாம் இயல்பு உடையான் - பரமகர்த்தாவானவன் யாவன் என்னில் சருவக்கினத்துவத்தையும் சருவகர்த்திருத்துவத்தையும் சருவானுக்கிரகத்தையும் ஒருவர் தரப்பெற்றுளவாதல் இன்றித் தனக்கு அநாதியிலே சுபாவிகமாவுடையவன் யாவன் ஒருவன் அவனே பரமகர்த்தா வானவன்,—

*ஆயின் அக்கர்த்தாவுக்குச் சருவக்கினத்துவாதி கள உண்டு என்பது எக்காரணுல்? என்னில்,*

இயம்பும் மறைகள் ஆகமங்களிஞல் அறிவு எல்லாம் தோற்றும் - வேதாகமங்களை உள்ளபடி அறிந்து உள்ளபடி சொல்லுகையிஞலே சருவக்கினத்துவம் உண்டு என்று அறியப்படும்.—

மரபின் வழி வருவோர்க்கும் வாராதோர்க்கும் முறைமையிஞல் இன்பம் துன்பம் கொடுத்தலாலே முதன்மை எலாம் அறிந்தும் - அவன் அருளிச்செய்த வேதாகமங்களின்வழியே புண்ணியம் செய்யுமவர்க்கும் அதன்வழி வாராமல் பாவம் செய்யுமவர்க்கும் அந்தந்த வினைபிறழாமல் அவ்விருவினைப்பயன்களாகிய சுகதுக்கங்களை அந்தந்தக் காலங்களிலே கொடுக்கையிஞலே சருவ கர்த்திருத்துவம் உண்டு என்று அறியப்படும்.—

முயங்கு இரண்டு போகத்திறம் அதஞல் வினை அறுக்கும் செய்தியாலே சேரும் அனுக்கிரகம் எல்லாம் - ஆன்மாக்கட்கு இருவினைக்கு ஈடாகத் தனுவாதிகளைக் கூட்டிச் சுவர்க்க நரகாதிகளின் உள்ள இன்பந்துன்பங்களைப் புசிப்பித்து அக்கன்மங்களைப் போக்கிப் பரிபாகம் வந்தகாலத்தில் பரமுத்தி அளிக்கையிஞலே சருவானுக்கிரகம் உண்டு என்று அறியப்படும்.—

*ஆயின், இானறன்று கிருத்தியங்களும் எந்தக் கர்த்தாவுக்கு உண்டு? என்று அறியபபடும என்னில்,*

காணுதும் நாம் சிவற்கு ஏ - சிவனுக்கே உண்டு என்று அறியப்படும் என்றவாறு.

ஆதலால் சிவனே பரமகர்த்தாவென்று அறிக; ஒழிந்தார் அவனால் ஏவப்படுமகர்த்தாக்கள் எனறு அறிக.

" சிவனெனும் நாமம் தனக்கே யுடையசெம்
மேனியெம்மான் "

—திருநாவு: தனித்திருவிருத்தம்.

என்பதனாலும்,

" கானார் புலித்தோல் உடைதலையூண் காடுபதி
ஆனால் அவனுக்கிங் காட்படுவா ராரேடீ
ஆனாலும் கேளாய் அயனும் திருமாலும்
வானாடர் கோவும் வழியடியார் சாழலோ "

—திருவாசகம் - திருச்சாழல்.

என்னும் திருவாக்கினானும் அறிக. ஏகாரம் தேற்றம.

இதற்குப பிரமாணம மிருகேந்திரம், சிந்தியம், விசுவம், பௌட்கரம், வாயவ்வியசங்கிதை என அறிக.

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** எண்ணிறந்த கர்த்தாக்களில் சிவனே கர்த்தா என்றதற்குப் பிரமாணம் என்னவோ? என்ற மாணாக்கனை நோக்கி அருளிச்செய்கின்றார்.

இ - ள் : இறைவன் ஆவான் - கர்த்தா என்று சொல்லப்படுகிறவன்.—

ஞானம் எல்லாம் எல்லா முதன்மை அனுக்கிரகம் எல்லாம் இயல்பு உடையான் - சருவஞ்ஞத்துவம் சருவகர்த்திருத்துவம் சருவானுக்கிரகம் என்று

சொல்லப்பட்ட அவையிற்றை அநாதியே தனக்கென இயல்பாக உள்ளவன்,—

*இந்த முறைமைகளை உடையவனை அறியும்படி எப்படி? எனனில்,*

இயம்பும் மறை ஆகமங்களினால் அறிவு எல்லாம் தோற்றும் - முன்னூல் வழிநூல் இன்றியே தனது இச்சையாலே அவன் அருளிச்செய்யப்பட்ட வேதாக மங்களினாலே அவனது சருவஞ்ஞத்துவம் அறிந் தோம்,—

வரைவின் வழி வருவோர்க்கும் வாராதோர்க் கும் - அவன் நியமித்தவழியே வருகிறவர்களுக்கும் அந்த வழிவாராதவர்களுக்கும்,—

முறைமையினால் இன்பம் துன்பம் கொடுத்த லாலே முதன்மை எலாம் அறிந்தும் - அவரவர் செய்த கன்மத்துக்கு ஈடாகச் சுக துக்கங்களைக் கொடுக்கையாலே அவனது சருவகிருத்தியம் எல்லாம் அறிந்தோம்,—

முயங்கு இரண்டுபோகத் திறன் அதனால் வினை அறுக்கும் செய்தியாலே - அவரவர்க்குப் பொருந்தப் பட்ட சொர்க்க நரகங்களில் உண்டாகிய இன்பத்துன் பங்களைப் புசிப்பித்துத் தொலைப்பிக்கிற முறைமை யாலே —

சேரும் அனுக்கிரகம் எல்லாம் காணுதும் - பொருந்தப்பட்ட சருவானுக்கிரகம் எல்லாம் அறிந் தோம்,—

நாம் சிவற்கு ஏ - இங்ஙனம் சொல்லி வந்தமுறை மைகள் எல்லாம் நாம் சிவனுக்கே உள்ளது என்று அறிந்தோம்; ஆகையால் சிவனே கர்த்தாஎன்றவாறு.

*இதனால் சொல்லியது சருவஞுஞத்துவமும சருவ முதனமையும சருவானுக்கிரகமும இவை மூன்றும அநாதியே இயல்பாக உடையவனேகர்த்தா என்றும, முன்னூலின்றியே வேதாகமங்களைத் தானே அருளிச் செய்கையாலும் அந்த நூலின்வழிவந்தோர்க்கு இன பத்தையும் அந்த நூலின்வழி வாராதவர்களுக்குத் துன்பத்தையும் கொடுக்கையினாலும இப்படி இன்பத் துனபங்களைப் புசிப்பித்துக் கன்மத்தைத் தொலைப் பித்து இரட்சிக்கையினாலும் முனசொனன முறைமை களெல்லாம சிவனுக்கே உண்டாய் இருக்கையினால் சிவனேகர்த்தா என்னும்முறைமையும அறிவிததது.*

(கஎ)

செய்யுள்—269.

**சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம்**
**தாதமார்க் கம்மென்றும் சங்கரனை யடையும்**
**நன்மார்க்கம் நாலவைதாம் ஞான யோகம்**
**நற்கிரியா சரியையென நவிற்றுவதும் செய்வர்**
**சன்மார்க்க முத்திகள்சா லோக்கியசா மீப்பிய**
**சாரூப்பிய சாயுச்சியம் என்றுசதுர் விதமாம்**
**முன்மார்க்க ஞானத்தால் எய்து முத்தி**
**முடிவென்பர் மூன்றினுக்கும் முத்திபத மென்பர்.**

1. மறைஞானசம்பந்தர் :

இப்படி ஆன்மாக்கட்கு உபகரியாகின்ற சிவனது சாலோகாதிகளை அடையும் சரியை முதலிய தொழில் களைத் தொகுத்து உணர்த்துகின்றார்.

என்பது: சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம் தாதமார்க்கம் என்றும் சங்கரனை அடையும் நன்மார்க்கம் நாலு - சன்மார்க்கம் முதலிய நல்வழிகள் சிவனை அடையுமதற்கு நான்கு உண்டு.—

*அவை ஒன்றுக்கு ஒன்று தாழ்ந்தபலத்தை உடையன; அவை யாவை? எனில்,*

அவைதாம் ஞானம் யோகம் நல் கிரியா சரியை என நவிற்றுவதும்செய்வர் - அவைகளுக்கு அடைவே ஞானபாதம் யோகபாதம் கிரியாபாதம் சரியாபாதம் எனப் பெரியோர் கூறுநிற்பர்.—

*தாம: அசை. இந்நான்கினுக்கும் பலம் யாவை? எனில்,*

சன்மார்க்க முத்திகள் சாலோக்கிய சாமீப்பிய சாரூப்பிய சாயுச்சியம் என்று சதுர்விதம் ஆம் - சைவர் அடையும் நல்வழி சன்மார்க்கம் முதலிய நான்கினுக்கும் எதிர் நிரல்நிறையாக அவனுடன் யோகிக்கப் பட்ட சாயுச்சியமும், அவன் சொரூபம்போல மானும் மழுவும் காளகண்டமும் திரிநேத்திரமுமாய் இருக்கும் சாரூப்பியமும், அவன் சமீபத்தில் இருக்கும் சாமீப முமம், அவன் உலகத்தின்கண் இருக்கும் சாலோக்கிய முமாக நான்குவிதப்பட்டிருக்கும்.—

முன் மார்க்க ஞானத்தால் எய்தும் முத்தி முடிவு என்பர் மூன்றினுக்கும் முத்தி பதம் என்பர் - முதற் கண்கூறிய சன்மார்க்கமாகிய ஞானபாதத்தின் வழி நின்று அநுட்டிக்கும் அதனால் அடையும் சாயுச் சியமே பரமமான முத்தி என்றும் மற்ற மூன்றினுக்கும்

பதமுத்தி என்றும் சொல்லுவார்கள் ஆகமம் கற்ற வல்லோர் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் காமிகம் - உத்தரோத்தர விசிட்டபடலம், சிந்தியம், விசுவம், சிவஞானபோத சங்கிரகம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** இப்படி முன்சொல்லப்பட்ட சிவனை ஆன்மாக்கள் சென்று பொருந்துகிற முறைமை ஒரு பிரகாரமாய் இருக்குமோ? பல பிரகாரமாய் இருக்குமோ? என்ற மாணுக்கனை நோக்கி, நாலுபிரகாரமா யிருக்கும் என்று மேல் அருளிச்செய்கின்றார்.

**இ - ள் :** சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம் தாதமார்க்கம் என்று சங்கரனை அடையும் நன்மார்க்கம் நால்வகைதான் - சன்மார்க்கம் என்றும் சகமார்க்கம் என்றும் நல்ல புத்திரமார்க்கம் என்றும் தாதமார்க்கம் என்றும் பரமேசுவரனைப் பொருந்துகிற நல்லவழி நாலுவகையாயிருக்கும்; அவைதான்,—

ஞானம் யோகம் நல் கிரியா சரியை என நவிற்றுவதும் செய்வர் - ஞானம் என்றும் யோகம் என்றும் கிரியை என்றும் சரியை என்றும் சொல்லுவதும் செய்வர்கள்; இதுவன்றியும்,—

சன்மார்க்க முத்திகள் சாலோக்கிய சாமீப்பிய சாரூப்பிய சாயுச்சியம் என்று சதுர்விதம் ஆம் - சன்மார்க்கம் முதலான நாலு மார்க்கத்துக்கும் முத்திகள் சொல்லுமிடத்து, சாலோக்கியம் என்றும்

சாமீப்பியம் என்றும் சாரூப்பியமென்றும் சாயுச்சியம் என்றும் நாலுபிரகாரமாய் இருக்கும்.—

முன் மார்க்க ஞானத்தால் எய்து முத்தி முடிவு என்பர் - முன் சொல்லப்பட்ட சன்மார்க்க ஞானத்தாலே பெறுகிற மோட்சத்தையே முடிந்த முத்தி என்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.—

மூன்றினுக்கும் முத்தி பதம் என்பர் - நின்ற சாலோக்கியம் ஆதியாயுள்ள மூன்றினையும் பதமுத்தி என்று பெரியோர்கள் சொல்லாநிற்பர்கள் என்றவாறு.

*இதனால் சொல்லியது பரமேசுவரனை ஆன்மாக்கள பெறுகிற முறைமை தாதமார்க்கம் முதலாக நாலு மார்க்கமாய் இருக்கும் என்றும், ஞானபாதம் முதலாக நாலு பாதமாய் இருக்கும் என்றும், சாயுச்சியம் முதலாகப் பேறு நாலாயிருக்கும் என்னும் முறைமையும் அறிவித்தது.* (கஅ)

செய்யுள்—270

தாதமார்க் கம்சாற்றின் சங்கரன்றன் கோயில்
  தலமலகிட் டிலகுதிரு மெழுக்கும் சாத்திப்
போதுகளும் கொய்துபூந் தார்மாலை கண்ணி
  புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதில்திரு விளக்கிட்டுத் திருநந்த வனமும்
  செய்துதிரு வேடங்கண் டாலடியேன் செய்வ(து)
யாதுபணி யீரென்று பணிந்தவர்தம் பணியும்
  இயற்றுவதிச் சரியைசெய்வோர் ஈசனுல கிருப்பர்.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் தாதமார்க்கம் உணர்த்துகின்றார்.

என்பது: தாதமார்க்கம் சாற்றின் - சரியைத் தொழிலாகிய தாதமார்க்கத்தைச் சொல்லின்.—

சங்கரன் தன் கோயில் தலம் அலகிட்டு இலகு திரு மெழுக்கும் சாத்தி - நித்திய கன்மம் முடித்து, திருக்கோபுரம் தூலலிங்கம் ஆதலால் அதனை வணங்கி, பின் பலிபீடம் முதலாயினவற்றை வணங்கி, நந்தி கேசுரர் அனுமதிபெற்று உள்ளேசென்று, விதிவழி யுண்டாக்கிய தென்னலகாற்றுன் முஞ்சிப்புல்லாற்றுன் ஆகிய திருவலகால் அலகிட்டு,

*" மூப்பு மலடு முடைமலமுந் தின்பதெனும்*
*ஆத்தானும் துய்யதல்ல ஆசு "*

*" பிறந்திளைய கன்று பெருக்கன்னி பிணியா*
*இறந்தகன்றும் ஆகா இழுக்கு "*

—சைவசமயநெறி - பொது - **164, 165.**

என்னும் குற்றமற்ற கோமயம்கொண்டு அதில் வடித் தெடுத்த சலம்விட்டு மெழுகிப் பின்பு,—

போதுகளும் கொய்து பூ தார் மாலை கண்ணி புனிதர்க்கு பல சமைத்து புகழ்ந்து பாடி - தான் வைத்து உண்டாக்கிய மர முதலியவற்றின் பூக்களே உத்தமம் ஆதலினுல் அந்தத் திருப்பள்ளித் தாமங்களை எடுத்துச் சிவனுக்குத் தொடை நெற்றிமாலை இண்டை முதலிய திருமாலைகளைச் சூட்டுவித்து அவனது கீர்த்தி களை ஆரியம் தமிழ் முதலிய மொழிகளால் பூபாளம் முதலிய இராகங்களைக் காலானுகுணம் அறிந்து தோத் திரம்பண்ணி,—

தீது இல் திரு விளக்கு இட்டு - கொட்டையில் உண்டாகியதன்றிக் குற்றமற்ற கபிலைமுதலிய பசுவின் நெய்யால் திருவிளக்கும் பார்த்து,—

திருநந்தவனமும் செய்து - கோட்டுப்பூ முதலிய நால்வகைப் பூக்களையுடைய அழகிய நந்தவனமும் செய்து உண்டாக்கி,—

வேடம் கண்டால் அடியேன் செய்வது யாது பணியீர் என்று பணிந்து அவர்தம் பணியும் இயற்றுவது - சிவனடியாராகிய உருத்திராக்கம் என்னும் திருவேடம் உடையாரைக்கண்டால் 'அடியேன் செய்யக் கடவ பணிவிடை யாது? அருளிச்செய்யீர்' என்று தெண்டம்பண்ணி விண்ணப்பம்செய்து அவர்கள் திருவுளம்பற்றிய பணிவிடையும் செய்து,—

*" பரம சிவனமலன் பத்தர்க்குச் சின்னம்*
*உருவுடலிற் கண்டியுநீ றும் "*

*—சைவசமயநெறி - பொது -* ***162.***

*எனவும்,*

*" எவரேனும் தாமாக இலாடத் திட்ட*
*திருநீறும் சாதனமும் கண்டால். . . . காணலாமே "*

*—திருநாவு - கன்றுப்பூர் - தாண்டகம் -* ***3.***

*எனவும வருமாறு காணக.*

இ சரியை செய்தோர் ஈசன் உலகு இருப்பர் - இங்ஙனம் கூறிய இச்சரியைத் தொழிலை அநுட்டித்தோர் சிவன்தன் உலகத்தை அடைந்து மகத்தான போகங்களைப் புசித்திருப்பார்கள் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் காமிகம், சுப்பிரபேதம் என அறிக.*

**2.** நிரம்பவழகியர் :

**அ - கை :** முன் சொல்லிவந்த நாலு மார்க்கத்தில் தாதமார்க்கத்தின் முறைமை மேல் அருளிச்செய் கின்றார்.

**இ - ள் :** தாதமார்க்கம் சாற்றின் - பரமேசுவர னுக்கு அடிமைப்பட்டு அடிமைத்திறம் செய்கிறவர்க ளுடைய வழிபாட்டைச் சொல்லின்,—

சங்கரன் தன் கோயில் தலம் அலகு இட்டு இலகு திரு மெழுக்கும் சாத்தி - சிவலிங்கப்பெருமானுயனூர் எழுந்தருளியிருக்கிற திருக்கோயிலுக்குத் திருவலகும் இட்டு விளங்கத் திருமெழுக்கும் சாத்தி.—

போதுகளும் கொய்து பூ தார் மாலை கண்ணி புனிதற்கு பல சமைத்து - திருப்பள்ளித்தாமங்களும் எடுத்துப் பொலிவினையுடையதாகிய தொடையல் மாலை கோவை கண்ணி தம்பிரானுர்க்குச் சாத்துகிற படிக்கு ஈடாகப் பலவாகப் பத்திபண்ணி.—

புகழ்ந்து பாடி - அவனுடைய கீர்த்திகளையும் சொல்லி வாழ்த்தி.—

தீது இல் திரு விளக்கு இட்டு - குற்றமற்ற திரு விளக்குகளும் இட்டு.—

திரு நந்தவனமும் செய்து - நன்ருகத் திருநந்த வனங்களும் வைத்து.—

திருவேடம் கண்டால் அடியேன் செய்வது யாது பணியீர் என்று பணிந்து அவர்தம் பணியும் இயற்று வது - சிவனுடைய அடியாராகிய திருவேடத்தாரைக்

கண்டால் 'அடியேன் செய்யத்தக்க பணிவிடை யாது' என்று தண்டம்பண்ணி, 'அருளிச்செய்யவேணும்' என்று கேட்டு, அவர்களருளிச்செய்த பணிவிடையும் செய்து முடிப்பது.—

இ சரிதை செய்வோர் ஈசன் உலகு இருப்பர் - இச்சரிதைத்தொழிலைச் சாத்திரம்சொன்ன முறைமை யிலே செய்து முடித்தவர்கள் சிவலோகத்திலே இருப் பார்கள் என்றவாறு.

*இதனல் சொல்லியது தாத மார்க்கத்துக்குச் சொல்லப்பட்ட திருவலகிடுகிறது முதல் சிவனடி யாரை வழிபடுகிறது ஈருகச் சொல்லப்பட்ட திருத் தொழில்களை இந்த முறைமையிலே செய்தவர்கள் சாலோக்கியத்தைப் பெறுவர்கள் என்னும் முறை மையை அறிவித்தது.* (கக)

### செய்யுள் —271

புத்திரமார்க் கம்புகலில் புதியவிரைப் போது
 புகையொளிமஞ் சனமமுது முதல்கொண் டைந்து
சுத்திசெய்தா சனமூர்த்தி மூர்த்தி மானும்
 சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த
பத்தியினல் அருச்சித்துப் பரவிப் போற்றிப்
 பரிவிெைடும் எரியில்வரு காரியமும் பண்ணி
நித்தலும்இக் கிரியையினை இயற்று வோர்கள்
 நின்மலன்றன் அருகிருப்பர் நினையுங் காலே.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் புத்திரமார்க்கம் உணர்த்துகின்ருர்.

என்பது: புத்திரமார்க்கம் புகலின் - கிரியாபாத மாகிய புத்திரமார்க்கத்தின் பகுதியைச் சொல்லின்,—

புதிய விரை போது புகை ஒளி மஞ்சனம் அமுது முதல் கொண்டு - பழம்பூ முதலாயின இன்றி மணம் பொருந்திய நாண்மலர் தூபம் தீபம் திருமஞ்சனம் அமுது முதலாயின கொண்டு,—

ஐந்து சுத்தி செய்து ஆசனம் மூர்த்தி மூர்த்திமான் ஆம் சோதியையும் பாவித்து ஆவாகித்து - பூதசுத்தி முதலிய பஞ்சசுத்திகளையும் செய்து ஆதாரசத்தி முதல் சத்திபரியந்தமாக ஆசனம் பூசித்து அதன்மேலே வித்தியாதேகமாகிற மூர்த்தியைக் கற்பித்து அந்த மூர்த்திக்கு அதிட்டாதாவாய் இருக்கிற சோதி ரூபத்தைத் தியானித்து ஆவாகித்து,—

சுத்த பத்தியினால் அருச்சித்து பரவி - 'சுவாமீ! தேவரீர் அடியேன் செய்யும் கிரியையை இந்தச் சிவ லிங்கத்திலே எழுந்தருளியிருந்து கைக்கொண்டருள வேணும்' என்று வேண்டிக்கொண்டு விண்ணப்பம் செய்து குற்றமற்ற பத்தியினால் ஏகாக்கிர சித்தனாய் இருந்து சோடச உபசாரங்களினாலே அர்ச்சனைபண்ணி முடித்து,—

போற்றி - தோத்திரங்களும்பண்ணித் துதித்து,—

பரிவினொடும் எரியில் வரு காரியமும் பண்ணி - வைதிகம் சைவம் வைதிகசைவம் ஆகிய மூவிதத் தோரும் தமக்கு அருகமான அக்கினிகாரியத்தை ஆதரவோடும் கூடிச் செய்து,—

நித்தலும் இ கிரியையினை இயற்றுவோர்கள் நின் மலன் தன் அருகு இருப்பர் நினையுங்கால் ஏ - இந்தக் கிரியையினை நாடோறும் முட்டாமற்செய்து முடித்தோர்கள் இருக்குமிடம் விசாரிக்கில் சிவனது சமீபத்தில் இருப்பார்கள் என்றவாறு.

*'மூட்டாமே நாடோறும் நீர்மூழ்கி'*

*— சுந்தரர் - பறியனூர் - 3.*

*என வருவதும் அறிக.*

*இதற்குப் பிரமாணம் அஞ்சுமான், காமிகம், ஞானரத்நாவலி என அறிக.*

**2.** நிரம்பவழகியர் :

அ - கை : மேல் புத்திரமார்க்கம் அருளிச்செய்கின்றார்.

இ - ள் : புத்திரமார்க்கம் புகலில் - பரமேசுவரனுக்கு உபதேசத்தினாலே புத்திரராயுள்ளவர்கள் செய்யும் கிரமத்தைச் சொல்லில்,—

புதிய விரை போது - நவமாயிருக்கப்படாநின்ற திருமெய்ப்பூச்சு முதலான பல சுகந்தத் திரவியங்களும் திருப்பள்ளித்தாமமும்,—

புகை ஒளி மஞ்சனம் அமுது முதல் கொண்டு - தூபம் தீபம் திருமஞ்சனம் அமுது முதலானவை எல்லாம் நன்றாகவரத் தேடிவைத்துக்கொண்டு,—

ஐந்து சுத்திசெய்து - பூதசுத்தி ஆன்மசுத்தி திரவிய சுத்தி மந்திரசுத்தி இலிங்கசுத்தி என்று சொல்லப்பட்ட அஞ்சு சுத்திகளையும்பண்ணி,—

ஆசனம் மூர்த்தி மூர்த்திமான் ஆம் சோதியும் பாவித்து ஆவாகித்து - ஆதனமூர்த்தியும் மூலமாகச் சாதித்து அந்த மூர்த்திமானை சோதியைத் தியானிக் கும்படி பிரமாமுதல் சதாசிவம் ஈருகத் துவாதசாந்தத் திலே கூடிக் கோடிசந்திரப்பிரகாசம்போலப் பாவித்து இந்தப் பொருளைச் சிவலிங்கப்பெருமானிடத்திலே ஆவாகனம்பண்ணி,—

சுத்த பத்தியினுல் அர்ச்சித்து - அழுக்கற்று நின் மலமாய் இருக்கிற அன்புடனே கூடியிருந்து அருச்

பரவி போற்றி - புகழ்ந்து தோத்திரங்களும் செய்து,—

பரிவினெடு எரியில் வரு காரியமும் பண்ணி - விருப்பத்துடனே அக்கினிகாரியமும் செய்து.—

நித்தலும் இ கிரியையினை இயற்றுவோர்கள் - நாள்தோறும் சாத்திரம் சொன்ன முறைமையிலே இப்படிச் சிவனை அருச்சிக்கிறவர்கள்.—

நின்மலன்தன் அருகு இருப்பர் நினையுங்கால் ஏ - மலரகிதனுய் இருக்கிற சிவனுடைய சமீபத்திலே இருப்பர்கள் விசாரித்துப் பார்க்கும் இடத்து என்ற வாறு.

*சொல்லியது புத்திரமார்க்கத்துக்குச் சொல்லப்பட்ட புதியவிரைபபோது முதல் அக்கினி காரியம் ஈருக நாள்தோறும் இந்த முறைமையிலே செய்து முடித்தவர்கள் சாமீப்பியத்தைப் பெற்றிருப் பார்கள் என்னும முறைமை அறிவித்தது.* (உ௰)

செய்யுள் –272

சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்துவளி இரண்டும்
சலிப்பற்று மூச்சதுர முதலாதா ரங்கள்
அகமார்க்க மறிந்தவற்றின் அரும்பொருள்களுணர்ந்தங்
கணைந்துபோய் மேலேறி அலர்மதிமண் டலத்தின்
முகமார்க்க அமுதுடலம் முட்டத் தேக்கி
முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக வினைகள்
உகமார்க்க அட்டாங்க யோக முற்றும்
உழத்தலுழந் தவர்சிவன்றன் உருவத்தைப் பெறுவர்.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் சகமார்க்கம் உணர்த்துகின்றார்.

என்பது: சகமார்க்கம் - யோகபாதமாகிய சக மார்க்கமாவது.—

புலன் ஒடுக்கி தடுத்து வளி இரண்டும் சலிப்பு அற்று - பதுமாதனம் முதலிய ஆதனங்களில் ஒன்றில் ஒன்றியிருந்து விடயங்களின்வழிப் புலன்கள் செல்லாதபடி ஆமையானது அவயவங்களை உள்ளடக்கு மாறுபோல அடக்கி, இஃது ஆசனம்: இரேசக பூரகங்களில் சரிக்கும் வாயுவினைத் தடுத்துக் கும்பித்துப் பிராணவாயுவைச் சுழுமுனையிலே நிறுத்தி அசைவற்று இருந்து, இது பிராணாயாமம்,—

மூ சதுரம் முதல் ஆதாரங்கள் அகமார்க்கம் அறிந்து - தனது சரீரத்தினுள்ளே முக்கோணம் முதலிய ஆறு ஆதாரங்களின் ஆகிருதியினையும் அஃது இருக்கும் தானங்கள் முதலியவற்றையும் அறிந்து

ஆதாரங்கள்தோறும் இருக்கும் பதும தளங்களையும் அவைகளில் இருக்கும் அதிதேவதைகளையும் அட்சரங் களையும் அறிந்து தியானித்து.—

அவற்றின் அரு பொருள்கள் உணர்ந்து அங்கு அணைந்து போய் மேல் ஏறி அலர் மதிமண்டலத்தின் முகமார்க்க அமுது உடலம் முட்டதேக்கி முழு சோதி நினைந்திருத்தல் முதலாக - மூலாதாரத்திலிருக்கும் அக் கினி மண்டலத்தில் அக்கினியைச் சொலிப்பித்து, ஆதாரங்கட்கு மேலே சென்று, அவ்விடத்தில் பொருந் துக குண்ட சொரூபிணியா நக்ஃ ற ந்த சந்$ ரமண்டலத் ல் அமிர்தத்தை உருகப்பண்ணி, மற்ற ஆதாரங்கள் அனைத்தினும் அதோமுகமான பதுமங்களவை ன் கிரந்திக கொண்டு பேதித்து, விந்துத்தானத்தின் வழியே இறங் கிப்பெருகாநின்ற அமிர்ததாராப்பிரவாகத்தைத் தனது தேகம் முழுதும் நிறைய நினைத்துத் தான் தியானம் பண்ணப்படும் பொருளினிடத்திலே, அடிக்கிறகாற்று னது. எப்படிச்சலியாமல் வியாபித்திருக்கும் அது போலப் பரிபூரணமான பிரகாச ஆனந்தத்திலே அழுந் தியிருத்தல் முதலாகவுள்ளன; இது சமாதி.—

வினைகள் உக மார்க்க அட்டாங்கயோகம் முற்றும் உழத்தல் உழந்தவர் சிவன் தன் உருவத்தைப் பெறு வர் - வினைகள் கெடுதலின்பொருட்டுச் சகமார்க்க மாகிய யோகபாதத்து இப்படிப்பட்ட அட்டாங்க யோகத்தை இயம நியமத்துடன் கூடி நாடோறும் வருந்திச் சாதித்தவர்கள் சிவனது திருமேனியைப் போலத் தாங்களும் வடிவெடுத்துக்கொண்டு அவனது ]ல் இருப்பார்கள் என்றவாறு.

சகமார்க்கத்தைத் தலைக்குறைத்து 'மார்க்க அட்டாங்கயோகம்' என்றார்.

"இயம நியமம் இணங்கா தனம்யாம்
அயர்வில்பிரத் யாகார மாகும் – முயலுங்கால்
தாரணை யோடு தியான சமாதியுமென்
றோரிருநான் கங்கமுமி யோக"

என அறிக. இது பொழிப்பு. மேல் அகலம்:-

1 †மூலாதாரமாவது குதத்துக்கு இரண்டு அங்குலத்துக்கு மேல் இலிங்கத்துக்கு இரண்டு அங்குலத்துக்குக் கீழ் என அறிக.

இதற்கு வடிவு முக்கோணம். இதில் செந்தாமரை இதழ்கள நான்கு. இவைகளில் நிற்கும அக்கரங்கள் வ, ஶ, ஷ, ஸ என நான்காம். இவைகட்கு அதிதேவதைகள் விநாயகன், வைரவன, கேத்திரபாலன், சண்டன் என நால்வர்.

2. மேல் ‡சுவாதிட்டானமாவது இலிங்கமூலம. இதறகு வடிவு அறுகோணம. அநேக காந்தியினை உடைய ஆறிதழ்தாமரை. இவையிற்றில் நிற்கும்

†மூலாதார பத்மம் நான்கு தளங்களுடன் இருப்பது. வ ஶ ஷ ஸ என்று நான்கு வர்னங்களுடையது. வரதா, ஸ்ரீ, ஷண்டா, சரஸ்வதி என்பவர்களால் சேவிக்கப்படுவள் அம்பிகை ஆகலின் 'மூலாதாராம்புஜாரூடா' என்றும் 'வரதாதி நிஷேவிதா' என்றும் லலிதாஸஹஸ்ரநாமத்தில் கூறப்படுகிறது.

‡சுவாதிஷ்டானபத்மம் ஆறுதளங்கள் உடையது. இத்தளங்களில் ப 2, ம, ய, ர, ல என்று ஆறு வர்னங்கள் உள்ளன. பந்தினீ, பத்ரகாளி, மஹாமாயா, யசஸ்விநீ, ரக்தா, லம்போஷ்டி முதலானவர்களோடு கூடியவளாக அம்பிகையிருப்பதால் 'பந்தின்யாதி ஸமந்விதா' எனவும், 'ஸ்வாதிஷ்டாநாம்புஜகதா' எனவும் கூறப்பட்டிருக்கிறாள்.

அக்கரங்கள் ல ஸ ஹ ய ர ல என ஆறு இதழ களில் நிற்கும் அதிதேவதை பிரதிட்டை, சுத்த தைரினி, பாவனை, இருடி, பதமனி, பத்மயோகி என அறுவர்.

3. மேல் *மணிபூரகம்: இதற்குத் தானம நாபி. வடிவு மூன்றுவட்டம். இரத்தினப்பிரபை போன்ற பதுமதளங்கள் பத்து. இவைகளில் நிற்கும அக்கரங கள் ட ஊ ண த ய த ய ந ப ப எனப் பத்து. இவைகளுக்கு அதிதேவதை தூலாராட்சி, நிலா ராட்சி, கைலாசனி, புலங்கினி, உபாகி, உட்டிணீகை, வாசினி, நேத்திரகரீ, தவகீ, நவகீ என்ப பதின்மர்.

4. மேல் $அநாகதம்: இதற்குத் தானம இரு தயம. வடிவு முககோணம். புறகென்ற நிறத்தினையும் பனிரண்டிதழினையுமுடைய தாமரை. இவைகளில் நிற்கும அட்சரங்கள் க ல ங ல ஞ ல ஊ ஜ ஜ ஞ ட ○

*மணிபூரகபத்மம் நாபியிலிருப்பது, பத்துத்தளங்களுடையது. — ட, ண, த 4, ந, ப 2 ஆகப் பத்துவர்ணங்கள் உள்ளன. டாமரீ, டங்காரணீ, ஞாஞு, தாமஸீ, ஸ்தாண்வீ, தாக்ஷாயணீ, தாதரீ, நாரீ, பாாவதீ, பட்காரிணீ என்னும் பதின்மரால் சூழப்பட்டவள் ஆகலின் அம்பிகைக்கு 'மணிபூராப்ஜ நிலயா' எனவும், 'டாமர்யாதி பிராவ்ருதா' எனவும் கூறப்பட்டுள்ளது.

$இருதயத்திலிருப்பது. பனவிரண்டு தளங்கள் உடையது. இந்தத் தளங்களில் க 4, ங, ச 4, ஞ, ட 2 ஆகப் பன்னிரண்டு வர்னங்கள் உள. காளராத்ரி, கண்டிதா, காயத்ரீ, கண்டா கர்ஷிணீ, ஙார்ணு, சண்டா, சாயா, ஜயா, ஜங்காரிணீ, ஞானரூபா, டங்கஹஸ்தா, டங்காரிணீ முதலிய சக்திகளால் சூழப்பட்டவள் ஆகலின் அம்பிகைக்கு 'அனாஹதாப்ஜநிலயா' என்றும், 'காலராத்ர்யாதி சக்த்யௌகவ்ருதா' என்றும் சகஸ்ரநாம ஸ்தோத்திரத்தில் கூறப்பட்டிருக்கிறது.

எனப் பன்னிரண்டு. இவைகட்கு அதிதேவதை கசனீ, சாதநி, சோஷி, காலேணி, வேணி, ஆட்சணி, சாமுண்டி, வீராட்டி, துர்க்கா, செடிகா, அசரணீ, கரணீ எனப் பன்னிருவர்.

5. மேல் §விசுத்தி: இதற்குத் தானம் கண்டம். வடிவு அறுகோணம். இதில் சுவேதபத்மதளம் பதினாறு. இவைகளில்நிற்கும் அட்சரங்கள் அ ஆ இ ஈ உ ஊ ரு ரூ லு லூ ஏ ஐ ஓ ஔ அம் அ: எனப்பதினாறு. இவைகட்கு அதிதேவதை மாண்டி, புட்படி, திரி, சிருஙகி, சுவரா, அசனி, இராத்திரி, தர்மதரணீ, சாயா, அறபாசனி, காராட்சி, தூலாசினி, ரூபா, சாரிணி, காலாசி, கமலா எனப்பதினாறுவர்.

6. இனி, *ஆக்ஞாத்தானம் புருவமத்திமம். இதில் செந்தாமரைத்தளங்கள் இரண்டு இவைகட்கு அட்சரம் ஹ க்ஷ என இரண்டு. இவைகட்கு அதிதெய்வம் சுந்தரி, ஆனந்தி எனவிருவர்.

§விசுத்திசக்கரம் கண்டப் பிரதேசமாம். அது பதினாறு தளங்களுடையது. அகாரம் முதல் விஸர்க்கம் உள்பட பதினாறு ஸ்வரங்கள் உடையன. அம்ருதா, ஆகர்ஷிணி, இந்த்ராணி, ஈசாநீ, உமா, ஊர்த்துவகேசீ, ருத்திதா, ருகாரா, லுகாரா, லூகாரா, ஏகபதா, ஐஸ்வர்யாத்மிகா, ஓங்காரா, ஔஷதி, அம்பிகா, அக்ஷரா என்னும் சக்திகளால் சூழப்பட்டுள்ளமையின் அம்பிகை 'அம்ருதாதி மஹாசக்தி ஸம்விருதா' என்றும், 'விசுத்தி சக்ரநிலயா' என்றும் ஸஹஸ்ரநாமத்தில் கூறப்பட்டுள்ளது.

*ஆக்ஞாசக்கரம் புருவங்களுக்கு நடுவில் இரண்டு தளங்களையுடையது. ஹ, க்ஷ என்ற இரண்டு வர்ணங்கள் உள. ஹம்ஸவதி, க்ஷமாவதி என்ற இரண்டு சக்திகளால் சூழப்பட்டு விளங்குபவள். ஆகையால் (ஹம்ஸவதீ, க்ஷமாவதீ) 'ஹம்ஸவதீ முக்ய சக்தி ஸமந்விதா' என்றும், 'ஆக்ஞா சக்ராப்ஜநிலயா' என்றும் ஸஹஸ்ரநாமத்தில் அம்பிகையின் பெயர் கூறப்படுகிறது.

*இவைகள் எல்லாவற்றையுமட ஆனந்தமாகப் பண்ணிக்கொண்டு அதற்கு மேலாகிய பிரமரந்திரத் திலே ஆயிரம் தளத்துடன் கூடிய பதுமத்தின் மேலே பரமசிவன் எழுந்தருளியிருப்பார். சில ஆக மங்களில் நவாதாரமாகவும் கூறும. அஃது உரைக் கில் விரியும; ஆயினும் சிறிது கூறுதும். அவை மூலாதாரம் முதல் விசுத்தி ஈருக முன்பு சொன்ன வாறு. அதற்குமேல் கிரியாசத்தி ஞானசத்தி இச்சா சத்தி இம்மூன்று மண்டலம் அவை ஒவ்வொன்றுக் குப் பதினாறு தளமும், அவற்றில் அகாரம் முதலிய அக்கரங்கள் பதினாறுமாம்: விந்து நாதங்களுடன் கூடியிருக்கும். அதற்குமேல் பிரமரந்திரத்தின் முந் நூற்று அறுபது தளங்களையுடைய தாமரை பரா சத்திமயமாய் இருக்கும். அதில் பரமசிவனைப பாவிக் கின் முத்தியடைவர் என அறிக.*

*இதற்குப் பிரமாணம் மகுடம், சுப்பிரபேதம், விசுவம், சிந்தியம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** மேல் சகமார்க்கம் அருளிச்செய் கின்ருர்.

இ - ள் : சகமார்க்கம் புலன் ஒடுக்கி - சகமார்க் கம் என்று சொல்லப்பட்டது ஐம்புலன்களையும் விசுவ வியாபாரத்தில் செல்லாமல் அடக்கி,—

தடுத்து வளி இரண்டும் சலிப்பு அற்று - பிராணு யாமத்தினலே உச்சுவாச நிச்சுவாசங்கள் இரண்டும் தடுத்துச் சத்தம் சலனம் அற்று,—

முச்சதுரம் முதல் ஆதாரங்கள் அகமார்க்கம் அறிந்து - மூன்று சதுரமான மூலாதாரம் முதலான ஆறு ஆதாரங்களுக்கு உண்டான வழிகளை அறிந்து,—

அவற்றின் அரும் பொருள்கள் உணர்ந்து அங்கு அணைந்து போய் மேல் ஏறி - அவையிற்றினுடைய அரிதான அந்த அத்தங்களையும் அறிந்து அவ்விடங் களிலே பொருந்தி அந்த ஆதாரங்களுக்கு மேலே சென்று,—

அலர்மதி மண்டலத்தின் முக மார்க்க அமுது உடலம் முட்டத் தேக்கி - விரிந்த சந்திரமண்டல முகத்தின் வழியில் உண்டான அமுதத்தைத் தன்னு டைய தேகமுழுதும் நிரம்பத்தேக்கி,—

முழு சோதி நினைந்து இருத்தல் முதலாக வினைகள் உக மார்க்கம் - எல்லாப் பிரகாசமும் கூடிநிறைந்த பிரகாசத்தைப் பொருளாகத் 'தியானித்திருப்பது இவ னுடைய கன்மங்கள் எல்லாம் சமமாகத்தக்க வழிக்கு ஏதுவாம்; இஃது அன்றியும்,—

அட்டாங்கயோகம் முற்றும் உழத்தல் உழந்தவர் - இயமம் நியமம் ஆதனம் பிராணாயாமம் பிரத்தியா காரம் தாரணை தியானம் சமாதி என்னும் அட்டாங்க யோகம் தொடங்கி மற்றுள்ள யோகங்கள் எல்லாம் சாதிக்கிற இதுயோகமாம்; இப்படிச்சாதித்தவர்கள்,—

சிவன்தன் உருவத்தைப்பெறுவர் - பரமேசுவரனை ஒத்த சாருபமான திருமேனியைப் பெறுவார்கள் என்றவாறு.

*இதனால்சொல்லியது, சகமார்க்கத்துக்குச் சொல் லப்பட்ட புலன்களை ஒடுக்குகிறது முதல் அட்டாங்க யோகம ஈருக இந்த முறைமையிலே செய்து முடித்த வர்கள் சாரூப்பியத்தைப் பெறுவார்கள் என்னும் முறைமையை அறிவித்தது.* (உக)

## செய்யுள்—273

**சன்மார்க்கம் சகலகலை புராண வேத**
**சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவும் உணர்ந்து**
**பன்மார்க்கப் பொருள்பலவும் கீழாக மேலாம்**
**பதிபசுபா சம்தெரித்துப் பரசிவனைக் காட்டும்**
**நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான**
**ஞேயமொடு ஞாதிருவும் நாடா வண்ணம்**
**பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி ஞானப்**
**பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் காணே.**

**1.** மறைஞானசம்பந்தர் :

மேல் சன்மார்க்கம் உணர்த்துகின்ருர்.

என்பது : சன்மார்க்கம் - சன்மார்க்கம் ஆகிய ஞானபாதமாவது,—

புராணம் வேதம் சாத்திரங்கள் சமயங் கள் தாம் பலவும் உணர்ந்து - அறுபத்து நான்கு கலை ஞானம் பதினெண்புராணம் நாலு வேதம் வேதத்தின் வழியாகிய தர்க்கம் வேதாந்தம் பிரபாகரம் பாட்டம் வைசேடிகம் சாங்கியம் எனக் கூறிய சமயசாத்திரங் கள் ஆறு இவை அல்லாமல் வேதத்துக்குப் புறம்பு ஆகிய உலோகாயதம் பௌத்தம் ஆருகதம் முதலான

சமயங்கள் உட்சமயங்கள் இச்சமய சாத்திரங்கள் என்று இங்ஙனம் கூறிய பலவற்றையும் ஓதி அறிந்து.--

பல் மார்க்க பொருள் பலவும் கீழ்
பதி பசு பாசம் தெரித்து - இங்ஙனம் கூறிய பலசமயி களும் தங்கள் கோட்டாட்டையே பரம் என்று கூறு வதனைக் கீழ்ப்படுத்தி மேலான சித்தாந்தவசனத்தான் நிராகரித்து அவைகளுக்கெல்லாம் விசிட்டமான பதி பசு பாசங்களை உள்ளபடி அறிந்து.—

பரசிவனை காட்டும் நல்மார்க்க ஞானத்தை நாடி
ஞான ஞேயமொடு ஞாதிருவும் நாடாவண்ணம் பின்
மார்க்கச் சிவனுடன் ஆம் பெற்றி - பரமசிவனைக் காட்டும் ஞானமாகிய அறிவையும் அதனால் அறியப் படும் பொருள்களாகிய ஞேயத்தையும் அறிவானாகிய ஞாதிருவையும் இதுஎனக் கருதாதபடி பரமசிவனைக் காட்டும் சிவஞானத்தை விசாரித்தறிந்து பின்பு அதற்கு அப்பாற்பட்ட சிவனுடன் ஒன்றுபட்டு அயிக்கமான சமரசியபாவமாம் ஆனந்தத்தைப் பொருந்தி அநுப வித்திருக்கும் முறைமை ஞானாசாரியன் உபதேசித்த வழியே துரியங்கடந்த சமாதியைப் பொருந்தி அநுப வித்திருக்கும் முறைமை.—

ஞானப் பெருமை உடையோர் சிவனை பெறுவர்
காண் ஏ - இம்முறைமையினையுடைய ஞானவான்க ளாகிய பெரியோர்கள் சிவசாயுச்சியமாகிய பரமுத் தியை அடைவார்கள் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் காமிகம், சிந்தியம், கந்த புராணம் என அறிக.*

2. யர்:

அ - கை: மேல் சன்மார்க்கத்தின் முறைமை அருளிச்செய்கின்றார்.

இ - ள்: சன்மார்க்கம் சகலகலை புராணம் வேத சாத்திரங்கள் சமயங்கள் தாம் பலவும் உணர்ந்து - சன்மார்க்கமாவது, பலகலை ஞானங்கள் வேதங்கள் பல சாத்திரங்கள் புராணங்கள் உலோகாயதன்முதலா யுள்ள புறச்சமயங்களுள் உட்சமயங்கள் என்று சொல்லப்பட்ட பலவகையிற்றையும் ஆராய்ந்து அறிந்து அப்படி அறியவே பல மார்க்கத்தில் உள்ள பொருள்கள் எல்லாம் சத்தியம்போலே தோன்றி அசத்தியமாய்ப்போம்; ஆகையாலே,—

பல் மார்க்க பொருள் பலவும் கீழ் ஆக மேல் ஆம் பதி பசு பாசம் தெரித்து - பலசமயங்களிலும் சொல்லப் பட்ட அத்தங்களெல்லாம் கீழ்ப்படுத்தி எல்லாத்துக்கு மேலாய் இருக்கிற பரமேசுவரனுடைய இலக்கணத் தையும் பாசங்களுடைய இலக்கணத்தையும் கூறு செய்து,—

பரசிவனை காட்டும் நல் மார்க்க ஞானத்தைநாடி - மேலான பரமேசுவரனைத் தரிசிப்பிக்கைக்கு நல்ல வழியான பரஞானத்தை ஆசாரியனாலே அறிந்து,—

ஞான ஞேயமொடு ஞாதிருவும் நாடாவண்ணம் - இவனுக்குக் காட்டுகிற ஞானமும் காணப்படுவதா யிருந்துள்ள ஞேயமும் அதனோடு காண்கிற ஞாதிரு வாகிய தானும் என்கிற சங்கற்பங்களும் பொருந் தாதபடி,—

பின் மார்க்க சிவன் உடனும் பெற்றி - பின்பு இந்த ஞானத்தின்வழித்தாய்த் தற்போதம் சீவியாமல் நிற்கவே சிவனைவிட்டு நீங்காமல் நிற்கிற ஞானத்தைப் பெற்று ஞானமேயாய் விடுவார்கள்; இந்த நிலை கூடினவர்கள்,—

ஞானப் பெருமை உடையோர் சிவனை பெறுவர் காண் ஏ - இப்படிப் பரிபூரணமான அந்த ஞானத்தைப் பொருந்தினவர்கள் அந்த ஞானத்தினலே சிவனோடே கூடிச் சிவனாய் நிற்பர்கள் என்றவாறு.

*'பின் மார்க்கச் சிவனுடனும் பெற்றி' என்றது ஆன்மதரிசனம்; 'ஞானப் பெருமையுடையோர்' என்றது ஆன்மசுத்தி; 'சிவனைப் பெறுவர் காணே' என்றது ஆன்மலாபம் என்னுமதும் கண்டுகொள்க.*

*இதனல் சொல்லியது சன்மார்க்கமாவது வேதாகம புராண சாத்திரங்கள் எல்லாவற்றையும் ஆராய்ந்தறிந்து, உட்சமயம் புறச்சமயங்களில் உள்ள பேதங்களையும் அவை ஒன்று சொன்னது ஒன்று சொல்லாத அந்தங்களையும் அறிந்து, அவையிற்றைக் கீழ்ப்படுத்தி, அவற்றிற்கு மேலாயிருக்கிற பதி பசு பாச மார்க்கத்தின் உண்மையை அறிவது எனறும், அந்தப் பதிஞானத்தாலே சிவனுடைய திருவடியைப் பெறுகிறது சாயுச்சியம் என்னும் முறைமையும் அறிவித்தது.* (உஉ)

செய்யுள்—274

ஞானநூல் தனைபோதல் ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல் நன்று
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில்ஞான பூசை

**ஊனமிலாக் கன்மங்கள் தபம்செபங்கள் தியானம்**
**ஒன்றுக்கொன் றுயருமிவை ஊட்டுவது போகம்**
**ஆனவையான் மேலான ஞானத்தால் அரனை**
**அருச்சிப்பர் வீடெய்த அறிந்தோ ரெல்லாம்.**

**1.** மறைஞானசம்பந்தர் :

கருமயாகம் முதலியவைகள் போக ஏதுகம் என்றும், ஞானயாகங்களாகிய வித்தியாபாதம் மோட்ச ஏதுகம் என்றும், அவற்றினும் இது சிறப்புடைத்து என்றும் உணர்த்துகின்றார்

**என்பது :** ஞானநூல்தனை ஓதல் - காமிகாதியான திவ்வியாகமங்களை ஓதல்,—

*அஃதாவது, ஆசாரியன் வடக்கே முகமாதல் கிழக்கே முகமாதல் இருந்து அசிரணம முதலிய குற்றமின்றித் தன்முன்னே மெழுகி அதில் பருதிகளைச் சூழவைத்து நடுவே சிவனையும், பக்கத்தில் குருவையும் கணபதியையும் பூசித்து, அதிலே விதிவழிசெய்த யந்திர பீடத்தை வைத்து, அதன்மேலே பரிவட்டம விரித்து, அதிலே ஆகமத்தை வைத்துப் பூசித்துப் படித்தல்.*

- அந்த ஆசாரியன் உத்தமமான மாணுக்கர்க்கு ஆகமங்களைப் போதிக்குமிடத்து அபிமுகமாக மாணுக்கனை இருக்கக் கற்பித்துச் சிருட்டி காலத்தில் ஆகமங்கள் இருபத்தெட்டும் ஈசான முகத்தில் தோன்றின என்றும், அவை சிவபேதம் உருத்திர பேதம் என இருவகைப்படும் என்றும், அவையிற்றைப் பிரணவர் முதலிய அறுபத்து அறுவரும் கேட்டார்கள் என்றும், உபாகமம் இருநூற்று எழு பேதம்

என்றும், தற்புருடம் முதலிய கீழ் நோக்கிய முகத்தில் தோன்றின ஆகமம் இன்னது என்றும், ஆகமங்கள் பரம்பரை பரசம்பந்தம், தற்சம்பந்தம், அந்தராள சம்பந்தம், திவ்யசம்பந்தம், அதிவ்யசம்பந்தம், திவ் வியாதிவ்விய சம்பந்தம் என ஆறு சம்பந்தத்துடன் ஆசாரிய பரம்பரை முற்கூறித் தனது ஆசாரிய பரம்பரை ஆகமம் கேட்ட முறையும் உணர்த்திப் பின்பு தான் சொல்லப்போகிற பொருளையும் அதனால் பெறும் பலத்தினையும் கூறி அசிரணம் முதலிய குற்ற முள்ள இடத்தும், திட்சாஈனர் உள்ள இடத்தும் படிப்பியாமல் பாம்பு பூனை தவளை முதலியவை குறுக்கே செல்லாமல் படிக்கும் நாட்களிலே மாணாக் கர்க்கு உளங்கொளப் படிப்பித்தல்*,—

நல் பொருளை கேட்பித்தல் - "கருத்துப் பதப் பொருள் காட்டு விஞ விடை" எனக் கூறிய ஐந்து உறுப்புடனும் சம்பிரதாயத்துடனே மாணாக்கர்க்கு வியாக்கியானம் செய்வது,—

தான் கேட்டல் - ஐயம் திரிவு முதலிய குற்றமறத் தன் ஆசிரியனிடத்தில் அப்பொருளைக் கேட்டல்,—

நன்று ஆக ஈனம் இலா பொருள் அதனை சிந்தித்தல் - தான் கேட்ட பொருளைத் தனக்கொத்த சம்பிரதாயிகளுடன் கூடியிருந்து நாடோறும் சிந்தியா நிற்றல்,—

*இவையிற்றால் பலம் யாது? என்னின்,*

*இக்கருத்தை இந்நூல் 837-ம் பக்கத்திலும் காணலாம்.

ஐந்தும் இறைவன் அடி அடைவிக்கும் - முற்கூறிய ஓதல் முதலிய ஐந்தும் பரமேசுவரனுடைய சீபாதங்களை அடையப்பண்ணும்.—

எழில் ஞான பூசை - ஆதலால் இவையிற்றை அழகிய ஞானயோகம் என்று திவ்வியாகமங்கள் சொல்லாநிற்கும்.—

ஊனம் இலா கன்மங்கள் தபம் செபங்கள் தியானம் - சிவபூசை முதலிய நித்திய கன்மங்கள் செய்வது கன்மயாகம் என்றும், சாந்திராயண விரதம் முதலிய வற்றால் சரீரத்தை மெலிவித்தல் தபோயாகம் என்றும், மானதம் முதலிய மூவிதத்தால் செபம் செய்வது செபயாகம் என்றும்,

*" காண்பானும் காட்சியும் காணப் படும்பொருளும்*
*மாண்பாம் தியான வகை "*

என்பதனால் தனக்குவேண்டியதொருபொருளை ஆற்று நீரானது ஒழுகுமாறுபோல இடையறாது தியானம் செய்தல் தியானயாகம் என்றும் சொல்லப்படும்.—

ஒன்றுக்கு ஒன்று உயரும் - கன்மம் முதலியன ஒன்றுக்கொன்று உயர்ந்த பலமாம்.—

*அஃது எங்ஙனம்? என்னில், கன்மத்தைப்பற்றத் தவம் பதின்மடங்கு பலம் அதிகம்; அதனைப்பற்றச் செபம் நூறுமடங்கு பலம் அதிகம்; அதனைப்பற்றத் தியானம் ஆயிரமடங்கு அதிகமாயிருக்கும்; இவை எந்தப் பலனைக் கொடுக்கும்? என்னில்,*

அவை ஊட்டுவது போகம் - கன்மாதி யாகங்களின்வழி நின்று அநுட்டித்தவர்கட்கு அவை

போகத்தைக் கொடுக்கும்; அந்தப்போகம் தொலைந்தவாறே மற்றொரு சரீரம் எ காரணமாம்.—

ஆனவையான் மேலான ஞானத்தால் அரனை அருச்சிப்பர் வீடு எய்த அறிந்தோர் எல்லாம் - இத் தன்மை யுடையது ஆதலினாலே மோட்சம் அடையக் கருதின ஞானவான்கள் எல்லாரும் விசிட்டமான ஞான பூசனையினாலேயே சிவனை அனவரதமும் அருச் சியாநிற்பர்கள் என்றவாறு.

*அமமி முதலிய பெருஞ் சிலைகளைச் செய்து அவற்றைச் சுமந்துகொண்டு உழன்று திரிந்து விற்ற வனுக்குப் பிரயாசம மகத்தும் பிரயோசனம அற்ப மானதும் போலக் கன்மாதிகளைச் செய்தவர்க்கும் சாதனையில் பிரயாசம் மகத்தும் பலம் அற்பம் என வும, ஒளிமிகுந்த பற்பராகம முதலிய இரத்தினம் கையிற்கொண்டிருந்து போய் விற்றவனுக்குப் பிர யாசம் அற்பமும பிரயோசனம மகத்தானதும போல ஞான பூசையைச் செயதவர்க்கும சாதனையில் பிர யாசம் அற்பம பலம மகத்தாய அளவற்றிருக்கும் எனவும் அறிக.*

*இதற்குப் பிரமாணம் சிவதருமோத்தரம், ஞானு மிர்தம் என அறிக.*

2. நிரம்பவழகியர்:

**அ - கை:** முன்சொன்ன பரஞானத்தாலே சிவனைக் கூடுதற்கு அரிது என்ற மாணுக்கனை நோக்கி, அபர

ஞானத்தாலே கூடுகிற முறைமை மேல் அருளிச் செய்கின்ருர்.

இ - ள் : ஞான நூல்தனை ஓதல் ஓதுவித்தல் நல் பொருளை கேட்பித்தல் தான் கேட்டல் நன்று ஆம் ஈனம் இலா பொருள் அதனை சிந்தித்தல் ஐந்தும் - ஞான சாத்திரங்களைத் தான் ஓதலும் பிறர்க்கு அந்தச் சாத் திரங்களை ஓதுவித்தலும் அந்தச் சாத்திரங்களில் உண் டான நல்ல அத்தங்களைப் பிறருக்குச் சொல்லுதலும் தான் பிறரிடத்திலே கேட்டலும் நன்ருகக் குற்றம் அற்ற அந்தப்பொருளை ஆராய்ந்து அறிதலும் என்று சொல்லப்பட்ட ஐந்தும்,—

இறைவன் அடி அடைவிக்கும் எழில் ஞான பூசை - இங்ஙனம் சொல்லப்பட்டவையெல்லாம் கர்த் தாவுக்கு அழகிய ஞானபூசையாய் இருக்கும் ஆகை யாலே அவனுடைய திருவடியிலே பொருந்தும்படி பண்ணும்,—

ஊனம் இலா கன்மங்கள் தபம் செபங்கள் தியா னம் ஒன்றுக்கு ஒன்று உயரும் இவை ஊட்டுவது போகம் - குற்றமில்லாத யாகாதி கன்மங்கள் தபசு களைப் பண்ணுகை செபங்கள் தியானங்கள் இவை தன்னில் ஒன்றுக்கு ஒன்று மேற்பட்டிருக்கும்; அப் படியிருந்தாலும் புசிப்புக்கு ஏது ஒழிந்து இவையிற் ருலே மோக்ஷம் உண்டாகாது,—

ஆனவையால் மேலான ஞானத்தால் அரனை அருச் சிப்பர் வீடு எய்த அறிந்தோர் எல்லாம் - ஆகையாலே இவையிற்றுக்கு எல்லாம் மேலாயிருக்கிற சிவனைப் பெற்றுச் சிவாநுபவத்தை அநுபவித்துக்கொண்டு

இருப்பர்கள் மோட்சத்தைப்பெறுகிற முறைமை அறிந்த பெரியோர்கள் எல்லாம் என்றவாறு.

*இதனுல் சொல்லியது, ஞானசாத்திரத்தை ஓது கிறது முதலாயுள்ள அபரஞானத்தாலே பரஞானத் தைப் பெறலாம் என்றும், கனமனக்கும் முதல் நாலும் ஒன்றுக்கு ஒன்று மேலாயிருக்கும் என்றும், அவையிற்றினுல் போகம் ஒழிந்து மோக்ஷம் உண் டாகாது என்றும், ஞானத்திஞலே மோக்ஷம் உண் டாம் என்றும் அறிந்த பெரியோர்கள் அநவரதமும் அந்த ஞானத்திஞலே சிவனேடே கூடியிருப்பர்கள் என்னும் முறைமையும் அறிவித்தது.* (உரு)

செய்யுள்—275

**கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை**
**கிளத்தலென ஈரிரண்டாம் கிளக்கின் ஞானம்**
**வீட்டையடைந் திடுவர்நிட்டை மேவி னேர்கள்**
**மேவாது தப்பினவர் மேலாய பதங்கட்(கு)**
**ஈட்டியபுண் ணியநாத ராகி இன்பம்**
**இனிதுநுகர்ந் தரனருளால் இந்தப் பார்மேல்**
**நாட்டியநற் குலத்தினில்வந் தவதரித்துக் குருவால்**
**ஞானநிட்டை அடைந்தடைவர் நாதன் தாளே.**

1. மறைஞானசம்பந்தர் :

மேல், கேட்டல் முதலிய நான்கினுள் ஞான நிட்டையினையுடைய ஞாதாக்கள் பெறும் பலம் இஃதென்பதூஉம், அஃதுருதார் பெறும் பலம் இஃது என்பதூஉம் வரையறைசெய்து உணர்த்துகின்ருர்.

**என்பது:** கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை கிளத்தல் என ஈர் இரண்டு ஆம் கிளக்கில் - ஞானுசாரியனிடத்திலே ஓதின திவ்வியாகமங்களின் பொருளைத் தமக்குப் புலப்படக் கேட்டலும் அதனை மறவாமல் தமக்கு ஒத்த நல் இனத்துடன் கூடி நாடோறும் சிந்தித்தலும் அதனை அறிவில் தெளிதலும் தெளிந்த மேலான ஞானத்துடன் கலந்து நிட்டை புரிதலும் எனச் சாத்திரத்தில் பொருளின் கிரமம் சொல்லின் நான்கு பிரகாரமாய் இருக்கும்,—

ஞானம் வீட்டை அடைந்திடுவர் நிட்டை மேவினோர்கள் - இவ்வாறு சமாதி அடைந்தவர்கள் ஞானத்தால் உண்டாகும் பரமமோட்சத்தை அடைவார்கள்,—

மேவாது தப்பினவர் மேல் ஆய பதங்கட்கு ஈட்டிய புண்ணிய நாதர் ஆகி இன்பம் இனிது நுகர்ந்து அரன் அருளால் இந்த பார்மேல் - கேட்டல் முதலிய வற்ருேடும் கூடிப் பின்பு நிட்டை கூடாதவர்கள் அந்தத் தபோபலத்தினலே சிவலோகம் முதலிய புவனங்கட்கு ஆர்ச்சித்த புண்ணிய கர்த்தாக்களாய் அவர்கள் மூவேழ் இருபத்தொருதலைமுறையில் உண்டான சுற்றத்தாருடன் சிவலோகத்தில் நூறுகோடி கற்பகாலம் இருந்து ஆண்டுள்ள மகாபோகங்களை நன்ருய் அநுபவித்துத்தொலைந்தபின் மாயன் பிரசாபதி இந்திரன் கந்திருவர் இயக்கர் இவர்கள் உலகங்களில் உண்டான போகங்களை அந்த அந்தக் காலவரையும் இருந்து அடைவிலே அநுபவித்து அவை தொலைந்த பின் சிவனது காருண்ணியத்தினலே இந்தப் ·ฦ யின்கண்,—

நாட்டிய நல் குலத்தினில் வந்து அவதரித்து - வேதாகமங்களில் கூறப்பட்ட நல்ல தேசம் நல்ல சாதி நல்லவரிடத்தினும் தோன்றி,—

குருவால் ஞானநிட்டை அடைந்து அடைவர் நாதன் தாள் ஏ - சிரவணம் மனனம் நிதித்தியாசனம் முற்றுதலானும் பூர்வ வாதனையினுனும் ஞாஞசாரி யனை அடைந்து அவன் அநுக்கிரகத்தினுலே ஞான நிட்டையைப் பொருந்தியிருந்து பிராரத்த கன்மம் தொலைந்தவாறே சிவனது சீபாதகமலங்களை அடையா நிற்பர்கள் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம நிச்சுவாசம், சிவதருமோத் தரம், சுப்பிரபேதம், மிருகேந்திரம் என அறிக.*

2. நிரம்பவழகியர் :

அ - கை : இந்த நிட்டை கூடாது என்ற மாணுக் கனை நோக்கி, மேலும் ஓர் உபாயநிட்டை அருளிச் செய்கின்ருர்.

இ - ள் : கேட்டல் - முற்செனனங்களில் செய்த சரியை கிரியை யோகங்களின் முற்றுதலினுலே ஆசா ரியன் அருளிச்செய்த ஞாஞேபதேசங்களை ஏகாக்கிர சித்தனுய்க்கொண்டு விரும்பிக்கேட்டல்,—

உடன் சிந்தித்தல் - முன் சொல்லப்பட்ட திரி பதார்த்தங்களைக் கேட்டபொழுதே இப்படியோ பதியின் உண்மை? இப்படியோ பசுவின் உண்மை? இப்படியோ பாசத்தின் உண்மை? என ஆராய்வது சிந்தித்தலாம்.—

தெளிதல் - இப்படி ஆராயப்பட்ட பாசத்தின் உண்மை பசுவின் உண்மையில் கூடாமல், பசுவின் உண்மை பதியின் உண்மையில் கூடாமல் பாச ஞானம் அஞ்ஞானம் பசுஞானம் சுதந்திரஹீனம் ஆகையால் பதிஞானமே உண்மையாகவுள்ளது இதுவேபொருள் எனத் தெளிவதே தெளிதலாம்,—

நிட்டை கிளத்தல் - பதிஞானம் பெத்தத்தில் ஆன்மா ஒழிந்து தான் ஒரு முதல் இல்லை என அந்த ஆன்மாவாய் நின்ற தன்மைபோல இந்த ஆன்மாவும் அந்த ஞானம் ஒழிந்து தான் ஒரு முதல் இல்லை என்ன அந்த ஞானம்தானாய் நின்றுவிடுதல் நிட்டை கூ( நலாம்,—

என ஈர் இரண்டு ஆம் - இப்படியே கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என நாலுவகையாம்,—

கிளக்கில் ஞானவீட்டை அடைந்திடுவர் நிட்டை மேவினோர்கள் - இவையிற்றுக்கு உண்டான பேறு களைச் சொல்லுமிடத்து நிட்டையிலே பொருந்தின வர்கள் ஞானத்திலே உண்டாக்கப்பட்ட சாயுச்சியத் தைப் பெறுவர்கள்,—

மேவாது தப்பினவர் - அல்லது கேட்டுச் சிந்தித் துத் தெளிந்தமாத்திரத்திலே நிட்டை கூடாதவர் களுக்குச் சாயுச்சியம் உண்டாகாது,—

மேலாய பதங்கட்கு ஈட்டிய புண்ணிய நாதர் ஆகி - மேலாகிய சாலோக்கியம் ஆதியான பதமுத்தி களைப்பெற்று அதற்குக் கர்த்தாக்களாக இருந்து,—

இன்பம் இனிதின் நுகர்ந்து - அவ்விடங்களில் உண்டான சுகங்களை நன்றாக அநுபவித்து,—

அரன் அருளால் இந்த பார்மேல் நாட்டிய நல் குலத்தினில் வந்து அவதரித்து - அது தொலைந்த பின்பு தம்பிரானுருடைய காருண்ணியத்தினுலே இந்தப் பூமி யின்கண்ணே வேதாகமங்களிலே சொல்லப்பட்ட தபசு பொருந்தியிருக்கிற நல்ல சாதிகளிலே வந்து தோன்றி அந்தச் செனனந்தன்னிலே,—

குருவால் ஞானநிட்டை அடைந்து அடைவர் நாதன் தாள் ஏ - ஆசாரியனுலே ஞானநிட்டையைக் கூடி, பரமேசுவரனுடைய சீபாதத்தைப் பொருந்தா நிற்பர்கள் என்றவாறு.

*இதனுல் சொல்லியது கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என ஞானம நாலுவகைப்பட்டு இருக்கும் என்றும், நிட்டை கைகூடினவர்கள சாயுச் சியத்தைப் பெறுவர்கள எனறும், நிட்டை கூடாத வர்கள சாலோக்கியம ஆதியான பதமுத்திகளைப பெற்று அதற்குக் கர்த்தாக்களாய் இருந்து அந்தப் போகத்தையும அநுபவித்துத் தொலைந்தபினபு தம்பிரானுருடைய காருண்ணியத்தினுலே பூமியின் கண்ணே நல்ல சாதிகளிலேவந்து தோன்றி ஆசாரிய னுலே ஞானநிட்டையைப்பெற்று அதினுலே பரமேசு வரனுடைய சீபாதத்தைப பெறுவர்கள எனனும் முறைமையும் அறிவித்தது.* (உச)

## செய்யுள்—276

**தானமியா கம்தீர்த்தம் ஆச்சிரமம் தவங்கள்**
**சாந்திவிர தம்கன்ம யோகங்கள் சரித்தோர்**
**ஈனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவின் மீள்வர்**
**ஈசனியோ கக்கிரியா சரியையினில்**

**ஊனமிலா முத்திபதம் பெற்றுலக மெல்லாம்**
**ஒடுங்கும்போ தரன்முனிலா தொழியினுற்ப வித்து**
**ஞானநெறி அடைந்தடைவர் சிவனை அங்கு**
**நாதனை முன்னிற்கின் நணுகுவர்நற் றுளே.**

**1.** மறைஞானசம்பந்தர் :

மேல் வேதத்தில் சொல்லிய வர்ணுச்சிரம நீதியிலே நின்றவர்கட்கும், சிவசமயப் பிரவேசியாய்த் திவ்விய ஆகமத்தில் சொல்லிய சரியை கிரியா யோகங்களில் நின்றவர்கட்கும் பலம் இஃதென வரையறை செய்து உணர்த்துகின்ருர்.

**என்பது:** தானம் யாகம் தீர்த்தம் ஆச்சிரமம் - துலாபுருடம் முதலிய மகாதானம் பண்ணிஞேரும் அக்கினிட்டோமாதி யாகம் பண்ணிஞேரும் கங்கை முதலிய தீர்த்தம் ஆடிஞேரும் பிரமச்சரியம் முதலிய ஆச்சிரமத்தின்வழி நின்றவர்களும்,—

தவங்கள் சாந்தி விரதம் கன்ம யோகங்கள் சரித்தோர் - சாந்திராயணம் முதலிய தவங்களைப் புரிந்தவர்களும் பரிகாரங்களைப் பண்ணினவர்களும் மாசோபவாசம் முதலிய விரதங்களை அநுட்டித்தோரும் கன்ம யோகத்தின் வழிநின்று சாதித்தவர்களும் 'சுருதிவழி யொழுகினவர்கள் சொர்க்கத்தார்' என்பதனுல் இங்ஙனம் சொல்லிய எல்லாரும்,—

ஈனம் இலா சுவர்க்கம் பெற்று - குற்றமற்ற சுவர்க்கத்தை அடைந்து ஆண்டுள்ள போகம் புசித்துத் தொலைந்தவாறே,—

இமைப்பளவின் மீள்வர் - இமை கொட்டி விழிக்கு முன்னே பூமியின்கண் வந்து பிறப்பார்கள்.—

*எனவே, சரியை முதலியவற்றைச் செய்தார் சிவ லோகாதி மேலான பதங்களில் நெடுங்காலமிருந்து மேலான போகங்களைப் புசித்திருத்தல் போலன்றி, அற்பகாலம அற்பபோகம புசித்திருந்து உடனே திருமபுவார்கள என்றதாம.*

ஈசன் யோகக் கிரியா சரியையினில் நின்றோர் - சிவன் அருளிச்செய்த திவ்விய ஆகமங்களில் கூறிய சரியை கிரியை யோகங்களை அநுட்டித்தவர்கள்.—

ஊனம் இலா முத்தி பதம் பெற்று - கேடில்லாத சாலோக சாமீப சாரூபம் என்னும் பதமுத்திகளைப் பெற்றிருந்து.—

*இவை வடமொழி ஸ: என்றது அவன் என்ற தாம்; ஆதலால் அவன உலகத்தை, அவன் சமீ பத்தை, அவன் ரூபததைப் பெற்றிருந்து என அறிக. இப் பதமுத்தியாவது பரமசிவன் அநுக்கிரகத்தைப் பெற்ற மந்திரநாயகராகிய நூற்றெட்டுருபத்தெண்மரில் சிகண்டபரமேசுவரன எழுந்தருளியிராநின்ற பிரகிரு தியில் சிவலோகம என அறிக.*

உலகம் எல்லாம் ஒடுங்கும்போது அரன் முன் நிலாது ஒழியின் - குஞ்சித நாத பரியந்தம் என்னும் உலகங்கள் முற்றும் ஒடுங்குவதான மத்திமப் பிரளய காலத்தில் பக்குவமில்லாவிடத்துச் சிவன் அநுக்கிரகம் பண்ணுதிருந்தாராகில்.—

உற்பவித்து ஞான நெறி அடைந்து அடைவர் சிவனே - அந்தப் பிரகிருதியினின்றும் சங்கரிப்புண்டும் சிருட்டிகாலத்தில் மீளவும் சிருட்டிப்பட்டு அந்தப் போகங்களைப் புசித்திருந்து அதில் வைராக்கியம்பிறந்து முத்தி அடையவேணுமென்னும் இச்சையுண்டாய் முற்செனனத்தில் விட்டகுறையினலே ஞானமார்க்கத்தை அடைந்து கேட்டல் முதலியவற்றின் வழி நின்று அநுட்டித்து நிட்டையைப் பொருந்தி நாத தத்துவ புவனத்தை அடைந்து அங்குள்ள போகம் புசித்திருந்து மகாசங்காரகாலத்திலே சிவன் அவர்களை அவலோகனம் பண்ணி அநுக்கிரகம் பண்ண அப்பொழுது அவர்கள் அற்பமாகச் சேடித்துள்ள மலமும் தீர்ந்து சிவசாயுச்சிய வைபவமான பரமுத்தியினை அடைவார்கள்.—

அங்கு நாதனே முன் நிற்கின் நணுகுவர் நல் தாளே - அந்தப் பிரகிருதியை அடைந்திருந்து சங்காரப்படும்போது அவர்கள் பக்குவராயினராகில் பரமேசுவரன் அநுக்கிரகத்தினலே அவர்களும் நாததத்துவ புவனத்தை அடைந்து அங்குள்ள (மகாற்ப) போகம் புசித்திருந்து மலலேசம் முற்றும் தீர்ந்து அவனது அழகிய பாததாமரையை அடைதல் என்னும் பர மோட்சத்தை அடையாநிற்பர்கள் என்றவாறு.

*" திதியினு தாரத்தைச் சேர்ந்துமலந் தீர்க்கப்*
*பதியுயிர்க்கு நாதம் பதி "*

*" நாத மொடுங்கிடு நாட்டீர் நவைசிறிது*
*போதத்தன் மீளார் புகுந்து "*

*—பதிபசுபாசப்பனுவல் - போதக - 8, 10.*

*என்னும் திருவாக்கினும் அறிக.*

*இதற்குப பிரமாணம சிவதருமோத்தரம், சுப்பிர பேதம், மிருகேந்திரம் என அறிக.*

*ஆனால், சிவனை அடைவர் என்றும், நற்றுனை நணுகுவர் எனறும, சாட்சாத மோட்சமாகிய சிவசா யுச்சிய பதத்தை அடைவர் என்றும ஓதியிருக்க, நாத தத்துவ புவனத்தை அடைவர் என்று ஓதியது எனனை ? எனின, அங்கண் அடைந்துள்ளார் முத் தரே எனப் பௌட்கரத்தில் ஓதியிருக்கையினாலும் சார்வைப் பொருந்தினவர்கள் எல்லாரும சிவதுல் லியர் எனறு ஓதியிருக்கையினாலும், சில ஆகமங் களில் சுத்தாத்துவாவைப பாசம எனறு ஓதியிருக் கையினாலும என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

அ - கை : ஆன்மாக்கள் புண்ணியங்களைச்செய்து போகங்களைப் புசிக்குமிடத்து இருக்கிற பதங்கள் எல்லாம் ஒத்து இராமல் ஒன்றுக்கு ஒன்று ஏற்றங் குறைந்தது என் நம்பு என்ற மாணுக்கனை நோக்கி அருளிச்செய்கின்ருர்.

இ - ள் : தானம் - கோதானம் பூதானம் முதலாக உண்டான தானங்கள்,—

யாகம் - சோமயாகம் முதலான யாகங்கள்,—

தீர்த்தம் - கங்கை முதலான தீர்த்தங்கள்,—

ஆச்சிரமம் - தேவதாருவனம் முதலான ஆச்சிர மங்கள்,—

தவங்கள் - பஞ்சாக்கினிநடு ஜலத்தின்நடு முதலாகச்செய்கிற தவங்கள்,—

சாந்தி - நன்மைப்பகுதிகளைப் பொருந்தியிருக்கிற சாந்திகள்,—

விரதம் - மாதோபவாசம் அட்டமிவிரதம் முதலான விரதங்கள்,—

கன்மயோகங்கள் - சிவயோகம் அன்றியே சரீர வருத்தமாகச் செய்யப்பட்ட யோகங்கள்,—

சரித்தோர் - தானம் முதலானவற்றைச் செய்தவர்கள்,—

ஈனம் இலா சுவர்க்கம்பெற்று இமைப்பளவில் மீள்வர் - குற்றமற்றிருக்கிற சுவர்க்கத்தைப் பெற்று அவ்விடத்தில் உண்டாகிய இன்பங்களை அநுபவித்து அது தொலைந்தவாறே ஒருகணப்பொழுதிலே பூலோகத்திலே மீண்டு வருவர்கள்; இந்தப் பசு புண்ணியத்தின் முறைமை அன்றியும்,—

ஈசன் யோக கிரியா சரியையினில் நின்றோர் - பரமேசுவரன் அருளிச்செய்த சிவாகமம் சொன்ன முறைமையிலே சரியை கிரியை யோகங்களை அநுட்டித்தவர்கள்,—

ஊனம் இலா முத்தி பதம் பெற்று - குற்றமற்ற சாலோக்கிய சாமீப்பிய சாரூப்பியம் என்னும் பதமுத்திகளைப் பெற்று, சருவசங்காரமளவும் அந்தப் பதங்களில் உண்டாகிய போகங்களைப் புசித்துக்கொண்டிருப்பர்கள்.—

உலகம் எல்லாம் ஒடுங்கும்போது - பிரபஞ்சம் எல்லாம் சங்காரப்படும்பொழுது,—

அரன் முன் நிலாது ஒழியின் - பரமேசுவரன் இவர்களை அந்த அவதரத்திலே முன்னின்று இரட்சியான் ஆகில்,—

உற்பவித்து - மீண்டும் செனனத்தையடைந்து,—

ஞானநெறி அடைந்து அடைவர் சிவனை - முன்பு விட்டகுறையிலே அந்த ஞானத்தைப் பொருந்தி அதின்வழித்தாய் அந்த ஞானத்திலே சிவனைப் பெரு நிற்பர்கள்,—

அங்கு நாதனே முன் நிற்கின் நணுகுவர் நல் தாளே - அந்தச் சங்காரகாலத்திலே பரமேசுவரன் முன்னின்று இரட்சிப்பானுகில் அப்பொழுதே அவனுடைய நன்மைப் பகுதியாயிருந்துள்ள சீபாதத்தைக் கூடாநிற்பர்கள் என்றவாறு.

*இதனுல் சொல்லியது தானம் யாகம முதலான பசுபுண்ணியங்களைச் செய்தவர்கள் சொர்க்காதி பதங்களைப் பெற்று அங்குள்ள சுகங்களை அநுபவித்துத் தொலைந்தவாறே இமைப்பில் பூலோகத்திலே வருவர்கள் என்றும், சிவபுண்ணியம் என்று சொல்லப்பட்ட சரியை கிரியை யோகங்களைச் செய்தவர்கள் பதமுத்திகளைப் பெற்றிருப்பர்கள் என்றும், சஙகாரகாலம் வந்த அவதரத்திலே பரமேசுவரன் அநுக்கிரகிக்கில் அவ்விடந்தன்னிலே சாயுச்சியத்தைப் பெறுவர்கள் என்றும், அவ்விடத்தில் அநுக்கிரகம் செயதானில்லையாகில் மீளவும்செனனத்தை எடுத்து ஞானத்திஞலே*

*சிவனுடைய சிபாதத்தைப் பெறுவர்கள் என்னும முறைறமையும் அறிவித்தது.* (உ௫)

செய்யுள்—277

சிவஞானச் செயலுடையோர் கையில் தானம்
 திலமளவே செய்திடினும் நிலமலைபோல் திகழ்ந்து
பவமாயக் கடலினழுந் தாதவகை எடுத்துப்
 பரபோகம் துய்ப்பித்துப் பாசத்தை அறுக்கத்
தவமாரும் பிறப்பொன்றிற் சாரப் பண்ணிச்
 சரியைகிரி யாயோகம் தன்னிலும்சா ராமே
நவமாகும் தத்துவஞா னத்தை நல்கி
 நாதனடிக் கமலங்கள் நணுகுவிக்கும் தானே.

1. மறைஞானசம்பந்தர் :

ஞானவான்களிடத்தில் கொடுத்த தான லேசத்தின் மகிமையை உணர்த்துகின்றார்.

என்பது: சிவஞானத்தை யுடையராய்ச் செயலறுதிவந்து சிவனது திருவருள்ஞானத்தின் வழிஒழுகும் செயலினையுடைய ஞாதாக்களிடத்தில் எள்ளளவு பொருளைத் தானமாகக் கொடுப்பினும் அந்தத் தானம் தத்துவத்தாலாய பயமானது நிலத்தைப்போல விரிந்தும் மலையைப்போல உயர்ந்தும் மகத்தாய்ச் செனனமாகிய மயக்க சாகரத்தினின்றும் அமிழ்ந்தாதபடி கரையேற்றிச் சிவலோகாதி பதங்களின் உசிதமான மேலான போகங்களைப் புசிப்பித்து.—

*போகமாவன காலாக்கினிருத்திரபுவனமதொடுத்துக் கலா தத்துவ புவனபரியந்தம் உள்ள அதிகார கர்த்தாக்கள புசிக்கும் போகம் அபரபோகம்;*

*தற்புவன வாசிகள் புசிக்கும் போகம் பரபோகம் என அறிக. சுத்தாத்துவா எனின் அஃது அபரமுத்தித் தானம என அறிக. அஃதேல், பரமுத்தித்தானம் யாதெனில், சிவசாமமியவைபவம என அறிக. ஆத லால் போகம இருவிதம, முத்தி இருவிதம எனக. இந்நான்கும மிருகேந்திரத்து அறிக.*

பாசத்தைப் போக்கும்படிக்குத் தவத்தைப் பொருந்துதற்கு ஏற்ற நல்ல வங்கிசத்தில் ஒரு செனனம் எடுப்பித்து வருந்திச் செய்யும் சரியை கிரியா யோகங்களினும் பொருந்தாமல் புதுமை பொருந்திய தத்துவ ஞானத்தைக் கொடுத்துப் பரமேசுரனுடைய திருவடிஞானத்தைப் பொருந்துவிக்கும் என்றவாறு.

*என்று இப்படித் தானமகத்துவம சொல்லவே சிவஞானிகள் மகத்துவமும் அவர்களுக்குத் தானம் செய்த நல்லோர் மகத்துவமும் கூறியதாயிற்று. ஞானவான்கள் தாம் வாங்கின நம்மைப்போல விருப்ப முடையவர் ஆகாரோ எனின்,*

*'' மெய்யினை யுணர்ந்த ஞானி வேணவா விடுத்தா னேனும்*
*உய்யவே பிறரை யுன்னி யவர்கொடை யுவப்பன் ''*

*—சிவதருமோத்தரம் - பலவிசிட்ட - 41.*

*என்பதனுல் அறிக.*

*இதற்குப் பிரமாணம சிவதருமோத்தரம், மிருகேந்திரம், பௌட்கரம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** பாத்திர அபாத்திரங்களை அறிந்து தானம்செய்யும் முறைமை அருளிச்செய்கின்றார்.

இ - ள் : சிவஞான செயல் உடையோர் கையில் தானம் திலம் அளவே செய்திடினும் நிலம் மலைபோல் திகழ்ந்து - தேகாதிப்பிரபஞ்சத்தை விட்டு நீங்கியிருக்கிற சிவஞானிகள் கையிலே கொடுக்கப்பட்ட திரவியம் ஓர் எள்ளளவு ஆகிலும் அது பூமியின்கண் உண்டான மகாமேரு என்ன சக்கரவாளகிரி என்ன விட்டு விளங்கி,—

பவம் மாய கடலில் அழுந்தாவகை எடுத்து - செனன மரணமாகிய மயக்கத்தைப் பொருந்தியிருக்கிற துக்கசாகரத்திலே விழுந்து அழுந்தாதபடி எடுத்து,—

பரபோகம் துய்ப்பித்து - மேலான போகங்களைப் சிப

பாசத்தைஅறுத்து - பாசங்களை நாசமாக்கும்படி,—

தவம் ஆரும் பிறப்பு ஒன்றில் சாரப்பண்ணி - அரிய தவசுகளைச் செய்யத்தக்க கோத்திரங்களிலே வந்து ஒரு செனனம் எடுப்பித்து.—

சரியை கிரியா யோகம் தன்னிலும் சாராமே - சிவஞானிகள் கையில் கொடுக்கப்பட்ட தானம் ஆகையாலே திரிவிதகரணங்களில் உண்டாகிய தொழிலாலே செய்யும் சரியை கிரியை யோகம் என்று சொல்லப்பட்டவையிற்றிலும் பொருந்தாமல்,—

நவம் ஆரும் தத்துவஞானத்தை நல்கி - நாளும் நாளும் புதுமை பொருந்தி யிருக்கப்படாநின்ற உண்மைஞானத்தையும் கொடுத்து,—

நாதன் அடி கமலங்கள் நண்ணுவிக்கும் தானே - தம்பிரானுடைய சீபாத கமலங்களிலே தானே பொருந் 1க்கும் என்றவாறு.

*1தலுல் சொல்லியது திலம் அளவாயினும் சிவ நச் செயததானம, மகாமேருபோல மகத் தாகிய பிறவிக்கடலிலே நின்றும் எடுத்து, மேலான போகஙகளைப் புசிப்பித்து, பாசம் நாசமாமபடி தவ கோத்திரத்திலேவந்து ஒரு செனனம எடுப்பித்து, சரியை கிரியை யோகங்களையும அநுட்டியாமல் உண்மை ஞானத்தை உண்டாக்கும் என்றும், அந்த ஞானந்தானே தமபிரானுருடைய திருவடித்தாமரை களில் கூட்டுவிகரும் என்னும முறைமையும் அறி வித்தது.* (உசுா

செய்யுள்—278

**ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம்**
**நல்லஆ கமஞ்சொல்ல அல்லவா மென்னும்**
**ஊனத்தார் என்கடவர் அஞ்ஞா னத்தால்**
**உறுவதுதான் பந்தமுயர் மெய்ஞ்ஞா னந்தான்**
**ஆனத்தா லதுபோவ தலர்கதிர்முன் இருள்போல்**
**அஞ்ஞானம் விடப்பந்தம் அறுமுத்தி யாகும்**
**ஈனத்தார் ஞானங்கள் அல்லா ஞானம்**
**இறைவனடி ஞானமே ஞான மென்பர்.**

1. மறைஞானசம்பந்தர் :

கன்மகாண்டிகளைக் குறித்து முத்திக்கு ஞானமே காரணம் என்று உணர்த்துகின்றார்.

**என்பது :** ஞானத்தால் வீடு என்றே நால் மறை கள் புராணம் நல்ல ஆகமம் சொல்ல - நாலுவேதமும் பதினெட்டுப் புராணமும் இருபத்தெட்டுத் திவ்விய

ஆகமங்களும் ஞானத்தால் முத்தியென்று முறையிட்டுச் சொல்லாநிற்க,—

*அவை எங்ஙனமென்னில், இருக்கில் பிராமணத்திலும், உருத்திர சூக்தத்திலும்; எசுர் வேதத்தில் $ஆரணத்திலும், பிருகதாரண்ணியத்திலும்; சாமத்தில் சாந்தோக்கியத்தில் ஆருவதிலும் ஞானத்தினாலே முத்தி எனவும்; அதர்வசிகையில் ஈசுவர சாட்சாத்காரத்தினாலே முத்தி எனவும்; சைவ புராணத்தும் சூதசங்கிதையினும் ஞானத்தாலே முத்தி எனவும் கூறியிருக்கையினாலே என்க.*

அல்லவாம் என்னும் ஊனத்தார் என் கடவர் - முத்திக்கு ஞானம் காரணமல்ல; கன்மமே காரணம் என்னும் குற்றத்தையுடைய பரசமயிகள் நமக்கு என்கடவார்,—

*அன்றியும், சர்வஞானோத்தரத்தும் காந்தபுராணத்தும் பிருகசாபாலத்தும் சிவதீக்கையினாலே முத்தி என்று ஓதியிருக்க, ஈண்டு ஞானத்தினாலே முத்தி என்று கூறியது என்னை? எனில், "கிரியை என மருவுமவை யாவும் ஞானம் கிடைத்தற்கு நிமித்தம் எனக் கிளக்கும்" (சிவப்பிர - 9) என்பதனாலும், பராக்கியை தேவிகாலோத்தரம் என்னும் ஆகமங்களில் சரியை கிரியை யோகம் இம்மூன்றும் ஞானத்துக்கு அங்கம் என்று கூறுகையினாலும் என அறிக.*

அஞ்ஞானத்தால் உறுவதுதான் பந்தம் - இப்படிச் சொல்லும் அறியாமையால் சரீரபந்தமான செனனம் உண்டாம்,—

$ அராவணத்திலும் எனவும் பாடம்.

உயர் மெய்ஞ்ஞானந்தான் ஆனத்தால் அது போவது அலர் கதிர் முன் இருள் போல் - இந்த மேலான ஞானத்தால் பலம்யாது? என்னில், அஞ் ஞானத்தைக் கெடுக்கும்; அஃது என்போல என்னில், விரிந்த பிரகாசத்தினையுடைய ஆதித்தன்முன் அந்த காரம் போல.—

அஞ்ஞானம் அற பந்தம் அறு முத்தி ஆகும் - அஞ்ஞானம் நீங்கவே பாச பந்தமும் அற்று அப் பொழுது முத்தியையும் அடைவன்,—

ஈனத்தார் ஞானங்கள் அல்லா ஞானம் இறைவன் அடி ஞானமே ஞானம் என்பர் - முன்பின் மலைந்து கூறும் நூலினராய்த் தாழ்ச்சியினையுடைய பரசமயி கள் தத்தம் தெய்வமே மேலானதெய்வம் என்றும் அந்தத் தேவதைகளை அடைந்திருப்பதே முத்தி என் றும் சொல்லாநிற்பவர்கள் ஞானங்களெல்லாம் சுத்த ஞானங்கள் அல்ல, அநாதிமலமுத்த சிற்சத்திமானுய்ச் சர்வகர்த்தாவாயிருக்கிற பரமேசுவரனுடைய மிக்கும் ஒப்பும் இல்லாமல் பக்குவான்மாக்களுக்குப் பாச மோசனம் பண்ணிச் சர்வஞ்ஞத்துவத்தினையும் விளக் கிச் சுவானந்தானுபூதியைக் கொடுக்கும் திருவடி ஞானமே மேலான சுத்தஞானம் என்று அறிவால் உயர்ந்தோர் சொல்லாநிற்பர் என்றவாறு.

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை:** ஞானத்தை நல்கி மோக்ஷத்தைக் கொடுக்கும் என்றது என் நம்பு; கிரியையினுலே மோக்ஷம் என்ற சைவரைநோக்கி மேல் அருளிச் செய்கின்றுர்.

இ - ள் : ஞானத்தால் வீடு என்றே நால் மறைகள் புராணம் நல்ல ஆகமம் சொல்ல - சரியை கிரியா யோகங்களுக்குப் பதமுத்தி ஒழிந்து மோக்ஷம் உண்டாகமாட்டாது ஞானத்தாலே மோக்ஷம் என்று நாலு வேதங்களும் திவ்வியாகமங்களும் புராணங்களும் சொல்லிப்போத,—

அல்லவாம் என்னும் ஊனத்தார் என் கடவர் - அந்த ஞானத்தாலே மோக்ஷம் இல்லை என்று சொல்லுகிற அறிவில்லாதவர்களுக்கு ஞானம் இல்லாதது கொண்டு அஞ்ஞானம் உண்டாம்,—

அஞ்ஞானத்தால் உறுவதுதான் பந்தம் - அந்த அஞ்ஞானத்தாலுண்டாவது செனனம் ஒன்றுமே,—

*அந்தச் செனனந்தான போமபடி எப்படி? எனில்,*

உயர் மெய்ஞ்ஞானம் தான் ஆனத்தால் அது போவது - எல்லாத்துக்கும் மேலாய் இருக்கிற சிவ ஞானம் உண்டானல் அந்தச் செனனம்போம் அல்லது போகாது; அது என்போல,—

அலர் கதிர் முன் இருள் போல் - விட்டுவிளங்கா நின்ற ஆதித்தன் சந்நிதியில் அந்தகாரம் போனாற் போல்,—

அஞ்ஞானம் அற பந்தம் அறு முத்தி ஆகும் - இவனை அநாதியே மறைத்துக்கொண்டு நிற்கிற மல சம்பந்தம் போகவே செனனம் அற்று ஞானம் பிரகாசிக்கும்; அந்த ஞானத்தாலே மோக்ஷம் உண்டாம்,—

ஈனத்தார் ஞானங்கள் அல்லா ஞானம் - இந்தச் சிவஞானம் ஒழிந்து வேறுசொல்லப்பட்ட ஞானங்கள் எல்லாம் போதவீனர் சொல்லுகிற ஞானங்களாம்,—

*போதவான்கள் சொல்லுகிற ஞானம ஏது? எனனில்,*

இறைவன் அடி ஞானமே ஞானம் என்பர் - ஆகையால் பரமேசுவரனுடைய சீபாதத்திலே பொருந்துகைக்கு உண்டான சிவஞானம் மெய்ஞ்ஞானம் என்று சொல்லுவார்கள் அறிவால் உயர்ந்த பெரியோர்கள் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் :*

*'' பல்பணி ஞான காரணம் என்னில்*
*தொல்பணி தொறும் பயன் தொடுப்பதனுலும்*
*ஒருபணி செய்யாச் சிரபுரச் சிறுவரும்*
*அரச ராய தருணத் தலைவரும்*
*முதிர்பர சமயத் திதம்உறும் அரசரும்*
*ஞானம் பெற்ற நன்மையி னுலும்*
*ஈனம்இல் பணிஅருட் கேதுவன் றென்ருல்*
*ஞானேற் பத்தி நிமித்தம்இத் தொழிலென*
*ஏனேர்க் கிறைநூல் இயம்பிற் றென்னும் ''*

*—சங்கற்ப - சைவவாதிநிராகரணம்.*

*என்றும,*

*'' தவம்செய்தார் என்றும் தவலோகம் சார்ந்து*
*பவம்செய்து பற்றறுப்பா ராகத் — தவம்செய்த*
*நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்*
*கற்ருர்சூழ் சொல்லுமாம் கண்டு ''*

*—சிவஞானபோதம்: சூத் - 8, வெண்பா - 1.*

*என்னுமதும் கண்டுகொள்க.*

*இதனல் சொல்லியது சிவஞானத்தாலே ஆன மாக்கள் சிவனுடைய திருவடியைப் பெறுவார்கள் என்றும், அந்த ஞானத்தினலே சென்மம் அறும் என்றும், அல்லாத ஞானங்களெல்லாம் குற்றத்தைப் பொருந்தின ஞானம் ஆகையால் சென்மத்தைப்போக்காது என்னும் முறைமையும் அறிவித்தது (உஎ)*

செய்யுள்—279

சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய
சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோல்
ஆரியனும் ஆசான்வந் தருளால் தோன்ற
அடிஞானம் ஆன்மாவில் தோன்றும் தோன்றத்
தூரியனும் சிவன்தோன்றும் தானும் தோன்றும்
தொல்லுலக மெல்லாந்தன் னுள்ளே தோன்றும்
நேரியனுய்ப் பரியனுமாய் உயிர்க்குயிராய் எங்கும்
நின்றநிலை யெல்லாமுன் நிகழ்ந்து தோன்றும்.

1. மறைஞானசம்பந்தர் :

ஞானசாரியன் சந்நிதிக்கண்ணே பக்குவான்மாவுக்குச் சிவஞானம் தோன்றுவதன்றி மற்றொரு முறைமையினலும் தோன்ருது என்பதனைத் திட்டாந்த பூர்வமாக உணர்த்துகின்ருர்.

**என்பது :** சூரிய காந்தக் கல்லின் இடத்தே செய்ய சுடர் தோன்றியிட - சூரியகாந்தக்கல்லின்கண் சிவந்த ஆதித்தப்பிரகாசம் தோன்ற,—

(செய்ய) சோதி தோன்றுமா போல் - அதன்கண் உள்ள அக்கினி பிரகாசித்துத் தோன்றுமாறு போல,—

ஆரியனும் ஆசான் வந்து அருளால் தோன்ற - சிவானுக்கிரகத்தினாலே சர்வ இலக்கணத்தையும் சர்வ பூச்சியதையும் உடைய ஞானாசாரியன் எழுந்தருளி வந்து பக்குவாதிக்கம் வந்த மாணாக்கனிடத்தில் தோன்றி ஞானோபதேசம் செய்த இடத்து,—

அடி ஞானம் ஆன்மாவில் தோன்றும் - அவன் சந்நிதிமாத்திரத்திலே இவனிடத்துள்ள திருவடி ஞான மாகிய சிவஞானம் பிரகாசித்துத் தோன்றாநிற்கும்,—

தோன்ற தூரியனும் சிவம் தோன்றும் தானும் தோன்றும் - இந்த ஞானம் தோன்றியதால் பிரயோசனம் யாது என்னின் இங்ஙனம் ஆன்மாவுக்கு அந்த ஞானம் தோன்றவே அருபியாய் இற்றைவரைக்கும் தோன்றாதிருந்த சிவமும் வெளிப்படத் தோன்றும் தற்சொருபமும் விளங்கித் தோன்றும்,—

தொல் உலகம் எல்லாம் தன்னுள்ளே தோன்றும்- பழையதாய் வருகிற பிரபஞ்சமெல்லாம் தனது வியாபகத்துக்குள்ளே தோன்றாநிற்கும்.—

*இது சீவன்முத்தத்தன்மை.*

நேரியன் ஆய் பரியனும் ஆய் உயிர்க்கு உயிராய் எங்கும் நின்ற நிலை எல்லாம் - சிவன் அணுவுக்கணுவாய் மகத்துக்கு மகத்தாய் ஆன்மாக்கட்கெல்லாம் பிராண நாயகனாய் எவ்விடத்தும் விட்டுநீங்காமல் பிரகாசித்து நிற்கும் முறைமையெல்லாம்,—

முன் நிகழ்ந்து தோன்றும் - இவன் தெரிசித்துக் காணும்படி விளங்கித் தோன்றாநிற்கும் என்றவாறு.

முன்னர் சீவன்முத்தத்தன்மை என்றதற்கும், இப்போது கூறியதற்கும் பேதம் யாது என்னில், குரு உபதேசமார்க்கத்தால் அறிக.

"சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தம் சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே"

—திருமந்திரம் - 117.

"ஞான மிவனொழிய நண்ணியிடு நற்கலனல்
பானு வொழியப் படின்"

—திருவருட்பயன் - 50.

என்பதனாலும் அறிக.

"நின், தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயப் படலம் கீறித் தூய
ஞான நாட்டம் பெற்றபின் மெய்ம்மை
நின்பெருந் தன்மையும் கண்டேன் காண்டலும்
என்னையும் கண்டேன் பிறரையும் கண்டேன்
நின்னிலை அனைத்தினும் கண்டேன் என்னே
நின்னைக் காணா மாந்தர்
தம்மையும் காணாத் தன்மை யோரே"

—திருவிடைமருதூர்: மும்மணிக்கோ - 13.

என்று அருளிய பிள்ளை திருவாக்கினும்,

"தன்னைத் தெரிவித்துத் தன்தாளி னுட்கிடந்த
என்னைத் தெரிவித்த எல்லைக்கண்"

—போற்றிப்பஃறொடை 85 - 6.

என்பதனானும் அறிக.

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை:** அருவமாய் வாக்கு மனாதீத கோசரனாய் நின்ற சிவன் உருவமாய் வந்து இரட்சித்தது

எப்படி? என்ற பாடாணவாதியை நோக்கி, அருளிச் செய்கின்ருர்.

இ-ள்: சூரியகாந்தக் கல்லின் இடத்தே செய்ய சுடர் தோன்றியிட சோதி தோன்றுமா போல் - சூரிய காந்தம் என்கிற கல்லினிடத்திலே சிவந்த ஆதித்தன் வந்து பிரவேசிக்க அருவமாய் நின்ற அக்கினி உருவ மாய்த் தோன்றுகிற முறைமைபோல,—

ஆரியன் ஆம் ஆசான் வந்து அருளால் தோன்ற அடிஞானம் ஆன்மாவில் தோன்றும் - சுத்தனுய் அருவமாய் நின்ற சிவன் ஆன்மாக்கள்மேலே வைத்த காருண்ணியத்தினுலேதான் தானே ஆசாரியமூர்த்தி யாக வந்துதோன்ற பெத்தத்தன்மையில் இவனை உப கரித்துக்கொண்டு நிற்கச்செய்தேயும் தோன்ருமல் நின்ற சிவஞானம் தன்னிடத்திலே பிரகாசிக்கும்,—

தோன்ற தூரியன் ஆம் சிவம் தோன்றும் - அந்த ஞானம் பிரகாசிக்கவே இத்தனை காலமும் தோன்ருமல் நின்ற சிவதரிசனம் உண்டாம்,—

தானும் தோன்றும் - ஆன்ம தரிசனமும் உண் டாம்,—

தொல் உலகம் எல்லாம் தன்னுள்ளே தோன்றும் - பழையதாய் வருகிற விசுவங்கள் எல்லாம் அசத்தியம் என்கிறமுறைமையும் தன்னிடத்திலே தரிசிக்கலாம்,—

*இவை ஒழிந்தும் அந்த ஞானத்தாலே,*

நேரியன் ஆய் பரியனும் ஆய் உயிர்க்கு உயிராய் எங்கும் நின்ற நிலை எல்லாம் முன்

தோன்றும்-அந்தச் சிவன் அணுவுக்கு அணுவாய் மகத்துக்கு மகத்தாய் சருவான்மாக்களுக்கும் பிராணனாய் எவ்விடத்தும் பரிபூரணனாய் அசைவறநின்ற நிலைமை எல்லாம் சந்தேகமற விளங்காநிற்கும் என்றவாறு.

'ஆரியனும ஆசான்வந்து அருளால் தோன்ற' என்றது பாடாணவாதி.

ஆன்மாக்களிலே விசேடவானகள குருவாய் இவனை இரட்சிக்குமது ஒழிந்து சிவன வாக்கு மனாதீதன ஆகையால் குருமூர்த்தி ஆகான என்ன, சிவனே குருவாய் இரட்சிப்பன என்றதற்குப் பிரமாணம :

"இல்லா முலைப்பாலும் கண்ணீரும் ஏந்திழைபால்
நல்லாய் உளவாமால் நீர்நிழல்போல் - இல்லா
அருவாகி நின்றானை ஆரறிவார் தானே
உருவாகித் தோன்றானேல் உற்று"

—சிவஞானபோதம்: சூத் - 8, வெண்பா - 5.

என்றுமதும் கண்டுகொள்க.

இதனால் சொல்லியது அருவமாகி நின்ற சிவன ஆன்மாக்கள்மேல் வைத்த கிருபையாலே ஆசாரிய மூர்த்தியாக வந்துதோன்ற இவனிடத்திலே அநாதியே அப்பிரகாசமாய்நின்ற சிவஞானம் பிரகாசிக்கும் என்றும், அந்த ஞானத்தினாலே சிவதரிசனம ஆன்ம தரிசனம் பிரபஞ்சமாகிய பாசதரிசனம என்னும மூன்றும தரிசனப்படும் என்றும், இவை ஒழிந்து அந்தச்சிவன் சடசித்துக்கள் இரண்டினும பரிபூரணனாய நின்ற முறைமையும் இவனுக்கு விளங்காநிற்கும் என்னும் முறைமையும அறிவித்தது. (உஅ)

செய்யுள்—280

மிக்கதொரு பக்குவத்தின் மிகசத்தி நிபாதம்
மேவுதலும் ஞானம்விளைந் தோர்குருவின் அருளால்
புக்கநுட்டித் தேநிட்டை புரிந்துளோர்கள்
பூதலத்தில் புகழ்சீவன் முத்த ராகித்
தக்கபிரி யாப்பிரிய மின்றி ஓட்டில்
தபனியத்தில் சமபுத்தி பண்ணிச்சங் கரனே(டு)
ஒக்கவுறைந் திவரவனை அவனிவரை விடாதே
உடந்தையாய்ச் சிவன்றேற்றம் ஒன்றுமே காண்பர்.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் சீவன்முத்தர் இலக்கணம் கூறுகின்றது.

என்பது : மிக்கது ஒரு பக்குவத்தின் மிகு சத்திநி பாதம் மேவுதலும் – ஆன்மாக்கட்கு எங்கும் ஒக்க மலபரிபாகம் வந்துள்ள அளவில் அப்பொழுது அவரிடத்துண்டான மலசத்தியைக் கீழ்ப்படுத்திச் சிவன் தீவிரதரம் என்னும் சத்தியைப் பதித்துள்ள அளவில்,—

ஞானம் விளைந்து – சங்காரத்தில் வெறுப்பும் மோட்சத்தில் விருப்பும் வந்து,—

ஓர் குருவின் அருளால் - ஒப்பற்ற ஞானாசாரியரை அடைந்து அவர் காருண்ணியத்தால் செய்யும் தீக்கையைப் பெற்று,—

புக்கு அநுட்டித்தே நிட்டை புரிந்துளோர்கள் - திரிபதார்த்த ஞானம் வந்து அவர் கற்பித்த அநுட்டானத்தின்வழி சற்றும் வைகல்யமற நின்று அநுட்டித்துச் சித்திராகாரம் போல் அசைவற்று இருந்து

நிட்டையைப் பொருந்ினவர்கள் எச்சிறப்பினை யுடைத்தாயிருப்பர்? எனில்,—

பூதலத்தே புகழ் சீவன்முத்தர் ஆகி — கண் எல்லாரும் அவர் சீவன்முத்தத்தன்மையுடைய ஞாதாக்கள் என்று துதித்துக் கொண்டாடப்பட் டிருந்து அவர் சஞ்சரிக்கும் இடத்து.—

தக்க பிரியாப்பிரியம் இன்றி - தங்கட்குத் தகை மைப்பாடுடைய இத அகிதங்களைச் செய்தவர்பால் மித்துரு சத்துரு என்னும் விகற்பமும் விருப்பும் வெறுப்பும் அற்றிருந்து.—

ஓட்டில் தமனியத்தில் சமபுத்தி பண்ணி – திரு நாவுக்கரையர்தம்பிரானுர் மணியும் பொன்னும் ஓடும் சரியாகப் பார்த்து உழவாரத்திஞல் ஏந்தி எறிந்தது போல ஓட்டினிடத்தும் பொன்னிடத்தும் வெறுப்பு விருப்பற்று இரண்டையும் சரியாகக்கண்டு.—

சங்கரனேடு ஒக்க உறைந்து அவன் இவரை இவர் அவனை விடாதே உடந்தை ஆய் – சிவனுடைய வியாபகத்துடனே தாங்களும் வியாத்தராய்க் கூடி யிருந்து சிவன் இவர்களைவிட்டுநீங்காமல் இவர்களும் சிவனைவிட்டு நீங்காமல் ஆத்தியந்தரகித சமவாயமாய அத்துவித அயிக்கியமாய்க் கலந்து ஒன்றுபட்டு,—

சிவன் தோற்றம் ஒன்றுமே காண்பர் - சிவனுடைய தோற்ற விளக்கம் ஒன்றையுமே கண்டுகொண்டிரா நிற்பர் என்றவாறு.

*சிவன் எங்கும் வியாபித்திருக்கையினலே சர்வத் தையும் சிவமயமாய்க் கண்டிருப்பார்கள் என், ^க.*

*இதற்குப் பிரமாணம் பௌட்கரம், சுப்பிரபேதம் என அறிக.*

*"உலகுளார் பெறுது துஞ்சும் ஒருபொருள் விழித்த யோகி*
*உலகுளார் விழித்த பண்டத் துறங்குவன் உருவ மாகி [டாள்*
*உலகுமா யுயிராய் வேறற் றெளிறுமொப் பிலிதன் தொண்*
*அலர்தலைக் கணிந்த யோகிக் கவனலால் ஞேயம் யாதே"*

*என்னும் சிவதருமோத்தரத்தும (10-வது சிவஞான யோகவியல் - செய் 5) அறிக. அஃதேல், ஆதித்தனைக் கண்டவர்கள் அவ்வாதித்தனையும் தங்களையும் பொரு ளையும் கண்டிருப்பார்; அத்தனமைபோலச் சீவன் முத்தரும திரிபதார்த்தமும கண்டிராமல் சிவன் தோற்றம் ஒன்றுமே கண்டிருப்பர் என்று பிரிநிலை ஏகாரம செப்பியதென்னை? எனின், நன்று வினையது, இஃதும் குரு உபதேசக்கிரமத்தால் அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** இப்படி முன்சொல்லப்பட்ட சிவ தரிசனம் ஆன்மாக்களுக்கு உண்டாம்படி எப்படி? என்ற மாணுக்கனைநோக்கி மேல் அருளிச்செய்கின்றார்.

**இ - ள் :** மிக்கது ஒரு பக்குவத்தின் - இருவினை யொப்பு வந்து ஆன்மாக்களுக்குச் சிவனைப்பெற வேணும் என்று மிகுத்ததொரு ஆசை எழுந்திருந்த அவதரத்து,—

மிகு சத்திநிபாதம் மேவுதலும் - தீவிரம் தீவிரதரம் என்னும் மிகுத்த சத்திநிபாதம் பொருந்துதலும்,—

ஞானம் விளைந்து - அந்தச் சத்தி [illegible]ப [illegible]வனிடத்திலே ஞானம் பிரகாசித்து,—

ஓர் குருவின் அருளால் புக்கு அநுட்டித்தே நிட்டை புரிந்துளோர்கள் - இவனுக்குப் பிராணனாய் நின்று பிரகாசித்த அந்த ஞானந்தானே ஒப்பற்ற ஆசாரியனாக எழுந்தருளிவந்து இரட்சித்து அவன் அருளிச்செய்த முறைமையிலே நின்று நிட்டை கூடினவர்கள்,—

பூதலத்தே புகழ் சீவன்முத்தர் ஆகி - பூமியிலே சொல்லப்பட்ட சீவன்முத்தராய் இருப்பார்கள்,—

*இவர்களுடைய விலட்சணம் எப்படி? என்னில்,*

தக்க பிரியாப்பிரியம் இன்றி - சுகதுக்கங்களைப் புசிக்குமிடத்து அதுக்கு முறைமையான இத அகிதங் களும் இல்லையாய்,—

ஓட்டில் தமனியத்தில் சமபுத்தி பண்ணி - மட் குடம் உடைந்த ஓடும் பொற்குடம் உடைந்த ஓடும் இரண்டும் பிருதிவி என்று இரண்டையும் ஒக்கக்கண்டு இந்தப் பிரபஞ்சவியாபாரத்தை விட்டுநீங்கி,—

சங்கரனோடு ஒக்க உறைந்து - பரமேசுவரனுடனே இரண்டறக்கூடிப் பொருந்தி,—

இவன் அவரை அவர் இவனை விடாதே - இந்த ஆன்மா அந்தச் சிவனைவிட்டு நீங்காமல்நிற்க அந்தச் சிவன் இந்த ஆன்மாவைவிட்டு நீங்காமல் நிற்க,—

உடந்தை ஆய் - ஆன்மபோதம் சீவியாமல் அந்தச் சிவபோதமேயாய் ஒன்றுபட்டு நிற்பர்கள்; அப்படி நின்றவர்கள்,—

சிவன்தோற்றம் ஒன்றுமே காண்பர் - பிரபஞ்சம் சிறிதும் தோன்றுமல் சிவனுடைய சுகசொரூபம் ஒன்றுமே கண்டுகொண்டிருப்பார்கள் என்றவாறு.

*'சங்கரனேடு ஒக்க உறைந்து இவன் அவரை அவர் இவனை விடாதே' என்றது ஆன்மதரிசனம். 'உடந்தையாய்' என்றது ஆன்மசுத்தி. 'சிவன்தோற்றம் ஒன்றுமே காண்பர்' என்றது ஆன்மலாபம்.*

*இதனுல்சொல்லியது மிகுத்த பக்குவான்மாக்கள் ஆசாரியனுடைய அநுக்கிரகத்தினுலே ஞானநிட்டை கூடி இந்தப்பூமியிலே சீவன்முத்தர் விருப்பு வெறுப்பு இன்றி இருப்பார்கள் என்றும், அவர்களுக்குச் சிவதரிசனமொன்றும ஒழிந்து மற்றென்றும தோன்ருது என்னும முறைமையும அறிவித்தது.* (உக)

செய்யுள் —281

அறியாமை அறிவகற்றி அறிவி னுள்ளே
அறிவுதனை அருளினுல் அறியாதே அறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடும்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயில்
பிறியாத சிவன்தானே பிரிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெல்லாம் தானுய்த் தோன்றி
நெறியாலே இவையெல்லாம் அல்ல வாகி
நின்றென்றும் தோன்றிடுவன் நிராதார னுயே.

**1.** மறைஞானசம்பந்தர் :

சீவன்முத்தன் நேயத்து அழுந்தும் முறைமை உணர்த்துகின்ருர்.

**என்பது:** அறியாமை அறிவு அகற்றி - அறியாமையாகிய ஆணவத்தால் மறைப்புண்டு மயக்குறும் கேவலக்கிடையினையும் மாயாகாரியமான கருவிகளுடனே கூடின சகலாவத்தையினையும் பொருந்தாமற் சமாதி முதலிய உபாயங்களினால் அவை இரண்டினையும்

அறிவினுள்ளே அறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து - சுத்தாவத்திதனை இவன் தன்னிடத்தில் அறிவுக்கறிவாய்த் தோன்றிநிற்கும் ஞானப்பிரகாசத்தினைச் சிவானுக்கிரகத்தினாலே ஊனக்கண்ணினாலன்றி ஞானக்கண்ணால் அறிந்து.—

குறியாதே குறித்து அந்தக்கரணங்களோடும் கூடாதே வாடாதே குழைந்திருப்பையாகில் - சுட்டாதே தியானித்து மீட்டும் அந்தச் சகல கேவலங்களில் பொருந்ாதவண்ணம் அறிந்து பண்ணிச் சுத்தனாய்க் கரைந்த அன்போடும்கூடி அந்த ஞேயத்துடன் வேறற்று அயிக்கியமாய்ப் பொருந்தியிருப்பையாகின்,-

*' அருட்கண்ணால் நோக்காதார் அல்லாதாரே ''*

*—திருநாவு - ஆரூர்* 1.

*'' அருட்கண்ணால் நோக்குமவர் அருள்பெற்றாரே ''*

*எனவும்,*

*'' அவனருளாலே அவன்றாள் வணங்கி ''*

*—திருவாசகம் - சிவபுராணம்.*

*எனவும் அறிக. குழைந்து என்பதற்கு,*

*" நிறைவு வேண்டுவீர், அறவன் அன்னியூர்*
*மறையு ளான்கழற், குறவு செய்ம்மினே "*

*–திருஞான - திருவன்னியூர் 5.*

*எனவும் அறிக.*

பிறியாத சிவன் தானே பிரிந்து தோன்றி - சர்வான் மாக்களும் அநாதியிலே இரண்டறக் கலந்து வியாபித் திருந்தும் ஆன்மநாயகன் என்று ஒருவராலும் பிரித் தறிதற்கு அரிதாகி மறைந்து நின்ற சிவன் தானே தனது காருண்ணியத்தினாலே தன்னை ஒருமுதல் என்று பிரித்தறியும்படி விளங்கித் தோன்றி,—

பிரபஞ்ச பேதம் எல்லாம் தான் ஆய் தோன்றி - விசு வத்தினுள்ள சராசரபேதமெல்லாம் அவன் வேறறப் பொருந்தி வியாபித்து நிற்கையாலே சிவ சொரூப மாகவே காணப்பட்டு,—

நெறியாலே இவை எல்லாம் அல்லவாகி – அவன் தன் உண்மையினது முறைமையினை விசாரித்தறியில் இந்தப் பிரபஞ்சசொரூபமெல்லாம் தானல்லவாகி,—

நின்று என்றும் தோன்றிடுவன் நிராதாரனாய் ஏ - நிலைபெற்றிருந்தும் வியாபகத்தினாலே வேறற்றும்... யினாலே வேறாகியும் தனக்கோர் ஆதாரமின்றித் தான் எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் இருந்து இம்முறை சீவன்முத்தர்க்குத் தோன்றி நின்று
படுவன் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் தேவிகாலோத்தரம் என அறிக.*

2. நிரம்பவழகியர் :

அ - கை : இந்த உண்மையை அடியேன் பெறும் படி எப்படி? என்ற மாணாக்கனை நோக்கி மேல் அருளிச் செய்கின்றார்.

இ - ள் : அறியாமை அறிவு அகற்றி - கருவிகள் எல்லாம் நீங்கி ஒன்றும் அறியாமல் கிடக்கிற அதீதா வத்தையையும் முப்பத்தாறு தத்துவங்களோடும்கூடி விசுவவியாபாரத்தை அறிகிற சாக்கிராவத்தையையும் நீக்கி,—

அறிவின் உள்ளே அறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து - ஆன்மாவுக்குப் பிராணனாய்நிற்கிற ஞானத்தினை ஆன்மபோதம் கூடாமல் அந்த ஞானம் தன்னாலே அறிந்து அந்த ஞானத்தின்வழித்தாய் நிற்கவே தற்றரிசனமும் தன்னைத் தோன்றாமல் மறைத்து நின்ற பாசத்தின் முறைமையும் தோன்றும் இந்த முறைமையையும்,—

குறியாதே குறித்து - ஞானத்தாலே கண்டோம் என்று காணாதே கண்டு நிற்கக் காட்டின ஞானம் தனக்குக் கரணமாம்,—

அந்தக்கரணங்களோடும் கூடாதே வாடா குழைந்து இருப்பை ஆகில் - அந்த ஞானநாட்டத் தால் காண்கிற காட்சியையும் இழந்து நிற்க அவ் விடத்தில் அவத்தையாம் அந்த அவத்தையாய் மயங் காதே அந்த ஞானத்தோடேகூடி தற்போதம் சீவி யாமல் நிலைபெற்று நிற்பையாகில்,—

பிறியாத சிவன் தானேபிரிந்து தோன்றி - ஆன்மா வுடனேகூடி ஆன்மா ஒழிந்து இல்லை என்னும்படி அறுதியே மறைந்துநின்ற சிவன்தானே சிவனும் ஒருமுதல் உண்டு என்னும்படித் தோன்றி அப்பிர காசமாய்நின்ற தான் பிரகாசித்ததுவும் அன்றி,—

பிரபஞ்ச பேதம் எல்லாம் தான் ஆய் தோன்றி - காணப்பட்ட விசுவத்தில் உள்ள பேதங்கள் எத்தனை உண்டு அத்தனையும் தன்னை ஒழிந்து இல்லை என்னும் படி தானுகக் காணப்பட்டு,—

நெறியாலே இவை எல்லாம் அல்ல ஆகி - சட சித்துக்கள் இரண்டும் தானுய் நிற்கச்செய்தே இவை யிற்றில் தோய்வற நிற்கிற முறைமையாலே இந்தப் பிரபஞ்சம் எல்லாம் தான் அல்லவாய் நிற்பன்,—

நின்று என்றும் தோன்றிடுவன் நிராதாரனுய் ஏ - தான் அன்றி வேறு ஒரு முதல்களும் அற நிற்கச் செய்தேயும் தானும் ஒன்றினும் தாக்கறநின்று பிரகா சியா நிற்பன் என்றவாறு.

*‘அறியாமை’ என்றது கருவிகள் எல்லாம நீங்கி ஆன்மா பாடாணமபோலே ஒன்றுமறியாமல் கிடக்கு மதே முத்தி என்று பாடாணவாதி கொள்கையினுல் அது ஆகாது என்றது எனக்கொள்க. இதற்குப் பிரமாணம்:*

*“ காட்சி யென்னக் காணுத் துயர*
*மாட்சியை முத்தி எனவகுத் துரைக்கில்*
*கரணு பாவம் மரணம் கருமரம்*
*ஏய்ந்தவர் முத்தி சேர்ந்தவர் அன்றே*
*அனைய கதிக்கோர் முனைவரும் வேண்டா*

தனிதரு துயரம் எனும்இது திடமே
பாடா ணத்தில் கூடா முத்தி ''

—சங்கற்ப - பாடாணவாதி நிராகரணம்.

என்னுமதும் கண்டுகொள்க.

'அறிவகற்றி' என்றது வயிந்தவசரீரத்தைப் பெற்றிருக்கிறதே முத்தி என்று சமவாதி கொள்ளுகை யினால் அது ஆகாது என்றது எனக்கொள்க.

இதற்குப் பிரமாணம் :

நீங்கியும் உருவம் நீங்கா தாயின்
ஓங்கிய முத்தி யாவதென் உரைக்க
செடியுடல் அணுகாக் குடிலை கொடுக்குமென்(று)
ஓதினை நீயே பேதாய் பகட்டுரல்
ஒளிர்சினை முச்சித் தளிர்எனும் இதுதகும் ''

—சங்கற்ப - சிவசமவாதி நிராகரணம்.

என்னுமதும் கண்டுகொள்க.

'அறிவினுள்ளே அறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து' என்றது ஆன்மதரிசனம். 'அந்தக் கரணங்களோடும் கூடாதே வாடாதே குழைந் திருப்பை யாகில்' என்றது ஆன்மசுத்தி. 'நின்றும் தோன்றிடுவன நிராதாரனாயே' என்றது ஆன்மலாபம்.

இதற்குப் பிரமாணம் :

'' ஆக்கப் படாத பொருளாய் அனைத்தினிலும்
தாக்கித்தான் ஒன்றேடும் தாக்காதே - நீக்கியுடன்
நிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனாய்
நிற்கை நிராதார மாம் ''

—திருக்களிற்றுப்படியார் 26.

இதனால் சொல்லியது கேவலம சகலம் இரண்டிணையும் நீங்கி, சுத்தத்திலுண்டாகிய ஞாதிரு ஞான ஞேயங்களையும கழன்று, இந்த நிலையிலே நிற்கில் அனுதியே தோனாருமல்நின்ற சிவன தோனறிப பிரகாசிபபன் எனனும முறைமை அறிவித்தது. (நடு)

செய்யுள்—282

புண்ணியமேல் நோக்குவிக்கும் பாவங்கீழ் நாக்கும்
புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தி ஞலே
நண்ணியஞா னத்தினல் இரண்டினையும் அறுத்து
ஞாலமொடு கீழ்மேலும் நண்ணு னுகி
எண்ணுமிக லோகத்தே முத்திபெறும் இவன்முன்
எங்கெழிலென் ஞாயிறெமக் கென்றுகுறை வின்றிக்
கண்ணுதல்தன் நிறைவதனிற் கலந்து காயம்
கழிந்தக்கால் எங்குமாய்க் கருதரன்போல் நிற்பன்.

1. மறைஞானசம்பந்தர் :

இப்படி ஞேயத்து அழுந்தின சீவன்முத்தன் சரீராந்தியத்தில் அடையும் பரமுத்தியில் பெறும் பரம் இஃது என்று உணர்த்துகின்றூர்.

**என்பது:** புண்ணியம் மேல் நோக்குவிக்கும் பாவம் கீழ் நாக்கும் - பசுபுண்ணியமானது சுவர்க்காதிபதத்தை அடைவிக்கும்; பாவமானது நரகத்தை அடைவிக்கும்; ஆதலால் இவ்விரண்டும் பொன் விலங்கும் இருப்பு விலங்கும் என அறிக.—

புண்ணியனை பூசித்த புண்ணியத்தினுலே – புண்ணிய மூர்த்தியாகிய சிவனைப்பூசித்த சிவபுண்ணிய பலத்தினுல்,—

நண்ணிய ஞானத்திஞல் இரண்டினேயும் அறுத்து - உண்டான ஞானத்தாலே மேல் தொடராதபடி அவ்
ும் சே

ஞாலமொடு கீழ் மேலும் நண்ணுன் ஆகி - புண்ணியபலத்தாஞய சுவர்க்கத்தினும் பாவபலத்தாஞய நரகத்தினும் புண்ணிய பாவப் பலன்களாய பூமியினும் பொருந்தாதவஞகி,—

*" புண்ணியத்தாற் பாவத்தாற் புண்ணியபா வத்தாலும்*
*நண்ணுமுயிர் மேல்கீழ் நடு."*

*—பதிபசுபாசப்பனுவல் - பாசசாதக - 18.*

*எனவும அறிக.*

எண்ணும் இகலோகத்தே முத்தி பெறும் இவன் தான் - எண்ணப்பட்ட இந்த உலகின்கண்ணே முத்தியைப்பெறும் சீவன்முத்தஞன இந்த ஞாதாவானவன்,—

*தான: அசை.*

எங்கு எழில் என் ஞாயிறு எமக்கு என்று குறைவின்றி - கிழக்கே உதிக்கும் ஆதித்தன் அஃது ஒழிந்து எந்தத் திசையிலே உதித்தாலும் அதஞலே நமக்கு என்ன தாழ்வு என்று சிவானுக்கிரகத்திஞலே மற்றப்படி நமக்கு வேருெரு குறைச்சலும் இல்லை எனக் கருதி,—

*ப் பரிசே எமக்கெங்கோன் நல்குதியேல்*
*எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோ ரெம்பாவாய்"*

*—திருவாசகம் - திருவெம்பாவை.*

*எனவும,*

*" இகலுடைய விடையுடையான் ஏன்று கொண்டான்*
*இனியேதும் குறைவில்லோம் இடர்கள் தீர்ந்தோம் "*

*எனபதனுலும் அறிக.*

கண்ணுதல் தன் நிறைவு அதனில் கலந்து காயம் கழிந்தக்கால் எங்கும் ஆய் கருது அரன் போல் நிற்பன் – பிராரத்துவவாதனை கெட்டுச் சரீரம் ஒழியு மளவும் இந்தச் சீவன்முத்தனுனவன் நெற்றியிற் கண்ணையுடைய சிவனது பூரணத்தில் இரண்டறக் கலந்து அநுபூதியனுயிருந்து பின்பு சரீரம் ஒழிந்த வாறே கடத்துள் அடங்கியிருக்கும் தீபம் கடம் உடைந்தால் எங்கும் விளங்கிப் பிரகாசிக்குமது போன்று மகாத்மாக்களாலே தியானிக்கப்படும் சிவனைப்போல் சருவஞ்ஞத்துவாதி குணங்களோடும் கூடிச் சமரசமாய் எவ்விடத்தும் பூரணமாய் விளங்கா நிற்பர்கள் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் சிவதருமோத்தரம், தேவி காலோத்தரம், மதங்கம், இரத்தினத்திரயம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை:** இந்தச் சிவஞானம் இருவினை ஒத்த இடத்திலே இவனுக்கு உண்டாம் என்று அருளிச் செய்கின்ருர்.

**இ - ள்:** புண்ணியம் மேல் நோக்குவிக்கும் – நல் வினையானது மேலாயிருக்கில் சுவர்க்கத்திலே கொண்டு போய் வைத்து இன்பத்தைப் புசிப்பிக்கும்.—

பாவம் கீழ் நூக்கும் - தீவினையானது நரகத்திலே தள்ளித் துன்பத்தைப் புசிப்பிக்கும்; இவை ஒழிந்து.—

புண்ணியனை பூசித்த புண்ணியத்தினாலே - பரமேசுவரனைப்பூசித்த சரியை கிரியா யோகங்களின் முற்றுதலினால் உண்டான சிவபுண்ணியத்தின் அதிகத்தினாலே.—

நண்ணிய ஞானத்தினால் இரண்டினையும் அறுத்து - பொருந்தப்பட்ட சிவஞானத்தினாலே ஆன்மபாவம் என்கின்ற பாசங்கள் இரண்டினையும் சேதித்து; அப்படிச் சேதிக்கையால்,—

ஞாலமொடு கீழ் மேலும் நண்ணான் கன்மத்தை ஆர்ச்சிக்கிற பூமியிலும் அநுபவிக்கிற நரகங்களிலும் சென்று பொருந்துதலின்றி,—

எண்ணும் இகலோகத்தே முத்திபெறும் - எல்லாப் பாக்கியங்களுக்கும் ஏது என்று எண்ணப்பட்ட இந்த லோகந்தன்னிலே மோட்சத்தை அந்தச் சிவஞானத்தாலே பெறுநிற்பன்,—

இவன் தான் எங்கு எழில் என் ஞாயிறு எமக்கு என்று குறைவு இன்றி - இப்படிப் பெற்ற அந்தச் சிவஞானியானவன் பொல்லாதகாலத்துக்கு ஞாயிறு திசைமாறித் தோன்றப் பிரபஞ்சத்தில் உள்ளவர்களுக்கெல்லாம் விதனம் வரும்; இவன் எவ்விடத்திலே உதித்தால் நன்று நமக்கு என்று ஒரு சலனமும் இன்றி,—

கண்ணுதல் தன் நிறைவு அதனில் கலந்து - பரமேசுவரனுடைய பூரணத்துடனே தானும் கூடிச் சரீரம் உள்ளமட்டும் நின்று,—

காயம் கழிந்தக்கால் - பிராரத்தம் புசித்துத் தொலைந்து சரீரம் விட்டபொழுது,—

எங்கும் ஆய் கருது அரன் போல் நிற்பன் - சிவ ஞானத்திலுலே அறுதியிட்டு அறியப்பட்ட சுகசொரூபியாய் இருக்கிற பரமசிவனைப்போலத் தானும் பூரணனாய் நிற்பன் என்றவாறு.

'நண்ணிய ஞானத்தினால் இரணடினையும் அறுத்து' என்றது ஆன்மதரிசனம். 'குறைவின்றிக் கண்ணுதல் தன் நிறைவதனில் கலந்து' என்றது ஆன்மசுத்தி. 'காயம் கழிந்தக்கால் எங்குமாய்க் கருது அரன்போல் நிற்பன்' என்றது ஆன்மலாபம். இதற்குப் பிரமாணம் :

> "பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்
> இசைத்து வருவினையின் இன்பம் - இசைத்த
> இருவினை ஒப்பில் இறப்பில் தவத்தான்
> மருவுவனும் ஞானத்தை உற்று"
>
> —சிவஞானபோதம் : சூத் - 8, வெண்பா 2.

என்னுமதும் கண்டுகொள்க.

இதனால் சொல்லியது புண்ணிய பாவங்களை இரண்டும் சொர்க்க நரகங்களிலே கொண்டுபோம் என்றும், சிவனைப் பூசித்த சிவபுண்ணியத்தினாலே உண்டாகிய ஞானத்தினாலே இந்த இரண்டு வினைகளும் போம் என்றும், இவை போனால் இவனுக்குப் பூமியிலும் நரக சொர்க்கத்திலும் உள்ள தொந்தனை உண்டாகாது என்றும், இந்தச் சரீரத்தோடே கூடியிருக்கச் செய்தே விருப்பு வெறுப்பு அறறுச் சிவனுடனேகூடி ஒன்றுபட்டு இருப்பார்கள் என்றும், இந்தச் சரீரம் நீங்கினால் பரமுத்தியைப் பெறுவர்கள் என்னும் முறைமையும் அறிவித்தது. (நக)

செய்யுள்—283

ஞாலமதின் ஞானநிட்டை யுடையோ ருக்கு
நன்மையொடு தீமையிலை நாடுவதொன் றில்லை
சீலமிலை தவமில்லை விரதமொடாச் சிரமச்
செயலில்லை தியானமிலை சித்தமல மில்லை
கோலமிலை புலனில்லை கரண மில்லை
குணமில்லை குறியில்லை குலமு மில்லை
பாலருடன் உன்மத்தர் பசாசர்குண மருவிப்
பாடலினெ டாடலிவை பயின்றிடினும் பயில்வர்.

**1.** மறைஞானசம்பந்தர்:

கிருதகிருத்தியராய்ச் சுவானுபூதிமான்களாயிருக்கும் சீவன்முத்தர்க்கு இனிமேல் செய்து முடிக்க வேண்டும் கிருத்தியநியமம் ஒன்றுமில்லை என்றும், அவர்கள் வேண்டியபடி யாதேனும் சில கிருத்தியங்களைப் பண்ணினார்களானாலும் அவையிற்றில் பற்று இன்றி அப்போது சிவனடியைமறவாது அனவரதமும் கூடிச் சிந்தித்திராநிற்பார் என்றும், அவர்கள் மகத்துவமும் இரண்டு திருவிருத்தத்தால் உணர்த்துகின்றார்.

என்பது: ஞாலமதில் ஞானநிட்டை உடையோருக்கு - இந்தப் பூமியின்கண் ஞானநிட்டையைப் பொருந்தின மகத்துக்களுக்கு,—

நன்மையொடு தீமை இலை - விருப்பு வெறுப்பு இன்றியிருத்தலால் இருவினையும் ஏறுவதில்லையாய்,—

ஒன்று இல்லை - சருவஞ்ஞராதலால் இனிமேல் விசாரித்து அறியவேண்டுவது ஒன்றும் இல்லையாய்,—

சீலம் இலை தவம் இல்லை விரதமொடு ஆச்சிரமச் செயல் இல்லை- இன்னபடி ஆசாரமாய் ஒழுகவேணும் என்னும் கற்பனையும் சாந்திராயணம் முதலியவற்றால் சரீரத்தை மெலிவிக்கவேணும் என்னும் தவமும் அட்டமி முதலிய விரதமும் பிரமசரியம் முதலிய நாலாசிரமத்தின் முறைமையும் இல்லையாய்,—

தியானம் இலை சித்தமலம் இல்லை - யாதொரு சிலமூர்த்திகளைத் தியானிப்பதும் மன அழுக்கும் இல்லையாய்,—

கோலம் இலை புலன் இல்லை - இன்னவேடம் கொண்டிருக்கவேணும் என்பதும் பஞ்சேந்திரியங் களும் தங்கள்வயத்தாய்த் தாங்கள் அவையிற்றின் வழித்தாய் ஒழுகுவதும் இல்லையாய்,—.

கரணம் இல்லை குணம் இல்லை குறி இல்லை குலமும் இல்லை - சிவகரணமாய்ச் சீவிப்பதன்றிப் பசுகரணமும் முக்குணவியாபாரங்களும் இன்ன இலாஞ்சனையுடன் கூடியிருக்கவேண்டும் என்னும் நியமமும் "சாதிகுலம் பிறப்பு என்னும் தடஞ்சுழியில் தடுமாறும்" (திருவா - கண்ட - 5) என்பதனானே உயர்ந்தசாதி தாழ்ந்தசாதி என்னும் வரைவும் இல்லையாய்,—

பாலருடன் உன்மத்தர் பசாசர் குணம் சிறுபிள்ளைகள் உன்மத்தர் பசாசு பிடியுண்டவர்கள் இவர்கள் குணங்களையொத்துப் பொருந்தி,—

பாடலினொடு ஆடல் இவை பயின்றிடினும் பயில்வர் - பாடுவதும் ஆடுவதுமாய்த் திரிந்திடினும் திரியாநிற்பர் என்றவாறு.

பாலர் விகற்பபேதமின்றிப் பசித்தழுவர்; உன்மத்தர் ஒருகிருத்தியம் செய்யும்போது அதில் விருப்பமின்றி அதனை முற்றும்செய்து நிறைவேற்றுர்; பசாசு பிடியுண்டவர் தங்கள் நினைவும் சொல்லும் செயலும் இன்றி அது நினைந்தபடி சொன்னபடி செய்தபடி நினைத்தும் சொல்லியும் செய்வர்; இம்முறைபோல ஞானவான்களும விகற்பமின்றி இருந்து பசித்த போது அன்னம்தரப் புசித்தும் யாதொரு கிருத்தியம் செய்யவந்த இடத்தில் விருப்புற்று அதனை முற்றச்செய்து முடிக்கவேண்டும் என்பது இன்மையானும், 'மண்மேலாக்கை விடுமாறும் வந்துன் கழற்கே புகுமாறும், அண்ணு எண்ணக் கடவேனே அடிமைசால அழகுடைத்தே' (திருவா- குழைத்த- 9) என்பதனுனே யான் எனது இரண்டும் இன்றித் தங்கட்கோர் செயலுமற்றுத் திரிவிதகரணங்களும் சிவனசெயலாகவே ஒழுகுகையினுனும் இவர்கட்குப் பாலர் முதலிய மூவர்குணங்களும் உவமையாயிற்று என அறிக.

இதற்குப் பிரமாணம் சர்வஞானேத்தரம், மதங்கம் முதலிய என அறிக.

2. நிரம்பவழகியர்:

அ - கை: இந்த உண்மைநிட்டைகூடின ஞானவான்களினிலக்கணம் மேல் அருளிச்செய்கின்றுர்.

- ள் ' ஞாலம் அதில் ஞா நிட்டை உடையோருக்கு - இந்தப் பூமியிலே ஞானநிட்டை கூடி

நன்மையொடு தீமை இலை - விருப்பு வெறுப்பும் இல்லையாய்,—

நாடுவது ஒன்று இல்லை - இன்னது வேணும் என்று ஒரு நாட்டமும் இல்லையாய்,—

சீலம் இலை - சாதித்தொழில் குணத்தொழில் முதலான சீலங்களும் இல்லையாய்,—

தவம இல்லை - பஞ்சாக்கினி நடுவும் சலத்தின் நடுவும் முதலாகச் செய்கிற தவங்களும் இல்லையாய்,—

விரதமொடு ஆச்சிரமச் செயல் இல்லை - மாச உபவாசம் அட்டமிவிரதம் முதலானவையும் ஒரு ஆச்சிரமங்களும் இல்லையாய்,—

தியானம் இலை - ஆதாரம் பிராசாதம் முதலாய் உள்ள தியானங்களும் இல்லையாய்,—

சித்தமலம் இல்லை - ஆன்மாவுக்கு அநாதியே சகச மாய் இருக்கும் ஆணவமலமும் இல்லையாய்,—

கோலம் இலை - இப்படி இருக்கவேணும் என்று ஒருவடிவும் இல்லையாய்,—

புலன் இல்லை - இந்திரிய வியாபாரங்களும் இல்லை யாய்,

கரணம் - அந்தக்கரண வியாபாரங்களும் இல்லையாய்,-

குணம் இல்லை - சாத்துவிக ராசத தாமதம் என்கிற குணங்களும் இல்லையாய்,—

குறி இல்லை - ஓர் அடையாளமும் இல்லையாய்,—

குலமும் இல்லை - பிராமணன் க்ஷத்திரியன் முதலா யுள்ள குலதன்மமும் இல்லையாய்,—

*இங்ஙனம சொல்லப்பட்டவையெல்லாம் இல்லை யாய் இருக்கையில் இவர்கள இலக்கணம் எப்படி? என்னில்,*

பாலருடன் உன்மத்தர் பசாசர் குணம் மருவி - யாதொன்றையும் விகற்பியாமல் நிர்விகற்பமாய்க் காண்கின்ற பாலரைப்போலவும், வைதாரையும் வாழ்த்திஞரையும் சுட்டியறியாத மதுபானம் செய்த வர்களைப் போலவும், ஆகாரம் நித்திரை பயம் மைது னம் என்கிற நாலு காரியமும் இல்லாத பசாசரைப் போலவும் இந்தக் குணங்களைப்பொருந்தி,—

பாடலினெடு ஆடல் இவை பயின்றிடினும் பயில்வர் - தங்களுக்கு உண்டான சுகத்தின் மிகுதி யாலே பாடுவதும் ஆடுவதுமாய்த் திரிந்து உடனும் திரியா நிற்பர்கள் என்றவாறு.

*" நெக்கு நெக்குள் உருகி யுருகி*
*நின்றும் இருந்தும் கிடந்தும் எழுந்தும்*
*நக்கும் அழுதும் தொழுதும் வாழ்த்தி*
*நாஞு விதத்தால் கூத்து நவிற்றிச்*
*செக்கர் போலும் திருமேனி*
*திகழநோக்கிச் சிலிர்சிலிர்த்துப்*
*புக்கு நிற்ப தென்றுகொல் லோஎன்*
*பொல்லா மணியைப் புணர்ந்தே "*

*—திருவாசகம் - புணர்ச்சிப்பத்து - 8.*

*என்னுமதும் கண்டுகொள்க.*

*இதனுல் சொல்லியது உண்மையைப் பெற்ற சீவன்முத்தராய் உள்ளவர்களுக்கு விருப்பு வெறுப்பு முதல் சாதித்தன்மம ஈறுகக் சொல்லிவந்த முறைமைகள் எல்லாம் இல்லை என்றும, அவர்கள பாலர் உனமத்தர் பசாசா குணஙகளைபபொருந்தி நிற்பர்கள் எனனும முறைமையும் அறிவித்தது.* (நஉ)

செய்யுள்—284

**தேசமிடம் காலம்திக் காசனங்கள் இன்றிச்**
**செய்வதொன்று போற்செய்யாச் செயலதனைச் செய்**
**ஊசல்படு மனமின்றி உலாவல் நிற்றல்** [தங்(கு)
**உறக்கமுணர் வுண்டிபட் டினியிருத்தல் கிடத்தல்**
**மாசதனில் தூய்மையினில் வறுமை வாழ்வில்**
**வருத்தத்தில் திருத்தத்தில் மைதுனத்தில் சினத்தில்**
**ஆசையினில் வெறுப்பிலிவை யல்லாது மெல்லாம்**
**அடைந்தாலும் ஞானிகள்தாம் அரனடியை அகலார்.**

**1.** மறைஞானசம்பந்தர் :

சம் இடம் காலம் திக்கு ஆசனங்கள் இன்றி - ஸ்ரீ சிதம்பரம் காசி திருவாரூர் முதலிய மகத்தான புண்ணியச் சேத்திரங்களில் இருக்க வேண்டும் என்பதும், கங்கை முதலிய தீர்த்தங்களில் இருக்கவேண்டும் என்பதும், உபராகம் முதலிய புண்ணிய காலங்கள் வேண்டும் எனக் கருதுதலும் இன்ன திக்கைப் பார்த்திருந்து செப அநுட்டானம் செய்யவேண்டும் என்பதும், பதுமாதனம் முதலிய ஓர் ஆசனத்தில் இருக்கவேண்டும் என்பதும் இப்படிப் பட்ட நியமகற்பனைகளும் இன்றி,—

செய்வது ஒன்று போல் செய்யாச் செயல் அதனை செய்து - யாதாமொரு கிருத்தியத்தை உலகரைப் போல் செய்வது போன்று இருந்தாலும் அதில் பலத்தைக் கருதாதவர்கள் கோட்பாடு வேற்றுமை யாதலால் விருப்புற்றுச் செய்யாமல் செயல்களைச் செய்து,—

அங்கு ஊசல்படும் மனம் இன்றி உலாவல் நிற்றல் உறக்கம் உணர்வு பட்டினி இருத்தல் கிடத்தல் மாசு அதனில் தூய்மையினில் வறுமை வாழ்வில் வருத்தத் தில் திருத்தத்தில் மைதுனத்தில் சினத்தில் ஆசை யினில் வெறுப்பில் இவை அல்லாதும் எல்லாம் அடைந்தாலும் ஞானிகள் தாம் அரன் அடியை அகலார் - திரிபதார்த்தம் உள்ளபடி அறிந்த ஞான வான்களானவர்கள் நடத்தல் முதலிய வியாபாரங் களைப் பொருந்தினவிடத்தும் இவை அல்லாமலும் மற்றும் சொல்லப்பட்டு உள்ள எல்லாவற்றையும் பொருந்தின அவதரங்களினும் அவ்விடத்தில் ஊசலைப் போல் போக்குவரவு செய்யும் மனோசஞ்சலம் இன்றி ஞேயத்தில் பற்று உடையவர்களாய் வாயுவானது விரைவிலடித்தவிடத்தும் ஆகாயத்தைவிட்டு நீங்காத வாறுபோலச் சிவனுடைய திருவடியைப் பொருந்தி யிருந்து ஒருபொழுதும்விட்டுநீங்கார்கள் என்றவாறு.

*'மாசதனில் தூய்மையினில்' சுத்தா சுத்தத்தி லும், 'வருத்தத்தில் திருத்தத்தில்' துக்க சுகங் களிலும்.*

*இதற்குப பிரமாணம் சர்வஞானோத்தரம், நிச்சு வாசம் எல அறிக.*

**2. நிரம்பவழகியர் :**

**அ - கை :** இப்படி முன்சொன்ன உண்மையைப் பெற்ற சிவஞானிகள், எவ்விடத்தும் அந்தச் சிவ ஞானமேயாய் நிற்பார்கள் என்றும் அருளிச்செய் கின்ருர்.

**இ - ள :** தேசம் இடம் காலம் திக்கு ஆசனங்கள் இன்றி - நல்ல இராச்சியம் பொல்லா இராச்சியம் என்கிற தேசங்கள் காசி திருவம்பலம் முதலாயுள்ள தானங்கள் விஷு அயன சங்கிரமங்கள் முதலாய் உள்ள காலங்கள் கிழக்கு தெற்கு முதலாயுள்ள திக்குகள் சித்திராசனம் பதுமாசனம் முதலாயுள்ள ஆதனங்கள் இவையும் இல்லையாய்,—

செய்வது ஒன்று போல் செய்யா செயல் அதனை செய்து - சரியை கிரியா யோகங்களை வழுவறச்செய்து சாலோக்கியாதி பதங்களைப் பெறுகிற முறைமை போலச் செய்யாத செயலாகிய மௌனயோகத்தை ஆசாரியனலே பெற்றுச் சிவானுபோகத்தை அனுப

*அப்படி அனுபவிக்குமிடத்து,*

அங்கு ஊசல்படும் மனம் இன்றி - அவ்விடத்து ஊசலின் தொழிலையொத்துப் போக்குவரத்துச் செய் யத்தக்க மனமும் இல்லையாய்.—

உலாவல் நிற்றல் - நடந்தாலும் அசைவற நின் ருலும்,—

உறக்கம் உணர்வு - உறங்கினுலும் விழித்தாலும்,—

உண்டி பட்டினி - புசித்தாலும் பசித்தாலும்.—

இருத்தல் கிடத்தல் - இருந்தாலும் கிடந்தாலும்.—

மாசு அதனில் தூய்மையினில் - அசுத்தத்தில் சுத்தத்தில்,—

வறுமை வாழ்வில் - மிடியில் செல்வத்தில்,—

வருத்தத்தில் திருத்தத்தில் - துக்கத்தில் சுகத்தில்,—

மைதுனத்தில் சினத்தில் - சம்சாரமாகிய பிரியத்தில் கோபத்தில்,—

ஆசையினில் வெறுப்பில் - விருப்பு வெறுப்புக்களில்.—

இவை அல்லாதும் எல்லாம் அடைந்தாலும் - இங்ஙனம் ஒன்பதுவகையில் பதினெட்டாகச் சொல்லப்பட்ட இவையும் அன்றி வேறும் சிலவந்து பொருந்திற்றுகிலும்,—

ஞானிகள் தாம் அரன் அடியை அகலார் - உண்மைஞானிகளாயுள்ளவர்கள் பரமேசுவரனுடைய சீபாதத்தை விட்டுநீங்காமல் அநவரதமும் அறுவே நிலையாக நிற்பார்கள் என்றவாறு.

*இதனால் சொல்லியது சிவனமுக்தராயுளளவர்கள் பிராரத்தம் புசித்துத்தொலையுமளவும் மௌன உபதேசதடோடும் கூடி இருப்பார்கள் என்றும், அவ்விடத்து ஆகாரம் நித்திரை பயம் மைதுனம் முதலாயுள்ளவை வந்து தாக்கினும் பரமேசுவரனுடைய சீபாதமே பற்றுக்கோடாக நின்று விடுவர்கள் என்னும் முறைமையும் அறிவித்தது.*

*'சூரியகாந்த' 'மிக்கதொரு' 'அறியாமை' 'புண்ணி யம' 'ஞாலமதில்' 'தேசமிடம'* ஆக ஆறும உண்மை நிட்டை. (நந)

செய்யுள் —285

**இந்நிலைதான் இல்லையேல் எல்லா மீசன்**
**இடத்தினினும் ஈசனெல்லா விடத்தினினும் நின்ற**
**அந்நிலையை அறிந்தந்தக் கரணங்கள் அடக்கி**
**அறிவதொரு குறிகுருவின் அருளினல் அறிந்து**
**மன்னுசிவன் றனையடைந்து நின்றவன்ற னலே**
**மருவுபசு கரணங்கள் சிவகரண மாகத்**
**துன்னியசாக் கிரமதனில் துரியா தீதம்**
**தோன்றமுயல் சிவானுபவம் சுவானுபூ திகமாம்.**

**1.** மறைஞானசம்பந்தர் :

இஃது இல்லார்க்கு வேறும் ஓர் உபாயநிட்டை உணர்த்துகின்றுர்.

**என்பது:** இ நிலைதான் இல்லையேல் எல்லாம் ஈசன் இடத்தினினும் ஈசன் எல்லா இடத்தினினும் நிற்கும் அ நிலையை அறிந்து - இந்தப்பாவனை கைவரா தாகில் சராசரமாகிய ஆன்மாக்களெல்லாம் சிவனிடத் தில் அயிக்கியமாய்நிற்கும் முறைமையினையும் அந்தச் சிவன்தானும் மாயாதி தனுவினுள் உயிர்க்குயிராய் வியாபித்துநிற்கும் முறைமையினையும் அறிந்து,—

*அஃது எங்ஙனம? எனனில், சிவசாதாக்கியம முதலிய நானகும எப்படி ஒன்றிலொன்றுகக் கன்ம சாதாக்கியத்தில் வியாபித்துநிறகும அதுபோல்*

உண்டி பட்டினி - புசித்தாலும் பசித்தாலும்.—

இருத்தல் கிடத்தல் - இருந்தாலும் கிடந்தாலும்.—

மாசு அதனில் தூய்மையினில் - அசுத்தத்தில் சுத்தத்தில்,—

வறுமை வாழ்வில் - மிடியில் செல்வத்தில்,—

வருத்தத்தில் திருத்தத்தில் - துக்கத்தில் சுகத்தில்,—

மைதுனத்தில் சினத்தில் - சம்சாரமாகிய பிரியத்தில் கோபத்தில்,—

ஆசையினில் வெறுப்பில் - விருப்பு வெறுப்புக்களில்.—

இவை அல்லாதும் எல்லாம் அடைந்தாலும் - இங்ஙனம் ஒன்பதுவகையில் பதினெட்டாகச் சொல்லப்பட்ட இவையும் அன்றி வேறும் சிலவந்து பொருந்திற்றுகிலும்,—

ஞானிகள் தாம் அரன் அடியை அகலார் - உண்மைஞானிகளாயுள்ளவர்கள் பரமேசுவரனுடைய சீபாதத்தை விட்டுநீங்காமல் அநவரதமும் அதுவே நிலையாக நிற்பார்கள் என்றவாறு.

*இதனால் சொல்லியது சிவனமுத்தராயுள்ளவர்கள் பிராரத்தம் புசித்துத்தொலையுமளவும் மௌன உபதேசத்தோடும் கூடி இருப்பார்கள் என்றும், அவ்விடத்து ஆகாரம் நித்திரை பயம் மைதுனம் முதலாயுள்ளவை வந்து தாக்கினும் பரமேசுவரனுடைய சீபாதமே பற்றுக்கோடாக நின்று விடுவர்கள் என்னும் முறைமையும் அறிவித்தது.*

*'சூரியகாந்த' 'மிக்கதொரு' 'அறியாமை' 'புண்ணி யம்' 'ஞாலமதில்' 'தேசமிடம்' ஆக ஆறும உண்மை நிட்டை.* (௫௫)

செய்யுள்—285

இந்நிலைதான் இல்லையேல் எல்லா மீசன்
இடத்தினினும் ஈசனெல்லா விடத்தினினும் நின்ற
அந்நிலையை அறிந்தந்தக் கரணங்கள் அடக்கி
அறிவதொரு குறிகுருவின் அருளினால் அறிந்து
மன்னுசிவன் றனையடைந்து நின்றவன்ற னாலே
மருவுபசு கரணங்கள் சிவகரண மாகத்
துன்னியசாக் கிரமதனில் துரியா தீதம்
தோன்றமுயல் சிவானுபவம் சுவானுபூ திகமாம்.

1. மறைஞானசம்பந்தர் :

இஃது இல்லார்க்கு வேறும் ஓர் உபாயநிட்டை உணர்த்துகின்றார்.

**என்பது :** இ நிலைதான் இல்லையேல் எல்லாம் ஈசன் இடத்தினினும் ஈசன் எல்லா இடத்தினினும் நிற்கும் அ நிலையை அறிந்து - இந்தப்பாவனை கைவரா தாகில் சராசரமாகிய ஆன்மாக்களெல்லாம் சிவனிடத்தில் அயிக்கியமாய்நிற்கும் முறைமையினையும் அந்தச் சிவன்தானும் மாயாதி தனுவினுள் உயிர்க்குயிராய் வியாபித்துநிற்கும் முறைமையினையும் அறிந்து,—

*அஃது எங்ஙனம்? எனனில், சிவசாதாக்கியம முதலிய நான்கும எப்படி ஒன்றிலொன்றாகக் கன்ம சாதாக்கியத்தில் வியாபித்துநிற்கும் அதுபோல்*

*மாயா தனு முதலியவற்றினும் அனுப்பிரவிட்டமாகச் சிவன் வியாபித்துநிற்பன் என அறிக.*

*" கன்மசா தாக்கி யத்திற் கலந்துறல் போல நாதி*
*நின்மலன் தானே மாயா தனுவினும் நிறைந்து நிற்பன்*
*மன்னிய மனாதி தம்முட் கலாதியு ளுயிருள் வைகும்*
*சின்மயன் சிவனப் பாலும் முன்னிலைச் சிவன்பாற் சீவன்"*

*" உண்டுமன மாதிபதத் தூர்வதெனும் போதுமவற்*
*றுண்டுயிருண் டீசனுயி ருட்டுடிக்கும் - கண்டனினு*
*மற்றையதா னங்களினு முண்டுமன மாதியவற்*
*றுற்றவுயி ருட்சிவன்ரு ளுண்டு "*

*என்றார் எமது குரவர்.*

அந்தக்கரணங்கள் அடக்கி - மனாதிகளைப் புலன் வழிச் செல்லாமல் அடக்கி,—

அறிவது ஒரு குறி குருவின் அருளினால் அறிந்து - ஞானசாரியன் கடாட்சத்தால் அவ்விடத்து ஒப்பற்ற உபதேசத்தை முறை பிறழாமல் பெற்றிருந்து,—

மன்னு சிவன் தனை அடைந்து நின்று - அந்தக் குறிப்படியே இமைக்கும் அளவாதல் அம்பெய்தால் அது சென்று வீழும் அளவாதல் பசுக்கறக்குமள வாதல் நிலைபெற்ற பரமசிவத்துடன் கூடியிருந்து,—

அவன் தனாலே மருவு பசுகரணங்கள் சிவகரணம் ஆக - அநாதியே மலத்துடன் கூடியிருக்கிற ஆன்மா வுக்குப் பசுகரணமாகச் சீவிக்கிற இச்சா ஞானக் கிரியைகள் தாமே அந்தச் சிவகடாட்சத்தால் இவ னுக்கு மேலான சிவகரணமாகச் சீவியாநிற்கும்,—

*" பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்*
*காலனையன் றேவிக் கராங்கொண்ட - பாலன்*
*மரணம் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்*
*கரணம்போ லல்லாமை காண் "*

*-திருக்களிற்றுப்படியார் 12.*

*எனவும் அறிக.*

துன்னிய சாக்கிரம் அதனில் துரியாதீதம் தோன்ற முயல் - கருவிகள் நிறைந்த சாக்கிரத்தின்கண் நின்றும் சிவத்தைப் பெறுதல் என்னும் துரியாதீதம் தோன்றச் சாதிப்பாயாக; அப்பொழுது,—

சிவானுபவம் சுவானுபூதிகம் ஆம் - அப்படிச் சாதித்து நிட்டையைப் பொருந்தவே சிவனிடத்துள்ள ஆனந்தம் போல உன்னிடத்திலேதானே அநுபூதியானது உண்டாகாநிற்கும் என்றவாறு.

*சுவ - உனக்கு, அநு - பின்புண்டாம், பூதிகம - ஆனந்தமெனனும ஐசுவரியம என அறிக.*

*" பிறிவிலா அடியார்க் கென்றும்*
*வாராத செல்வம் வருவிப்பானை "*

*—திருநாவு - புள்ளிருக்கு - தாண்டகம் 8.*

*" சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட*
*அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே "*

*ாசகம் - அச்சோப்பதிகம் 1.*

*சீவ னெனச்சிவ னென்னவே றில்லை*
*சீவ னார்சிவ னாரை யறிகிலர்*
*சீவ னார்சிவ னாரை அறிந்தபின்*
*சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே "*

*—திருமந்திரம் 2017.*

*' வழித்தலைப்படு வான்முயல் கின்றேன்*
*உன்னைப்போ லென்னைப் பாவிக்க மாட்டேன் ''*

*—சுந்தரர் - ஒற்றியூர் - நக்கேசி 5.*

*'' . . தன்னைக்கண்ட*
*என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ண*
*மாகிய ஈசனுக்கே ''*

*—பொன்வண்ணத்தந்தாதி 1.*

*'' . . தம்மைப்*
*போலத் தம்மடி யார்க்குமின் பளிப்பவர்*
*''*

*—திருஞான - சிரபுரம் - திருவிராகம் 2.*

*எனனும திருவாக்குகளினும தெளிக.*

*இதற்குப் பிரமாணம சர்வஞானோத்தரம், மதங்கம், சூதசங்கிதை, சூதகீதை என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** இப்படி முன்சொன்ன உண்மை நிட்டை கூடாது என்ற மாணுக்கனைநோக்கி, மேல் ஒரு உபாயநிட்டை அருளிச்செய்கின்றார்.

இ - ள் : இ நிலைதான் இல்லையேல் - இந்த மௌன உபதேசத்தைப்பெற்று அந்த நிலையே நிலையாக நிற்கக் கூடாதாகில்,—

எல்லாம் ஈசன் இடத்தினினும் ஈசன் எல்லா இடத்தினினும் நின்ற அ நிலையை அறிந்து - சட சித்துக்கள் என்று சொல்லப்பட்ட சர்வமும் தம்பிரா ஞர் தாரகமாகநின்று காரியப்படுகிற முறைமையும்

அந்தச்சர்வத்திலும் தம்பிரானுர் நிற்கிற அந்த நிலை மையும் சிவஞானத்தாலே அறிந்து,—

அந்தக்கரணங்கள் அடக்கி - சர்வமும் சிவனிடத் திலே நிற்கிற முறைமையும் சிவன் அவ்விடங்களிலே நிற்கிற நிலைமையும் அந்த ஞானம் காட்டாகத் தான் காண்கின்ற காட்சியையும் இழந்து தற்போதம் சீவி யாமல் அந்த ஞானமாய் நின்று.—

அறிவது ஒரு குறி குருவின் அருளினுல் அறிந்து - ஞானமயமாய் நின்று அவ்விடத்திலே அறியத்தக்க தொரு உபதேசத்தை ஆசாரியனுடைய அநுக்கிரகத்தி னுலே பெற்று அப்படிப்பெற்ருல் அநாதியே தன் னிடத்திலே தோன்ருமல் நிலைபெற்று நின்ற சிவம் பிரகாசிக்கும்,—

மன்னு சிவன் தனை அடைந்து நின்று - அப்படி நிலைபெற்ற அந்தச்சிவனைக் கூட்டிநின்று,—

அவன் தனுலே - அநாதியே ஆன்மாவைப் பொருந்திநிற்கிற அந்தச் சிவனுடைய பிரகாசத்தின் மேலீட்டாலே,—

மருவு பசுகரணங்கள் சிவகரணமாக துன்னிய சாக்கிரம் அதனில் துரியாதீதம் தோன்ற முயல் - அநாதியே ஆன்மாவைப் பொருந்திநிற்கிற தத்துவங் கள்தானே சிவகரணமாம் முப்பத்தாருேடும் கூடி நிற்கிற சாக்கிராவத்தைக்குத் தானமாகி அவ்விடத் திலே சாக்கிரத்தில் சாக்கிரம் சாக்கிரத்தில் சொப்பனம் சாக்கிரத்தில் சுழுத்தி சாக்கிரத்தில் துரியம் என்கிற நாலும் கழன்று சாக்கிராதீதம் புரிந்து நில்; அப்படி நிற்கவே பசுகரணம் தானேசிவகரணமாம்,—

'அந்நிலையை அறிந்து அந்தக்கரணங்கள் அடங்கி அறிவதொரு குறி குருவின அருளினுல் அறிந்து' என்றது ஆன்மதரிசனம்; 'மருவு பசுகரணங்கள சிவ கரணமாகத் துன்னிய சாக்கிரமதனில் துரியாதீதம் தோன்றமுயல்' என்றது ஆன்மசுத்தி; 'சிவாநுபவம் சுவாநுபூதிகமாம்' என்றது ஆன்மலாபம் எனறு மதும கண்டுகொள்க. இதற்குப் பிரமாணம :

"பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனையன் றேவிக் கராங்கொண்ட - பாலன்
மரணம் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்
கரணம்போ லல்லாமை காண்"

—திருக்களிற்றுப்படியார் - 12

என்னுமதும கண்டுகொள்க.

இதனல் சொல்லியது முன்சொன்ன உண்மை நிட்டைகூடாமல் வாதனைமேலீட்டால் சடசித்துககள இரண்டும் பரமேசுவரனிடமாக நிற்கிற முறைமையை யும, அவ்விடஙகளிலே பரமேசுவரன நிற்கிற நிலைமை யையும், அந்த ஞானத்திஞலே அறிந்து அபபடி அறிந்த தற்போதமும கெட்டுநிறக அந்தநிலையாம என்றும் அது ஒழிந்தும் ஆசாரியனுலே தனககுப் பிராணனுய்நிற்கிற சிவனை அறிந்து அவனுலே பசு கரணம தானே சிவகரணமுமாய்ச் சாக்கிராதீதமும புரியும என்னும் முறைமையும் அறிவித்தது (௩௪)

## செய்யுள்—286

**சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள் உலகிற்**
**சருவசங்க நிவிர்த்திவந்த தபோதனர்கள் இவர்கள்**
**பாக்கியத்தைப் பகர்வதுவென் இம்மையிலே உயிரின்**
**பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவ ரன்றே**

ஆக்குமுடி கவித்தரசாண் டவர்களரி வையரோ(டு)
அனுபவித்தங் கிருந்திடினும் அகப்பற்றற் றிருப்பர்
நோக்கியிது புரியாதோர் புறப்பற்றற் றுலும்
நுழைவர்பிறப் பினின்வினைகள் நுங்கி டாவே.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் இத்தன்மையுடையோர் சிறப்பும் அஃது ல்லார் சிறப்பின்மையும் உணர்த்துகின்றுர்.

**என்பது :** சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள் உலகில் சருவசங்க நிவிர்த்தி வந்த தபோதனர்கள் - இப்பூமியின்கண் சகலாவத்தையில் தானே சாக்கிரா தீதத்தை முற்கூறியபடி பொருந்தினவர்கள் சிறப்பை விசாரிக்கில் அவர்களே சருவசங்கப்பரித்தியாகம் பண்ணின தவச்செல்வர்கள்,—

இவர்கள் பாக்கியத்தை பகர்வது என் - ஆதலால் அந்த ஞாதாக்கள் பண்ணின பாக்கியாதிக்கத்தை நாம் என்னசொல்லப்போகிறேம்; கூடாது.—

இம்மையிலே உயிரின் பற்று அறுத்து பரத்தை அடை பராவுசிவர் அன்றே - இம்மையிலே தேகாதிப் பிரபஞ்சங்களில் உண்டான பற்றுக்கள் எல்லாவற் றையும் விட்டு மேலான சிவத்தைக்கூடிச் சுவானந் தானுபூதியைப் பெற்றிருந்து சத்துக்களாலே தோத் திரம் பண்ணப்பட்டு இரண்டாம் சிவன் என்று கருதப்படுமவர்கள் அல்லவோ,—

முடி அரசு அவர்கள்
அரிவையரோடு அங்கு இருந்திடினும் -

இப்படிப்பட்ட சீவன்முத்தர் விதிவழி யுண் டாக்கி அபிடேக மகுடம்சூடி அநேக மடவாலிய ரோடும் கூடிப் புறம்பே இப்படி அனுபவித்திருந் தார்கள் ஆயினும்,—

அகப்பற்று அற்று இருப்பர் - சமுத்திரத்தில் அன வரதமும் கூடியிருந்துள்ள மச்சம் அந்த உப்பினது தன்மை பொருந்தாதவாறுபோல அகப்பற்று அற்று அந்தரங்க வேறுபாடு உண்டாய் அதில் வசியல்லரா யிருப்பர்,—

*" மறைமுறை யுணர்ந்த அறிவின் கிழவரும்*
*மம்மர் எய்திய மடவ மாந்தரும்*
*கைதொடல் கண்படை வெய்துறு பெரும்பயம்*
*களிபடு காமத் தளிதலை மயங்கிய*
*தகுதி யல்லது பகுதி யின்றெனிற்*
*கேளினி வாழி கெடுகநின் அவலம்*
*கொய்தளி ரன்ன குலக்கோ மளத்தை*
*மெய்யுற முயங்கி விடனு யினனே*
*கொம்மை வெம்முலைத் தன்மகட் டழீஇ*
*அம்முலை நல்கிய யாயென வுவந்தனன்*
*மற்றும் கேண்மதி முட்டாட் டாமரை*
*நுண்டாது பொதிந்த செந்தோ டன்ன*
*செங்கை கொங்கைக் கருங்கண் தைவர*
*மைந்த னென்ன மனமகிழ் புருகிப்*
*பெருவரை கான்ற சிறுவெள் ளருவியில்*
*சொரித லானு பாலே அவையே*
*ஆண்டவன் வருட அறிவுபிறழ் வெய்தி*
*மெய்புகு வன்ன கைகவர் முயக்கமொடு*
*இன்ப வெள்ளத் தன்பியைந் தாஅங்(கு)*
*அறங்கரை நாவின் ஆன்றோ ருள்ளம்*
*சிறந்தன்று மன்னோ தெரியுங் காலே "*

*"இது ஞானசித்தர்க்குப் பாகியவேறுபாடு இல்லை யாயினும அந்தரஙக வேறுபாடு உண்டு என்று சொல்லியது."*

—ஞானமிர்தம் - 42

எனவும்,

*" கறையணற் கட்செவிப் பகுவாய்ப் பாந்தள்*
*கடுவொடுங் கெயிற்றின் வடுவுறக் கிழித்தும்*
*கிழியாப் பண்பிற் றன்றே யுறையுடன்*
*மதியொடு புணர்ந்த மறையி னோர்க்கே*
*செழும்பெரும் பொய்கைக் கொழுந்துவிடு புயரிய*
*முட்டாட் டாமரைக் கொழுமட லகலிலை*
*அப்புனல் தொத்தாத் துப்பு மெய்ப்படு*
*மந்திர மருந்தின் மைந்தின் வெந்திறல்*
*காரிகை தொடினும் பேரிட ரின்றே*
*கரைபாய்ந்து கலித்த பெருநீ ருவரித்*
*தோன்றிவாழ் தொழில வாயினும் மயிலை*
*தீஞ்சுவை உப்பிற் சிவணு தாங்கு*
*ஞான மாக்கழல் மாணுற வீக்குநர்*
*விடய வேலைத் தடையின்று படியினும்*
*தீதொடு படியுநர் அல்லர்*
*மாதுயர் கழியுநர் நீதி யானே "*

*" இது ஞானவான்கள் எல்லாப்போகங்களுடனே கூடியிருந்தாராயினும ஞானவிசேடத்தானே அந்தரங்க வேறுபாடு உடையர் என்றும, அவையிற்றில் பற்றிலர் என்றும் கூறியது."*

*எனவும் அருளிய ஞானமிர்தத்தும் (அகவல்-44) அறிக.*

நோக்கி இது புரியாதோர் புறப்பற்று அற்றாலும் நுழைவர் பிறப்பினின் வினைகள் நுங்கிடா ஏ - இந்த நிட்டையினுடைய மகத்துவம் விசாரித்து அறிந்து

விரும்பி அதனைப் பொருந்தாதவர்கள் யாவராலும் விடுத்தற்கரிய இருவிதப் பற்றையும் விட்டார்களா யினும் செனனமரணப்படுவார்கள்; அவைகட்குக் காரணமான வினைகளும் கெடாது என்றவாறு.

*இதற்குப் பிரமாணம சர்வஞானோத்தரம், சிவதரு மோத்தரம் என அறிக.*

**2. நிரம்பவழகியர்:**

**அ - கை:** இப்படிச் சாக்கிராதீதம் புரிந்துநிற்கும் ஞானவான்கள் பெருமையை மேல் அருளிச்செய் கின்றார்.

இ - ள்: சாக்கிரத்தே அதீதத்தை புரிந்தவர்கள் - அருளுடனே கூடி இரண்டற நிலைபெற்று நேயத் துடனே அழுந்துகிற சாக்கிராதீதம் கைவந்தவர்கள்,—

உலகில் சருவசங்க நிவிர்த்திவந்த தபோதனர்கள் - பூமியிலே சருவசங்கப்பரித்தியாகம் பண்ணின தபோ தனர்கள்,—

அவர்கள் பாக்கியத்தை பகர்வது என் - அவர் கள் முன் செனனங்களிலே செய்த சிவபுண்ணியத்தை வாக்காலே கோசரிப்பது எப்படி?,—

இம்மையிலே உயிரின் பற்று அறுத்து - இந்தச் செனனத்திலே ஆன்மாவுக்கு உண்டான பாசப்பற் றுக்கள் எல்லாத்தையும் தங்களுக்குப் பிராணனாய் நிற்கிற ஞானத்தினாலே அறுத்து,—

பரத்தை அடை பராவு சிவர் அன்றோ - எல்லாத் துக்கும் மேலாயிருக்கிற சிவத்தைப் பொருந்திச்

சிவமாயிருந்துள்ள ஜீவர்கள் சஞ்சரியாநின்ற சீவர் அல்லவோ?,—

ஆக்கும் முடி கவித்து அரசு ஆண்டு அவர்கள் அரிவையரோடு அநுபவித்து அங்கு இருந்திடினும் அகப்பற்றுஅற்று இருப்பர் - அவர்கள் பண்ணப்பட்ட அபிஷேகமும் சூடி இராச்சியம் பண்ணி அரிவை யர்களுடனேகூடி அனுபவித்து அங்கே இருந்தார் களாயினும் உட்பற்று அற்று இருப்பார்கள்,—

நோக்கி இது புரியாதோர் புறப்பற்று அற்ருலும் நுழைவர் பிறப்பினில் - இப்படிப்பார்த்து இந்த உண் மையிலே கூடாதவர்கள் புறப்பற்றுக்கள் அற்று இருந்தாரேயாயினும் செனனத்தை அடையாநிற்பர் கள்; ஆகையாலே, —

வினைகள் நுங்கிடா ஏ - பிராரத்தகன்மமும் அது புசிக்கையில் உண்டான ஆகாமிய கன்மங்களும் கெடாது என்றவாறு.

*இதனல் சொல்லியது கருவிகள் எல்லாம் கூடி இலாடததானத்திலே நிற்கச்செய்தே அவையிற்றில் தோயாமல் சிவத்துடனே கூடிச் சிவமாயச் சாக்கிரா தீதம் புரிந்துநிற்கிற ஞானவானகளுக்குச் செனனம் அறும என்றும, இந்த உண்மை கூடாதவர்களுக்குச் செனனம அருது எனனும முறைமையும அறிவித் தது.* (நடு)

செய்யுள்—287

**கருவிகழிந் தாற்காணு ரொன்றுமெனிற் காணர்**
**காணுதார் கன்னிகைதான் காமரதங் காணுள்**
**மருவியிரு வரும்புணர வந்த இன்பம்**
**வாயினுற் பேசரிது மணந்தவர்தாம் உணர்வர்**

உருவினுயிர் வடிவதுவும் உணர்ந்திலர்காண் சிவனை
உணராதார் உணர்வினல் உணர்வதுகற் பனைகாண்
அருள்பெறினவ் விருவரையும் அறிவிறந்தங் கறிவர்
அறியாரேல் பிறப்பும்விடா தாணவமும் அருதே.

**1.** மறைஞானசம்பந்தர் :

கருவி கரணங்களை நீங்கினல் காண்பது எவ்வண்ணம்? என்று சங்கிராந்தவாதி வினவ உணர்த்துகின்றார்.

என்பது: கருவி கழிந்தால் காணர் ஒன்றும் எனில் - கருவி கரணம் நீங்கின இடத்து ஆன்மாக்கள் ஒன்றையும் காணமாட்டார்கள் என்னினும்,—

காணர் காணதார் - உண்மையறிவு இல்லாதார் தாம் ஒன்றையும் அறியார்கள்காண்,—

*அஃது என்போல? எனனில்,*

தான் காமரசம் காணள் - கருவி கரணங்களுடன் கூடியிருக்கவும் கன்னிகையானவள் காமத்தால் உள்ள இன்பத்தை அறியாதிருத்தல் போல,—

*அஃது எக்காரணனல்? என்னில், அவளுக்குப் பக்குவமின்மையால் என அறிக.*

*'' பருவத்தில் வந்து பயனுற்ற பண்பன்*
*அயனைப் படைத்த பரமன் ''*

*—திருஞான - தென்திருமுல்லை 2.*

*என்பது அறிக.*

*ஆனால் நீர்தாம பருவம வந்து கருவி கரணங் களையினறிச் சிவனை அறிந்து இன்பம் அனுபவிப்பது எப்படி? என்னில்,*

மருவி இருவரும் புணரவந்த இன்பம் வாயினால் பேச அரிது மணந்தவர்தாம் உணர்வர் - பருவ மாதர் காந்தனைக் கூடி அனுபவிக்குமிடத்து உண்டான இன் பத்தை அம்மாதர் அறிவது அன்றி வேறொருவர்க்கு இன்னபடியிருக்கும் என்று வாக்கினால் வசனித்துக் காட்டற்கு அரிது அத்தன்மை போல் அந்தச் சிவ னுடன் கூடி அனுபவித்துள்ள இன்பத்தை அந்தப் பக்குவான்மாக்களே அறியாநிற்பர்; அஃதன்றி, அன் னியர்க்கு இத்தன்மையதாக இருக்கும் என்று உரைத் தல் கூடாது என அறிக.—

உருவின் உயிர் வடிவதுவும் உணர்ந்திலர் காண் சிவனை உணராதார் - ஆனந்த சொரூபியாயிருக்கிற சிவனை ஞானாசாரியனுடைய உபதேசத்தால் அறியா தார் கருவி கரணங்களைக் கூடியிருக்கிற ஆன்மாச் சரீரத்தின்கண்ணே நெடுநாள்கூடிநிற்கவும் தனது சொரூபத்தையும் உள்ளபடி அறியமாட்டார்கள் காண்,—

உணர்வினால் உணர்வது கற்பனை காண் - ஆன்ம போதத்தால் சுட்டி அறிகின்ற பலவிதமான வன்ன ரூப சகளரூபத் தியானம் ஆனந்தம் அன்று; அது சங்கற்பஞானமாய்விடுங்காண்,—

*ஆனால், எப்படி அறியலாம? என்னில்,*

அருள் பெறின் அ இருவரையும் அறிவு இறந்து அங்கு அறிவர் - சிவானுக்கிரகத்தைப் பெற்ருல் கருவி கரணுதிகளுடன் கூடாமல் ஞாதாக்கள் அப்பொழுது சிவனையும் தங்களையும் அறியாநிற்பர்; அம்முறை அறிந்து சிவனைக் கலந்திருத்தலே பரமமான ஆனந்தம் என்று சொல்லுவார்கள்.—

அறியாரேல் பிறப்பும் விடாது ஆணவமும் அருது ஏ - ஞாஞசாரியனுலே முன்னர்க் கூறிய கற்பனைகளும் அன்றென்று கருதி அந்தக் கற்பனை இல்லாததுமாய்ச் சாசுவதமுமாய்த் துரியம் கடந்ததுமாய் இருப்பது யாதொன்று அஃதே பரமமான ஆனந்தம்; இத்தை அறியாதிருப்பாராகில்அவர்கட்கு ஒருக்காலும்செனன மரணங்களும் ஒழியாது; அவைகட்குக் காரணமாகிய ஆணவமலமும் விட்டு நீங்காது என்றவாறு.

*"மைப்படிந்த கண்ணுளுந் தானும் கச்சி*
*மயானத்தான் வார்சடையான் என்னி னல்லான்*
*ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன்*
*ஒரூர னல்லன் ஒருவம னில்லி*
*அப்படியும் அந்நிறமும் அவ்வண் ணமும்*
*அவனருளே கண்ணுகக் காணின் அல்லால்*
*இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்*
*இவனிறைவன் என்றெழுதிக் காட்டொ ணுதே"*

*திருநாவு - விறுவிடைத்திருத்தாண்டகம் -* ***10.***

*எனவும்,*

*"முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்*
*அகத்திற் கண்கொண்டு பார்ப்பதே ஆனந்தம்*
*மகட்குத் தாய்தன் மணுளெெ டாடிய*
*சுகத்தைச் சொல்லென்ருற் சொல்லுமா றெங்ஙனே"*

*—திருமந்திரம் -* ***2944***

*எனவும்,*

"செவ்வா னுருவிற் றிகழ்வே லவனன்
றெவ்வா ததெனை வுணர்வித் ததுதான்
அவ்வா றறிவா ரறிகின் றதலால்
எவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே."

—கந்தரனுபூதி - 30.

எனனும திருவாக்குகளினும தெளிக.

இதற்குப பிரமாணம் சிந்தியம், விசுவம் என அறிக.

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** கருவிகளைக் கொண்டு அறியுமது ஒழிந்து கருவிகள் நீங்கினால் அச்சிவனைக் காணப் படாது என்ற சங்கிராந்தவாதியை நோக்கி மேல் அருளிச்செய்கின்றார்.

இ - ள் : கருவி கழிந்தால் காணார் ஒன்றும் எனில் - கருவிகள் என்று சொல்லப்பட்ட பாச ஞானம் நீங்கினால் ஒன்றும் அறியார்கள் என்று நீ சொல்லில்,—

காணார் காணாதார் - உன்னைப்போல் உண்மை அறியாதவர்கள் அல்லவோ அசேதனமாய் இருக்கிற கரணங்கள் நீங்கினால் ஒன்றையும் அறியாமல் இருக் கிறவர்கள்,—

கரணங்களைக் கொண்டு அறியாமல் ஒன்றை அறியுமது எப்படி? என்னில், உனக்கு அது சொன்னாலும் தெரியாது; அது என்போல? எனில்,

கன்னிகை தான் காமரசம் காணுள் — பக்குவப் பட்டுப் புமானைக் கூடாத ஸ்திரீ காமரசம் அறியாத முறைமைபோல,—

*காமரசமானது சொல்லப்படாதோ என்னில்,*

மருவி இருவரும் புணரவந்த இன்பம் வாயினுல் பேச அரிது — அந்த ஸ்திரீ புமான்கள் இருவரும் தங்களில் கூடி உண்டான சுகம் வாக்கால் சொல்லு தற்கு அரிது.—

*ஆனுல் அந்தச்சுகந்தான 'யா? என்னில்,*

மணந்தவர் தாம் உணர்வர் — கூடிப்புணர்ந் தவர்கள் அறிவர் இதனை ஆகையால்,—

உருவின் உயிர் வடிவு அதுவும் உணர்ந்திலை காண் சிவனை உணராதார் உணர்வினுல் உணர்வது கற்பனை காண்—சிவனுடைய ஞானத்திலே சிவனை அறியாதவர்கள் தேகத்திலே நிற்கிற ஆன்ம சொரூபத் தையும் அறிந்தார்கள் இல்லைகாண்; முன்சொன்ன முறைமை யொழிந்து ஆன்மபோதத்தாலே கருவி களைக் கொண்டு அறியப்பட்டதெல்லாம் சங்கற் பித்துக் கொண்டவைகாண்.—

*சிவனையும் ஆன்மாவையும வண அறியும்படி எங்ஙனே? என்னில்,*

அருள் பெறில் அங்கு இருவரையும் அறிவு இறந்து அங்கு அறிவர் - முற்செனனங்களில் செய்த தபோபலன்களினுலே ஆசாரியன் அநுக்கிரகத்தைப் பெறில் அந்தச் சிவனையும் ஆன்மாவையும் தற்போதம்

சீவியாமல் அந்த ஞானத்தோடே கூடி ஞானமாய் நின்றே அறியாநிற்பர்கள்,—

அறியாரேல் பிறப்பும் விடாது ஆணவமும் அருது ஏ - இப்படி அந்த ஞானத்திலே சிவனையும் ஆன்மாவையும் தரிசியார்களாகில் செனனம் அருது; அஞ்ஞானமும் விட்டு நீங்காது என்றவாறு.

*'கருவி கழிந்தால் காணுர்' என்ற சங்கிராந்த வாதியை மறுத்தற்குப் பிரமாணம :*

*'' நிறைந்து நீயாய் நின்றனை ஏனும்*
*மறந்தைம் புலனும் வாராய் என்றும்*
*கரணம் எல்லாம் கடந்தனை என்றும்*
*மரணமை யைந்தின் அப்புறத் தென்றும்*
*முன்னருட் டலைவர் பன்னினர் எனவும்*
*இனையவை யொழிய அறிகுவ தெவ்வா(று)*
*என்ற நிற்கலிக் கொன்றிய இன்பம்*
*கூறுதல் தகுமருட் பேறினை யன்றே ''*

*—சங்கற்ப - சங் ராந்தவா நிராகரணம்.*

*எனனுமதும் கண்டுகொள்க.*

*இதனல் சொல்லியது கருவிகள நீங்கினல் ஒன்றும தெரியாது கருவிகளைக் கொண்டே சிவனை அறியவேணும் எனறு சங்கிராந்தவாதி சொல்லக் கருவிகள் பாசஞானம் ஆகையால், பதிஞானத் தாலே பதியை அறியவேணும என்னும முறைமை அறிவித்தது.* (௩௬)

செய்யுள் —288

**பன்னிறங்கள் அவைகாட்டும் படிகம்போல் உள்ளம்**
**பலபுலன்கள் நிறங்காட்டும் பரிசு பார்த்திட்(டு)**
**இந்நிறங்கள் என்னிறமன் றென்று தன்றன்**
**எழினிறங்கண் டருளினல் இந்நிறத்தின் வேருய்ப்**

பொய்ந்நிறஜும் புலநிறங்கள் பொய்எனமெய் கண்டான்
பொருந்திடுவன் சிவத்திறெடும் போதான்
முன்னிறைநீர் சிறைமுறிய முடுகி யோடி
முந்நீர்சேர்ந் தந்நீராய்ப் பின்நீங்கா முறைபோல்.

**1.** மறைஞானசம்பந்தர் :

இப்படி நிட்டையைப்பொருந்தினோர் கருவி கரணாதிகளுடன் கூடினரே ஆயினும் அதன்வழியாகார் என்று உணர்த்துகின்றார்.

**என்பது:** பல் நிறங்கள் அவை காட்டும் படிகம் போல் - படிகமானது எப்படித் தன்னிடத்திற் கூடின பல வன்னங்களே மேலிடத் தனக்கு எப்பொழுதும் சுபாவமான சொரூபத்தைக்கரந்து தன்னை யடுத்த பதார்த்தத்தின் தன்மையே காட்டிநிற்குமது போல்,—

உள்ளம் புல புலன்கள் நிறம் காட்டும் பரிசு பார்த்திட்டு - இந்திரியத்துக்கு வேறுபட்டிருக்கிற ஆன்மா அதனைக்கூடின இடத்துத் தனக்குச் சுபாவமாய் இருக்கிற வடிவை மறைத்து அவ்விந்திரியங்களே காட்டி நிற்கும் என்பதனை அறிந்து,—

இ நிறங்கள் என் நிறம் அன்று என்று - ஆன்மாவும் இந்திரியங்களின் வியாபாரமும் வாதியல்லாமல் நமக்கு உண்மையல்ல என்று கருதி,—

தன் தன் எழில்நிறம் கண்டு - தான் அழகிய சுத்தனாய் இருக்கிறதே உண்மையென்று தற்சொருபத்

அருளினுல் இ நிறத்தின் வேறு ஆய் - மத்தியான காலத்தில் படிகம் வன்னங்களைக் கவராது வேறு பட்டுத் தற்சொரூபமாம் தன்மைபோல் இவனும் திரு வடியைக் கூடின இடத்து நமக்குச் சுபாவம் அன்று என்று திருவருளாலே கருதி அதற்கு வேருய்,—

*திருவருளாலே பார்த்திட்டு அன்றென்று கண்டு வேருயின அருளாலே எனபதனை எவ்விடத்தும கூட்டுக.*

*'' தன்னிறமும் பொன்னிறமும் தானுங்கற் றன்மைதரும்
பொன்னிறம்போல் மன்னிறமிப் பூ ''*

*என்பதனுலும் அறிக.*

பொய்ந்நிற ஐம்புல நிறங்கள் பொய் என மெய் கண்டான் பொருந்திடுவன் சிவத்திடுைடும் போதான் பின்னை - அசத்திய ரூபமாகிய இந்திரிய வியாபாரத் தைப் பொய் என்று விசாரித்து அதனை நீங்கித் தற் சொரூபத்தைத் தரிசித்தவனே உண்மை ஞானி; அவனே சிவத்தை அடையாநிற்பன்; பின்பு அந்தச் சிவத்தை விட்டு நீங்கான்,—

*அஃது எனபோல? என்னில்,*

'முன் நிறை நீர் சிறை முறிய முடுகி ஓடி முந்நீர் சேர்ந்து அந்நீராய் பின் நீங்கா முறை போல் - பிரவாக மாய் ஓடாநின்ற நதியை அடைக்கக் கட்டுண்ட இடத்து அஃது உடைந்தவாறே விரைவிற்சென்று சமுத்திரத்தைப் பொருந்தின இடத்து அந்த உப்பு நீரேயாய்ப் பின்பு திரும்பாதிருக்குமாறுபோலச் சிவனை

அடைந்து ஆன்மாவும் அந்தச் சிவமேயாய் மீளத் திரும்பான் என்றவாறு.

*'முறைபோல்' எனபதனுல் காட்டத்தில் அடங்கியிருந்த அக்கினி விளங்கித் தோனறின இடத்துப் பினபு அவவரணியில் புகாதவாறுபோலும, தயிருட் டோன்றிய நெய் மீள அத்தயிராகாதவாறுபோலும என அறிக.*

*இதற்குப பிரமாணம் சுப்பிரபேதம், இரௌரவ சூத்திரம், நிச்சுவாசம் என அறிக.*

*''தொண்டலால் துணையுமில்லை தோலலா துடையுமில்லை*
*கண்டலா தருளுமில்லை கலந்தபின் பிரிவதில்லை*
*பண்டைநான் மறைகள் காணுப் பரிசினன் என்றென்றெண்ணி*
*அண்டவா னவர்கள் ஏத்தும் ஐயனை யாற ஞர்க்கே.''*

*—திருநாவு - ஐயாறு - திருநேரிசை - 4.*

*'' வேண்டேன் புகழ் வேண்டேன் செல்வம்*
*வேண்டேன் மண்ணும் விண்ணும்*
*வேண்டேன் பிறப் பிறப்புச் சிவம்*
*வேண்டார் தமை நாளும்*
*தீண்டேன் சென்று சேர்ந்தேன் மன்னு*
*திருப்பெருந்துறை இறை தாள்*
*பூண்டேன் புறம் போகேன் இனிப்*
*புறம்போக லொட்டேனே ''*

*—திருவாசகம் - உயிருண்ணி - 7.*

*என்னும் திருவாக்கினுனும் அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** இப்படிக் கர்த்தாவின் அருளினுலே ஆன்மாக்கள் அறிவர்கள் என்றது என் நம்பு, அவன்

நீரும் நிழலும்போல விகாரமறநிற்க இவனைச் சென்று கூடுவன் என்ற அவிகாரவாதியை நோக்கி மேல் அருளிச்செய்கின்றார்.

இ - ள்: பல் நிறங்கள் அவை காட்டும் படிகம் போல் - பஞ்ச வன்னங்களின் உண்மையைக் காட்டு கிற படிகத்தைப்போல,—

உள்ளம் பல புலன்கள் நிறம் காட்டும் பரிசு பார்த்திட்டு - ஆன்மாவானது பஞ்சேந்திரியங்களி னுடைய சுபாவமே தானும் காட்டுகிற முறைமையை அறிந்து,—

இ நிறங்கள் என் நிறம் அன்று என்று - இந்தச் சொரூபம் என்னுடைய சுபாவம் அல்ல என்று,—

தன் தன் எழில் நிறம் கண்டு - தன்னுடைய ய சுபாவத்தை அறிந்து,—

நிறத்தின் வேறு ஆய் - அந்தப் பஞ்சவன்னங்களைப் போலத் தன்வசம் ஆக்கிக் கொண்டு நிற்கிற அசத்தியமான இந்த இந்திரியங் களைக் குருவினாலே தனக்கு வேறாக அறிந்து,—

பொய்நிற ஐம்புல நிறங்கள் பொய் என மெய் கண்டான் பொருந்திடுவன் சிவத்தினோடும் போதான் பின்னை - அசத்தியமான சுபாவத்தையுடைய பஞ் சேந்திரியங்களின் வன்னங்கள் எல்லாம் அசத்தியம் என்று அறிந்து சத்தியத்தைத் தரிசித்தவன் அந்தச் சத்தியமாயுள்ள சிவனுக்கு அடிமை என்று அறிந்து அந்தச் சிவனோடும் கூடிப் பின்பு சிவத்தைவிட்டு நீங்கான்,—

*அது என்போல? என்னில்,*

முன் நிறை நீர் சிறை முறிய முடுகி ஓடி முந்நீர் சேர்ந்து அந்நீர் ஆய் பின் நீங்கா முறை போல் - முன்னே சிறைசெய்ய நிறைந்துநின்ற நீரானது அந்தக் கரை முறிந்தபோது விரைந்துசென்று சமுத்திரத்தைக் கூடி உப்புநீராய்ப் பின்பு பழையநீர் ஆகாத முறைமை போல ஆன்மாவும் தன்னைச் சிறைசெய்து நின்ற இந்திரியங்களைக் குருமுகமாகத் தனக்குச் சிறை என்று அறிந்து இந்திரியங்களை நீங்கிச் சிவனுடைய சிபாதத் திலே பொருந்தி அழுந்தின ஆன்மா மீண்டும் அசற் காரியமான இந்திரியங்களில் வந்து கூடப்படாது என்றவாறு.

*'பன்னிறங்கள் அவை காட்டும் படிகம்போல் உள்ளம் பலபுலன்கள் நிறங்காட்டும் பரிசுபார்த்திட்டு, இந்நிறங்கள் என்நிறம் அன்றென்று தனறன் எழில் நிறம் கண்டு அருளினல் இந்நிறத்தின் வேருய்ப், பொய்ந்நிற ஐம்புல நிறங்கள பொய்யென மெய்கண் டான் பொருந்திடுவன் சிவத்திறெடும் போதான பின்னை' என்றது அவிகாரவாதி. இதற்குப்பிரமாணம:*

> "ஆதலின் வாயில் அளவினில் அறிதலின்
> ஏதமில் அறிவுயிர்க் கெய்துதல் இலதே"

—சங்கற்ப - ஈசுவர அவிகாரவாதி நிராகரணம்.

*என்றும,*

> *'நீர்நிழல் அனைய சீர்பெறு கடவுளைச்*
> *சேர்ந்தவர்க் கின்பம் வாய்ந்திடும் என்றனை*
> *பாதவம் என்றும் சேதனம் இன்மையின்*

இளைத்தோர் வம்மின் என்பதும் துன்பதும்
விளைத்தோர் தம்மின் வெறுப்புமொன் றிலதே ''

—சங்கற்ப - ஈசுவர அவிகாரவாதி நிராகரணம்.

என்றும்,

''பன்னிறங் காட்டும் படிகம்போல் இந்திரியம்
தன்னிறமே காட்டும் தகைநினைந்து - பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு ''

—சிவஞானபோதம் : சூத் - 8, வெண்பா - 6.

எனனுமதும் கண்டுகொள்க.

'முன்னிறைநீர் சிறைமுறிய முடுகியோடி முந்நீர் சேர்ந்து அந்நீராய்ப் பின நீஙகா முறைபோல்' எனற தற்குப் பிரமாணம:

'' சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்
சிறைசெய் புலனுணர்வில் தீர்ந்து - சிறைவிட்
டலைகடலில் சென்றடங்கு மாறுபோல் மீளா
துலைவிலரன் பாதத்தை யுற்று ''

—சிவஞானபோதம்: சூத் - 8, வெண்பா - 7.

என்னுமதும கண்டுகொள்க.

இதனல் சொல்லியது ஆன்மா இந்திரியங் களோடுகூடித் தன்னை அறியாது மயங்கிநிற்கும என் றும், முத்தியில் சிவனுக்கு அடிமையாய் இருப்பன் எனறும், குருமுகமாக இந்திரியங்களைத் தனககு வேறு என்று அறிந்துநீங்கச் சிவனுடைய திருவடியே இவனுக்குத் தாரகமாம் என்னும் முறைமையும் அறிவித்தது. (நஎ)

செய்யுள்—289

எங்குந்தான் என்னில்நாம் எய்த வேண்டா
எங்குமிலன் என்னின்வே றிறையு மல்லன்
அங்கஞ்சேர் உயிர்போல்வன் என்னின் அங்கத்(து)
அவயவங்கள் கண்போலக் காணு ஆன்மா
இங்குநாம் இயம்புந்தத் துவங்களின்வைத் தறிவ(து)
இறைஞானந் தந்துதா வீதல்சுட ரிழந்த
துங்கவிழிச் சோதியுமுட் சோதியும்பெற் றூற்போல்
சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே.

1. மறைஞானசம்பந்தர் :

பரிணமவாதி, பெத்தான்மாக்கள் சர்வவியாபி யாய் இருக்கிற சிவனைப்போய்க் கூடினார்கள் என்பது என்னை? அப்பொழுது அவன் ஏகதேசி ஆகானோ? என்று சொல்ல, அவனைக்குறித்து உணர்த்துகின்றார்.

**என்பது:** எங்கும் தான் என்னின் நாம் எய்த வேண்டா - சிவனைச் சர்வவியாபி என்பீராகில் அப் பொழுது நாம் அவனைச் சென்றுகூட வேண்டுவது

எங்கும் இலன் என்னில் வேறு இறையும் அல்லன் - சர்வவியாபி அல்லன் என்பீராகில் அப் பொழுது அவன் கர்த்தாவும் அல்லவாய் வேறொரு கர்த்தாவை அபேட்சிக்கவேண்டும். அஃது ஏன்? என்னில், சர்வான்மாக்களிடத்திலும் இருந்து அவரவர் கன்மமல பாகங்களை அறிந்து அவரவர்க்கு உசிதமான போக மோட்சங்களைக் கொடுக்கும் கர்த்திருத்துவ சாமர்த்தியம் இல்லானும்

அங்கம் சேர் உயிர் போல்வன் - அஃதன்றியும் சரீரத்திலிருக்கும் ஆன்மாவைப்போல் ஏகதேசமாய் விடுவன்,—

எங்கும் அங்கத்து அவயவங்கள் கண் போல காணு ஆன்மா - சரீரத்து உண்டாய அவயவங்களைக் கண்ணுனது காணும் அதனை அவயவங்கள் காணு வாறு போலச் சிவன் எங்கும் வியாபித்து நின்றுனே ஆயினும் அவனை ஆன்மாக்கள் காணமாட்டார்கள் ; ஆன்மாக்களையும் மற்றுள்ள பிரபஞ்சங்களையும் சிவன் கண்டு நிற்பன்; ஆனுல், அவயவங்கள் கண்ணை ஒரு காலமும் கண்டு அறியமாட்டா, அத்தன்மைபோல ஆன்மாக்களும் சிவனை ஒருகாலமும் கண்டறியமாட் டார்களோ ? எனின்,—

இங்கு நாம் இயம்பும் தத்துவங்களின் வைத்து அறிவது - இத்தன்மை இவ்விடத்தில் பெத்தாவத்தை யும் நாம் சொல்லப்பட்ட தத்துவசமுகத்தில் சம்பந்தித் தறிவது, இஃதன்றி முத்திதசைக்கு இஃது அடாது என்க; ஆனுல் முத்தியவத்தையில் ஆன்மா சிவனை ]ந்து கூடுவது எப்படி ? என்னில்,—

இறை ஞானம் தந்து தாள் ஈதல் - சிவன் ஆன் மாக்களுக்கு மலத்தை நீக்கிச் சர்வஞ்ஞத்துவாதிகளை விளக்கி முத்தியில் தனது திருவடியைத் தரிசிப்பிப்பது எப்படி ? என்னில்,—

சுடர் இழந்த துங்க விழி சோதியும் உள் சோதியும் பெற்றுல் போல் - படலத்தால் உத்கிருட்டமான ஒளியை இழந்த கண்ணுனது பண்டிதன் வியாபாரத் தாலே படலம் நீங்கிக் கண்ணில் சோதியையும்

அதற்குக் காட்டான சோதியையும் பெற்ற முறை போல.—

சோதிக்குள் சோதியாய் தோன்றிடுவன் காண் ஏ - அப்பொழுது உயிர்க்குயிராய் இரண்டறக் கலந்திருந்த ஐக்கியமாய்த் தோன்றுவன் என்றவாறு.

*என்னவே சிவனுக்கும் இவனுக்கும் சற்குண சமானத்தால் சமரசிபாவம கூறியதாயிற்று. இச் சமரசிபாவம பாலும பாலும் கூடினதுபோலப பிரிக் கப்படுவதன்று. இப்படி வேறற்று அதுவித ஐக கியமாய்க் கலந்திருக்கும சிவனை மலம் நீங்கித் தரிசித் தறிகிறது தானே சென்று கூடினது என்றது என அறிக.*

> *" தேடாதே தேடிச் சிவனைத்தன் னுள்ளே*
> *கூடாதே கூடுவதே கோள் "*
>
> *—மறை - சங்கற்ப - ஈசுவர - நிராகரணம் 18.*

> *" இருளடங்கும் போதிலருள் ஈசனிணைத் தாளைத்*
> *தெரிசிக்கை சேர்தலெனத் தேறு "*
>
> *—ஷை ஐக்கியவாதி நிராகரணம் 34.*

*எனனும் திருவாக்கினுள்ளும் தெளிக.*

*இதற்குப் பிரமாணம நிச்சுவாசம், ரந்த ரகசியசாரம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** எல்லா உருவங்களும் சிவம் என்று சொல்லுகைசெய்தே இவன் சென்று அவனைக் கூடுவன் என்றது என் நம்பு என்ற பரிணமவாதியை நோக்கி அருளிச்செய்கின்றார்.

இ - ள் : எங்கும் தாம் என்னின் நாம் எய்த வேண்டா - எல்லா உருவங்களிலும் நின்று அறிகிறது சிவனே என்னில் அவனுடைய திருவடியை நாம் சென்று பெறவேண்டுவது இல்லையாம்,—

*ஆனல், சிவன் இந்தப்பிரபஞ்ச ரூபங்களுக்கு அன்னியனே? என்னில்,*

எங்கும் இலன் என்னில் வேறு இறையும் அல்லன் - எவ்விடத்திலும் இல்லை என்று நீ சொல்லில் அவன் பிரபஞ்சத்துக்கு வேறுமாய் ஏகதேசியுமாய்க் கர்த்தாவும் ஆகான்,—

*எல்லா உருவங்களும சிவனே ஆகில் ஆன்மா என்றது ஒன்று எங்கே காணப்பட்டது? என்னில்,*

அங்கம் சேர் உயிர் போல்வன் எங்கும் அங்கத்து அவயவங்கள் கண் போல காணு ஆன்மா இங்கு நாம் இயம்பும் தத்துவங்களில்வைத்து அறிவது - சிவனலே எல்லா உருவங்களும் காரியப்பட்டதாம் ஆகிலும் பிரபஞ்சத்தைப் பார்க்க ஆன்மாவுக்கு விசேடத்துவம் உண்டு; அஃது எங்ஙனே? என்னில், சரீரத்திலே எல்லா அவயவங்களுக்கும் ஆன்மா பிராணனுய்நிற்கிற நிலை ஒத்திருக்கச்செய்தேயும் எல்லா அவயவங்களுக்கும் காணும்தன்மை இல்லையாய்க் கண்ணுக்குக் காணும் தன்மை உண்டானுற்போல இவ்விடத்து நாம் சொன்ன அவயவங்களைப் பார்க்கக் கண்ணுக்கு ஒரு விசேடம் உண்டானுற்போல, பிரபஞ்சத்தைப் பார்க்க ஆன்மாவுக்கும் ஒரு விசேடம் உண்டு என்று வைத்துப்பார்த்து அறிவாயாக,—

*ஆனுல் அந்த ஆன்மாக்கள் சிவனைக் காணுதிருப் பானேன? என்னில்,*

இறை ஞானம் தந்து தாள் ஈதல் சுடர் இழந்த துங்க விழி சோதியும் உள் சோதியும் பெற்ருல்போல் - முன்னே காணும் என்ற கண் படலத்தாலே மறைப் புண்டு காட்சியின்றி நின்ற அவதரத்து அந்தப்படலம் நீங்கினபொழுது காணும்தன்மையும் காட்டும் ஒளி யின்தன்மையும் பெற்ருற்போலப் பரமேசுவரன் தன் னுடைய ஞானத்தையும் தந்து அந்த ஞானத்தாலே ஆன்மாவுக்கு உண்டான பாசம்நீங்கத் தன்னுடைய சீபாதத்தையும் தர அந்தச் சீபாதத்தைப் பெற்று அதுவாய் நிற்கவே,—

சோதிக்குள் சோதியாய் தோன்றிடுவன் காண் ஏ - ஆன்மாக்களே இவனுக்குப் பிராணனுய் நின்று பிரகாசிப்பன் என்று அறிவாயாக என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் :*

*" புவனம் யாவையும் புனிதன துருவெனில்*
*அவன்முதற் காரணம் அன்றும் என்னில்*
*நிமித்த காரணம் நிகழ்த்து கெனநீ*
*அவனே காரணம் அனைத்துமென் றறைந்தனை*
*மண்தனில் குலால தண்டசக் கராதி*
*காரணம் மூன்றும் ஏர்புனைந் திடவித்*
*தாரணி யதனில் கண்டது சாற்றுக "*

—சங்கற்ப - பரிணமவாதி நிராகரணம்.

*என்றும்,*

*" எவ்வுருவும் தானென்னின் எய்துவா ரில்லைதாள்*
*பின் வேறேல் இறையல்லன் - எவ்வுருவும்*

*கண்போல் அவயவங்கள் காணுவக் கண்ணில்லார்*
*கண்பேறே காணக் கழல் ”*

*—சிவஞானபோதம்: சூத் - 8, வெண்பா - 8.*

*எனனுமதும கண்டுகொள்க.*

*இதனுல் சொல்லியது எல்லா அவயவங்களும் ஆனமாவாலே காரியப்பட்டுத் தேகம் கண்ணுக்கு ஒரு விசேடம உண்டானுற்போல, பிரபஞ்சம் எல்லாம் சிவனுலே காரியப்படுகை செய்தே ஆன்மாவுக்கு ஒரு விசேடம உண்டு என்றும, பக்குவ ஆன்மாக்களுக்கு அல்லாது சிவதரிசனம உண்டாகாது எனனும் முறைமையும அறிவித்தது.* (நஅ)

செய்யுள் –290

பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட் டெறியப்
படும்பொழுது நீங்கிஅது விடும்பொழுதிற் பரக்கும்
ஆசுபடு மலமாயை அருங்கன்மம் அனைத்தும்
அரனடியை உணரும்போ தகலும்பின் அணுகும்
நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தாங்கும்
நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி
ஆசையொடும் அங்குமிங்கு மாகியல மருவோர்
அரும்பாச மறுக்கும்வகை அருளின்வழி யுரைப்பாம்.

**1.** மறைஞானசம்பந்தர் :

இந்தப்படி அறிந்துநிற்கமாட்டாதாருக்கு வேறோர் உபாயம் உணர்த்துகின்றார்.

**என்பது:** பாசி படு குட்டத்தில் கல்லினை விட்டு எறியப்படும்பொழுது நீங்கி அது விடும் பொழுதில்

பரக்கும் - பாசி பரந்த குளத்தினிடத்து ஒருவன் கற் கொண்டு எறிய அந்தக் கல்லானது பட்டபொழுது பாசி விட்டுநீங்கும், எறிகிறது தவிர்ந்தபோது மீண்டும் பாசி பரவாநிற்கும்; அத்தன்மைபோல,—

ஆசு படும் மலம் மாயை அரு கன்மம் அனைத்தும் - குற்றத்தைப் பொருந்தின ஆணவமும் மாயையும் அநேக கோடி கற்பகாலம் சென்றாலும் புசித்தாலன்றி நீங்கற்கு அரிய கன்மமும் இவையெல்லாம்,—

அரன் அடியை உணரும்போது அகலும் பின் அணையும் - ஒருவர் சிவனடியைத் தியானம்பண்ணிக் கூடியிருக்கும்பொழுது நீங்கும்; அதனைக் கூடாவிடத் துப் பின்பு அவைகள் இவரைப் பொருந்தாநிற்கும் ஆதலால்,—

நேசமொடும் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கும் நினைவு உடையோர் நின்றிடுவர் நிலை அதுவே ஆகி - "யாரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படும் காண் - ஆரேனும் காணா அரன்" என்பதனாலே ஆதரவோடும் கூடித் திருவடிக்கீழ் இருந்து பிரபஞ்சப் பொருள் களைப் பாராமல் அந்தத் திருவடியைப் பிரியாமல் அனவரதமும் தெரிசித்துக் கொண்டிருந்து அறிவோ டும் கூடி ஆனந்த நித்திரை பண்ணாநிற்கும் ஞான வான்கள் அந்தத்திருவடியே ஆதாரமாக நிற்பார்கள்,—

*" சிறுமா னேந்திதன் சேவடிக்கீழ்ச் சென்றங்*
*கிறுமாந் திருப்பன் கொலோ "*

*-திருநாவு - திரு அங்கமாலை 11.*

*எனவும,*

'' சொற்பாவும் பொருள்தெரிந்து தூய்மை நோக்கித்
தூங்காதார் மனத்திருளை வாங்கா தானை ''

—திருநாவு - கீழ்வேளூர் - திருத்தாண்டகம் - 2.

எனவும்,

'' உலகுளார் பெறுது துஞ்சும் ஒருபொருள் விழித்த யோகி
உலகுளார் விழித்த பண்டத் துறங்குவ னுருவ மாகி
உலகுமாயுயிராய்வேறற் றுளிறுமொப்பிலிதன் தொண்டாள்
அலர்தலைக் கணிந்த யோகிக் கவனலால் ஞேயம் யாதே''

—சிவதருமோத்தரம் - சிவஞானயோக - 5.

எனவும்,

'' தனந்தனி யேயிருந் தானந்த நித்திரை தங்குகின்ற
வனந்தனி லென்றிருப் பேனைய னேகயி லாயத்தனே ''

எனவும்,

'' முழுதும் புலனொடுங்க முத்தனலர்த் தாளைச்
சுழுனைவழிக் கண்டதன்கீழ்த் தூங்கு ''

—பதிபசுபாசப்பனுவல் - போதக - 6.

எனவும் ஓதியருளிய திருவாக்குககளினும தெளிக.

ஆசையொடும் அங்கும் இங்கும் ஆகி அலமரு வோர் அரும் பாசம் அறுக்கும் வகை அருளின்வழி உரைப்பாம் - இம்முறையில் நிற்கமாட்டாமல் பிரபஞ்சத்தில் பற்று முற்றும் துறக்கப்படாதபடியினாலும் சிவனிடத்துள்ள சிறிது வாஞ்சையினாலும் திருவடியை நினைப்பதுபோன்றும் பின்பு அதைவிட்டுப் பிரபஞ்சத்தோடு கூடியும் இப்படியே அங்குமிங்கு மாகச் சுழலாநிற்கும் வானுதி தொடுத்து இன்றளவும் அளவிறந்தகாலம் செனன மரணப்பட்டுப் போக்கற் கரிய ஆணவாதி பாசங்களைச் சிவானுக்கிரகத்தினாலே

போக்கி முத்தியடையும்படிக்கு உபாயநிட்டை சிவா னுக்கிரகத்தினலே மேற்சொல்லுவாம் என்றவாறு.

*அருளின்வழி என்பதனை இருபாலும் கூட்டுக.*

*" துடங்கிய வாழ்க்கையை வாளா துறப்பர் துறந்தவரே*
*அடங்கிய வேட்கை யரன்பா லிவரறு காற்பறவை*
*முடங்கிய செஞ்சடை முக்கண ஞற்கன்றி யிங்குமின்றிக்*
*கிடங்கினிற் பட்ட கராவனை யார்சில கேவலரே "*

*என்பதும அறிக.*

*மறைஞானசம்பந்ததேசிகர் உரை முடிந்தது.*

2. நிரம்பவழகியர் :

**அ - கை:** இந்த ஆன்மா சிவனை அறிந்து கூடினதே உண்டாகில் மீள அந்த இந்திரியங்களோடு கூடவற்ருே? என்ற பாடாணவாதியை நோக்கி அருளிச்செய்கின்ருர்.

**இ - ள்:** பாசி படு குட்டத்தில் கல்லினை விட்டு எறிய - பாசி பொருந்தின குளத்திலே கல்லைவிட் டெறிந்த இடத்து,—

படும்பொழுது நீங்கி அது விடும்பொழுதில் பரக் கும் - அந்தக் கல்லுப்பட்டபொழுது பாசி விட்டுநீங்கி யும் எறிகிறது தவிர்ந்தபொழுதே மீண்டும் அந்தப் பாசிவந்து தண்ணீரை மூடிக்கொள்ளாநிற்கும்; அத் தன்மைபோல,—

ஆசு படும் மலம் மாயை அரு கன்மம் அனைத்தும் அரன் அடியை உணரும்போது அகலும் பின்

அணையும் - குற்றத்தைப் பொருந்தின மலம் மாயை காணுதற்கு அரிய கன்மம் இவை எல்லாம் பரமேசுவர னுடைய திருவடியை வேறறக்கண்டு கூடும்பொழுது அந்த மல மாயா கன்மங்கள் நீங்கும்; இவன் சகல னபடியினாலே அந்தத் திருவடியை உணராத பொழுது மீண்டும் அவை வந்துகூடும்,—

*இந்தப் பாசங்கள் மேலிடாமல் நீங்குமபடி எங் ஙனே? என்ற மாணாக்கனை நோக்கி அருளிச் செய் கின்றார்.*

நேசமொடும் திருவடி கீழ் நீங்காதே தூங்கும் நினைவு உடையோர் நின்றிடுவர் நிலை அதுவே ஆக - சினேகத்துடனே தனக்குப்பிராணனாய்நிற்கிற பரமேசு வரனது சீபாதத்தின்கீழே அநவரதமும் விட்டுநீங்கா மல் அதுவே பற்றுக்கோடாக நிற்கத்தக்க அறிவினை யுடையவர்கள் அதுவே நிலையாக நிற்பர்கள்,—

*மீளவும் அந்தநிலை கூடாதவர்களுக்குப் பாசம் நீங்குமது எப்படி? என்ற மாணாக்கனைநோக்கி அருளிச் செயகின்றார்.*

ஆசையொடும் அங்கும் இங்கும் ஆகி அல மருவோர் அரும் பாசம் அறுக்கும் வகை அருளின் வழி உரைப்பாம் - பிரபஞ்ச வியாபாரத்தை விட்டுச் சிவனைப் பெறவேணும் என்கிற ஆசையுடனே அந்தத் திருவடியிலே கூடிநின்று மலத்தின்மேலீட் டாலே அந்தத் திருவடியை விட்டுநீங்கிப் பிரபஞ்ச வியாபாரத்திலே கூடிச்சுழன்று அதுவாய் வருகிற வர்களுடைய நீங்குதற்கு அரிய பாசத்தை நீங்கின

முறைமையினைத் தம்பிரானுருடைய காருண்ணியத்திருலே மேற்சொல்லாநின்றேன் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம:*

*'' ஐம்பொறியின் அல்லையெனும் அந்த தரசிவனை*
*ஐம்பொறியை விட்டங் கணைசகலன் - ஐம்பொறியின்*
*நீங்கான்நீர்ப் பாசிபோல் நீங்குமல கன்மம்வரின்*
*நீங்கானை நீங்கு நினைந்து ''*

*—சிவஞானபோதம் : சூத் - 8, வெண்பா - 9.*

*என்னுமதும் கண்டுகொள்க.*

*இதனால் சொல்லியது இந்த ஆனமா சிவனைப் பெற்றும் பிராரத்தம புசிக்கவேண்டிய மல மாயாதி கன்மங்களோடு கூடும் என்றும், இந்த மலங்களைத் தனக்குப் பிராணனாய் நிற்கிற சிவனாலே நீக்கிக்கொளளும் முறைமையும் அறிவித்தது.* (நகூ)

*நிரம்பவழகியதேசிகர் உரை முடிந்தது.*

*சாதனவியல் - எட்டாஞ்சூத்திரம் முடிந்தது.*

# சாதனவியல்

## ஒன்பதாஞ்சூத்திரம்

### செய்யுள்—291

பாசஞா னத்தாலும் பசுஞானத் தாலும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே
நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாத
நீழற்கீழ் நில்லாதே நீங்கிப் போதின்
ஆசைதரும் உலகமெலாம் அலகைத்தே ராமென்(று)
அறிந்தகல அந்நிலையே யாகும் பின்னும்
ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க
உள்ளத்தே புகுந்தளிப்பன் ஊனமெலா மோட.

**1.** மறைஞானசம்பந்தர் :

மேற்சூத்திரம் என்னுதலிற்றோ ? எனின், கூறிப் போந்த நிலையினில் கூடாதவர்கட்கு உபாயநிட்டை யால் ஆன்மசுத்தி உணர்த்துதல் நுதலிற்று.

இத்தலைச்செய்யுள் என்னுதலிற்றோ ? எனின், அந்த உபாயநிட்டை கூடின முற்கூறிய நிலையினில் கூடும் என்றும், அஃதும் அரிதேல் பின்னும் ஓர் உபாயம்கூறி அம்முறை செய்யுமவர்கட்கு முற்கூறிய நிலை கூடி அனுபோகத்தைப்பெறும் முறை உணர்த்துதல்

**என்பது:** பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்ப அரிய பரம்பரனை - சுத்த மாயா காரிய மான வாக்குக்களினாலும் அசுத்த மாயா காரியமான

கலாதி ஞானங்களினாலும் ஆன்மபோதத்தாலும் அறிதற்கு அரிதாய அநாதிமுத்தனாய்த் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இன்றி முப்பத்தாறு தத்துவத்திற்கு மேற்பட்டிருத்தலால் சர்வோத்கிருட்டனாய் எல்லாத்துக்கும் மேலாயிருக்கிற சுவதந்திர கர்த்தாவாகிய

*இப்படிப்பட்ட கர்த்தாவை அறியும்படி எப்படி? எனனில்,*

பதிஞானத்தாலே நேசமொடும் திருவடிக்கீழ் நாடி - ஆன்மாவானவன் அவன்கண் வைத்த ஆதரவொடும் சிவஞானமிடமாகச் சிவனைத் தரிசித்து அவனது திருவடிக்கீழ் நீங்காமை நிற்க,—

*அப்படி நிற்கவே அவனையும் அறியப்பட்டு ஆன்மசுத்தியும் உண்டாகாநிற்க என்ற சொல் செய்யுள் விகாரத்தால் தொக்கது; ஆதலால் அச் சொல் வருவித்துக் கூறுக.*

பாத நீழற்கீழ் நில்லாதே நீங்கிப் போதின் - இந்தப்படி திருவடிநிழற்கீழ்ப் பொருந்தி நில்லாது உலக மயக்கத்தால் அதனைப்பிரிந்து விடுவனாகில்,—

ஆசை தரும் உலகம் எல்லாம் ...
ஆம் என்று அறிந்து அகல அ நிலையே ஆகும் - மெய்யுணர்வு இல்லாமையின் மெய்ப்பொருள் போலத் தோன்றி அபக்குவருக்கு ஆசை உண்டாக்கும் பிரபஞ்சம் அனைத்தையும் பேய்த்தேரை நீர் என்று கருதுவானைப் போலப் பொய் என்று அறிந்து அ ல்

ஆசையற்று அதனை நிலையன்று என்று கருதி அதனை நீங்கிநிற்பனாகில் அவனுக்கு முற்கூறிய உண்மையான அந்நிலைமை யுண்டாம்,—

*இப்படி நிற்கவும் அரிதாகில்,*

பின்னும் ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க உள்ளத்தே புகுந்து அளிப்பன் ஊனம் எல்லாம் ஓட - பின் ஸ்ரீ பஞ்சாக்கரத்தை அந்த அந்த வன்னத்துக்குள்ள மாத்திரை முதலாயினவற்றை அதுவதுவாக அறிந்தே ஓசை ஏறாமல் குறையாமல் கருதி உச்சரிக்கில் அப்பொழுது வாச்சிய வாசகத்து உண்மைப்பொருளாய் நின்ற சிவன் தானே ஆன் மாவைப் பொதிந்துள்ள ஆணவாதி குற்றமெல்லாம் போம்படி அவ்வான்மாவின்கண் வந்து பிரகாசித்துச் சுவானந்தானுபூதியைக் கொடாநிற்பன் என்றவாறு.

*விதிப்படி என்றது பினனர்க் காட்டுகின்றார். இதற்குப பிரமாணம சிவஞானபோதம், சுவாயம்புவம் என அறிக.*

*பிரணவத்துடன் ஆறெழுத்து என்று யிருகக இஙஙன ஐந்தெழுத்துக கூறியது என்? என்னில், அது பொதுவிதியாக வேதாகமங்களிற் ா.*

> *'வேத நான்கினும் மெய்ப்பொரு ளாவது*
> *நாதன் நாமம் நமச்சி வாயவே''*
>
> *—திருஞான - நமச்சிவாய - 1.*

*என அறிக. இது சிவதருமோத்தரத்து அறிக.*

2. நிரம்பவழகியர் :

அ - கை : இந்திரியங்களைக்கொண்டு சிவனை அறியுமதொழிந்து இந்திரியங்கள்நீங்கி அறியவேணும் என்பானேன்? என்ற சங்கிராந்தவாதியை நோக்கி மேல் அருளிச்செய்கின்றார்.

இ - ள் : பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்ப அரிய பரம்பரனை - இந்திரியங்களால் அறியும் பாச அறிவாலும் இந்திரியங்கள் கூடிலுமொழிந்து அறியாத பசு அறிவாலும் அறிதற்கரிய எல்லாத்துக்கும் மேலாயிருக்கிற பரமேசுவரனை,—

பதிஞானத்தாலே நேசமொடும் உள்ளத்தே நாடி - அந்தப் பதிஞானத்தாலே பதியை விருப்பத்துடனே ஆன்மாவிலே ஆராய்ந்து அறிந்து அவனுடைய திருவடிநிழலிலே நிற்க முன்சொன்ன நிலையாம்,—

பாத நிழல் கீழ் நில்லாதே நீங்கி போதின் - இப்படித் திருவடியின்கீழ் நில்லாமல் வாதனையாலே இந்த நிலையும் நீங்கிப் போதுவன் ஆகில்,—

ஆசை தரும் உலகம் எலாம் அலகை தேர் ஆம் என்று அறிந்து அகல அ நிலையே ஆகும் பின்னும் - ஆசையை உண்டாக்குகிற பிரபஞ்சம் எல்லாம் பேய்த் தேர்போல நிலையல்ல என்று அறிந்து விட்டுநீங்கி முன்சொன்ன நிலை கூடு; இந்தநிலை கூடாதாகில்,—

ஓசை தரும் அஞ்சு எழுத்தை விதிப்படி உச்சரிக்கில் உள்ளத்தே புகுந்து அளிப்பன் ஊனம் எலாம் ஓட - வேதாகமங்களிலே சத்தியமாகச் சொல்லப் பட்ட பஞ்சாட்சரத்தின் உண்மையை ஆசாரியனாலே

அறிந்து உச்சரிக்கில் அந்தப் பரமேசுவரன் தானே குற்றத்தை உடைய பாசங்களெல்லாம் ஓடிப்போம் படி ஆன்மாவுக்குப் பிராணனாய் நின்றநிலையிலே பிரகாசித்து இரட்சியாநிற்பன் என்றவாறு.

*இதனால் சொல்லியது, ஆன்மாக்கள் தீட்சித ரான பின்பு தேகத்திலே நிற்கிறபடியாலே பாச வாதனையைப் பல பிரகாரத்தாலும் சுத்திபண்ணிக் கொள்ளும் முறைமை அறிவித்தது.* (க)

செய்யுள்—292

**வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம்**
**விரும்பசபை வைகரியா தித்திறங்கள் மேலாம்**
**நாதமுடி வானவெல்லாம் பாச ஞானம்**
**நணுகிஆன் மாஇவைகீழ் நாட லாலே**
**காதலினால் நான்பிரமம் என்னு ஞானம்**
**கருதுபசு ஞானமிவ னுடலிற் கட்டுண்(டு)**
**ஓதியுணர்ந் தொன்றென்று உணர்ந்திடலாற் பசுவாம்**
**ஒன்றாகச் சிவனியல்பின் உணர்ந்திடுவன் காணே.**

**1.** மறைஞானசம்பந்தர் :

மேல் பாச பசு ஞானம் இன்ன என்றும், அவை யிற்றைப் பொருள்கொண்ட சத்தப்பிரம வாதியையும் வேதாந்தியையும் மறுத்து உணர்த்துகின்றார்.

**என்பது :** வேதம் சாத்திரம் மிருதி புராணம் கலை ஞானம் விரும்பு அசபை வைகரி ஆதி திறங்கள் மேலாம் நாதம் முடிவான எல்லாம் பாசஞானம் - சுத்தமாயா சென்னியமான வைகரியில் தோன்றிய

நாலு வேதமும் தர்க்கம் முதலிய ஆறு சாத்திரமும் அட்டாதச மிருதியும் அட்டாதச புராணமும் கீதம் முதலிய அறுபத்துநாலு கலைஞானங்களும் விரும்பா நின்ற சர்வத்திரரும் நாடோறும் உச்சரிக்கப்பட்ட அசபாமந்திரமும் வைகரி முதலியதிறப்பாடும் எல்லாத் துக்கும் மேலான நாதம் ஈருக உள்ளன எல்லாமும் பாசஞானமாம்,—

*அஃது எக்காரணுல்? என*

நணுகு ஆனமா ]வை நாடலாலே – இந்தச் சத்தப்பிரமத்தை அறிந்த ஆன்மாவும் கீழேவந்து சுக துக்கமாகிய இருவினைப் பயன்களைப் புசிக்க நாடுகையாலே,—

*இதனைப் பிரதிககிஞ ஏதுவிஞலுப அறிவித்தது என அறிக.*

காதலிஞல் நான் பிரமம் என்னும் ஞானம் கருது பசுஞானம் - வேதாந்தி விருப்பத்திஞலே அநாதி தொட்டு ஆணவாதி பாசோபாதிகளிஞல் பெந்தப் பட்டு அநந்தகாலம் செனன மரண துக்க சாகரத்து அடிபட்டு உழலாநின்ற அந்தகஞன சீவான்மாவாகிய தானே சர்வகாலமும் சர்வோபாதி ரகிதமாய்ச் சுவா தந்திரியமாய் ஒருதன்மைத்தாய் நின்மலஞய் விளங்கா நின்ற சச்சிதானந்தப்பிரமம் நான்தானே என்று அகங் கரித்துக்கொண்டு சொல்லாநின்ற ஞானமும் பசு ஞானம் என்று அறியப்படும்,—

*அஃது எக்காரணுல் என்னில்,*

இவன் உடலில் கட்டுண்டு ஓதி உணர்ந்து ஒன்று ஒன்ற உணர்ந்திடலால் பசு ஆம் - இந்த ஆன்மா வானவன் தனக்கென ஓர்செயலின்மையால் கன்மத் துக்கு ஈடாக ஒருவன் கூட்டப்பட்ட தேகத்தில் கட்டுணப்பட்டுப் பிரத்தியட்ச அநுமானத்தால் அறி யத்தக்க பொருளை அவையிற்றால் ஒருவன் அறிவிக்க அறிந்து அவையிற்றால் அறிய யோக்கியமல்லாத பொருளை ஒருவன் அறிவிக்கச் சாத்திரம் படித்து அந்தச் சாத்திரப்பிரமாணங்கொண்டு அறிந்து இந்திரி யங்கள் எல்லாவற்றையுங்கொண்டு எல்லாவிடயத் தையும் ஏககாலத்திலே தானாக அறியமாட்டாமல் ஒரு இந்திரியம்கொண்டே ஒரு விடயத்தை ஒரு காலத்திலே ஒருவன் அறிவிக்கப் பாசமேலீட்டால் அறிந்து கிஞ்சிக்ஞனாய்ப் பாவநாசனாயிருத்தலால் பசுவாம்,—

*பசுத்துவம் எனகிற மலசமபந்தத்தினாலே பசு எனப் பெயராயிற்று. "பசுப்பசுத்துவம யோகானன முத்தப் பசுருச்சியதே" என்னும பௌட்கரத்தும் அறிக. ஆதலால் இந்தப பசுபோதஙகொண்டு அறிகிற ஞானம் பசுஞானம் எனப பெறும். இப்படிப் பட்ட பசு பாச ஞானம இரண்டும் சிவனை அறிகிற முதஇக்குக் காரணம் அனறு. ஆனால் அதற்குக் காரணம யாது? எனனில்,*

ஒன்றாக சிவன் இயல்பின் உணர்ந்திடுவன் காண் ஏ - அந்தச் சிவன் அநாதியிலே நின்மல சர்வக்ஞன் ஆதலாலே இந்தப் பிரபஞ்சங்களையும் ஆன்மாக்களை யும் அவர்கள் செய்த கன்மபலன்களையும் ஒருகாலத் திலே உள்ளபடி அறிந்து கொடுக்கைக்குத் தான்

சுபாவசித்த சுதந்திரன் ஆதலால் தனக்கு ஒரு கர்த்தா அறிவிக்க அறியாமல் தானே இயல்பாக அறியா நிற்பன் என்றவாறு.

*அதுவே பதிஞானம். அந்தப் பதியினது பிரசாதத்தைப் பெற்ற பக்குவான்மாக்கள் அந்த ஞான திட்டியைக்கொண்டு அவனை அறிந்து முத்தராகா நிற்பர்கள் என்று அறிக.*

*இதற்குப் பிரமாணம் சிந்தியாகமம், நிச்சுவாசம் என அறிக.*

*" சுத்தமாம் சத்தி ஞானச்*
*சுடராகும் சிவமொ ழிந்தச்*
*சத்திதான் இன்றும் முன்னைத்*
*தகவிலா மலங்கள் வாட்டி*
*அத்தனை அருளும் எங்கும்*
*அடைந்திடும் இருள் அகற்றி*
*வைத்திடும் இரவி காட்டும்*
*வளரொளி போல்ம கிழ்ந்தே "*

*—சிவப்பிரகாசம் 75.*

*எனனும் சார்புநூலினும் அறிக. மேல் பதிஞானம் உணர்த்துகின்றார்; ஆண்டும் காண்க.*

## 2. நிரம்பவழகியர் :

அ - கை : இப்படிச் சொல்லப்பட்ட பாசஞானம் பசுஞானம், பதிஞானம் என்னும் மூன்றினது முறைமையும் எப்படி? என்ற மாணுக்கனை நோக்கி அருளிச்செய்கின்றார்.

இ - ள் : வேதம் சாத்திரம் மிருதி புராணம் ஞானம் விரும்பு அசபை வைகரி ஆதி திறங்கள்

மேலாம் நாதம் முடிவான எலாம் பாசஞானம் - நாலு வேதங்களும் பல சாத்திரங்களும் மிருதி புராணங் களும் பல கலைஞானங்களும் விரும்பத்தக்க அசபை யும் வைகரி முதலாக நாலு வாக்குகளும் எல்லாத்துக் கும் மேலான நாதம் ஈருக உண்டாகப்பட்ட இவை எல்லாம் பாசஞானமாம்,—

*இவையிற்றை எல்லாம பாசஞானம் என்று சொல்லவேண்டியது.*

ற்வை நாடலால் ஏ -

ஆன்மா இவையிற்றைப் பொருந்தி அதோமாயையில் உண்டாகிய திரிவித கரணங்களினுல் ஆராய்ந்து அறிகையினுலே,—

காதலினுல் நான் பிரமம் என்னும் ஞானம் கருது பசுஞானம் ஆகும் - எல்லாத் தத்துவங்களும் கழன்ற விடத்து ஆசையின் மிகுதியினுலே நானே கர்த்தா என்று சொல்லப்பட்ட அறிவு சுட்டறியும் பசுஞான மாகும்,—

*அது எங்ஙனே ? என்னில்,*

இவன் உடலில் கட்( ண்டு ஓதி உணர்ந்து ஒன்று ஒன்ற உணர்ந்திடலால் பசு ஆம் - இந்த ஆன்மா கன்மத்துக்கு ஈடாக ஒவ்வொரு தேகங்களிலே கட்டுப் பட்டு ஒன்றை அறியுமிடத்து ஒருவராலே சிலவற் றைக் கற்று அறிந்தும் விடயங்களை அறியும் அவ தரத்து ஒவ்வோர் இந்திரியங்களினுலே ஒவ்வொரு விடயங்களை அறிந்து நிற்கையால் இவனைப் பசு என்று சொல்லப்படும்,—

ஒன்றாக சிவன் இயல்பில் உணர்ந்திடுவன் காண் ஏ - இப்படியன்றியே பரமேசுவரன் தன்னுடைய ஞானத்தினாலே சர்வத்தையும் ஏககாலத்திலே ஒருவர் அறியாமல் தனக்குள்ள இயல்பாகத் தானே அறிந்து நிற்பன் என்று அறிவாயாக என்றவாறு.

*இதனால் சொல்லியது வேத சாத்திர முதலா னவை எல்லாம் ஆன்மபோதத்தினால் அறியப்படு கையினால் பாசஞானம் என்றும், கருவிகளெல்லாம் கழன்ற இடத்து நானே கர்த்தா என்னும் அறிவு ஒருசரீரத்திலே கூடிநின்று ஒன்று ஒன்றாக அறிகை யினால் பசுஞானம் என்றும் பதிஅறிவானது ஒருத்தர் அறியாமல் சர்வத்தையும் ஒருகாலத்திலேதானே அறிகையினாலே பதிஞானம் என்னும் முறைமையும் அறிவித்தது.* (உ)

செய்யுள்—293

**கரணங்கள் கெடவிருக்கை முத்தியா மென்னில்**
**கதியாகும் சிலைமுட்டை கருமரத்தின் உயிர்கள்**
**மரணங்கொண் டிடஉறங்க மயங்கிமூர்ச் சிக்க**
**வாயுத்தம் பனைபண்ண வல்விடத்தை அடையச்**
**சரணங்கள் புகுநிழல்போல் தனையடையுஞ் சமாதி**
**தவிராது மலமிதுவும் பசுஞான மாகும்**
**அரணங்க ளெரித்தவன்தன் அடியையறி விறந்தங்(கு)**
**அறிந்திடீர் செறிந்ததுகள் அகற்றி டீரே.**

**1.** மறைஞானசம்பந்தர் :

பாடாணவாதி சுகதுக்கமற்றுக் கரண சூனியமாய் ஒன்றையும் அறியாமல் பாடாணம்போல் கிடப்பதே

முத்தியன்றிப் பதிஞானத்தால் பதியைத் தெரிசிப்பது முத்தி என்பது அடாதது என்ன, அவனை மறுத்து உணர்த்துகின்றார்.

**என்பது:** கரணங்கள் கெட இருக்கை முத்தி ஆம் என்னில் - கருவிகரணங்கள் சீவியாமல் கெட்டிருப்பதே முத்திகாணும் என்று நீ சொல்வாயாகில்,–

கதி ஆகும் சினை முட்டை கரு மரத்தின் உயிர்கள் மரணம் கொண்டிட உறங்க மயங்கி மூர்ச்சிக்க வாயுத்தம்பனை பண்ண வல்விடத்தை அடைய - அப்பொழுது மீனிடத்தில் தோன்றிய சினைக்கண்ணும் அண்டசத்தின்கண்ணும் உற்பீசத்தில் தோன்றிய பெரியமரத்தின்கண்ணும் உண்டாகிய ஆன்மவர்க்கம் எல்லாம் மோட்சம் அடைந்தாகவேணும்; அஃதன்றி, தேகம் விட்டவரும் நித்திரைபண்ணுமவரும் சன்னிவாதம் முதலியவற்றால் மயங்கிக்கிடந்தவரும் மரம் முதலியவற்றினின்றும் விழுந்து மூர்ச்சித்துக் கிடந்தவரும் யோக சாமர்த்தியத்தாலே பிராணவாயுவைத் தம்பித்துக்கொண்டிருந்தவரும் பாம்புகடி முதலான வல்விட மேலீட்டினாலே அறிவின்றிக் கிடந்தவர்களுமாக இவர்கள் எல்லாருக்கும் கரணங்கள் சீவியாதிருக்கையால் இவர்களும் மோட்சமடைந்தவர்களாக வேணும்; அப்படியில்லாமையான் நீ சொன்னது முத்தியன்று.—

சரணங்கள் புகு நிழல் போல் தனை அடையும் சமாதி - உதித்து ஒரு நாழிகைக்கு எண்பத்தோரடியாய்த் தூரநின்ற நிழல் பொழுதேறிக் காலம்செல்லச் செல்லக் குறைந்துவந்து மத்தியானகாலத்தில் தான் வைத்த அடியிலே நிழல் அடங்கி நின்றாற்போலக்

கருவிகரணங்கள் அனைத்தும்கூட இறந்து நிற்கின்ற மையால் உள்ள ஆன்ம ஞானத்தைப் பொருந்தி அவ்வவற்றின் உண்மைகளை உணர்ந்து அவ்வவற் றின்கண் நின்று பிரிந்து போந்து தன்னுண்மையின் கண் அடங்கித் தளராதிருத்தலே முத்தியாம் என்று நீ சொல்லில்,—

தவிராது மலம் இதுவும் பசுஞானம் ஆகும் - முன்சொன்ன வேதாந்தஞானம்போல நீ இப்படிச் சொல்லுகின்ற இதுவும் பசுஞானமாய்விடும்.—

*ஆகவே ஆணவமலமும் விட்டுநீங்காது; ஆகை யால், பரமுத்தி உண்டாகமாட்டாது. ஆனால், அஃது அடையும் முறை எப்படி? என்னில,*

அரணங்கள் எரித்தவன் தன் அடியை அறிவு இறந்து அங்கு அறிந்திடீர் - திரிபுரதகனம் பண்ணின சிவனது சீபாதத்தை ஆன்மபோதத்தை விட்டு அந்தச் சிவனது ஞானத்துடன் கூடிச் சாக்கிராதீத சமாதியை அடைந்து தெரிசியுங்கோள்.—

செறிந்த துகள் அகற்றிடீர் ஏ - பின்பு அநாதி யிலே செறிந்து போதாநின்ற ஆணவாதி குற்றங்க ளாகிய வாசனாமலங்களையும் போக்குங்கோள்; அவை போனவாறே சாயுச்சியமும் அடையலாம் என்றவாறு.

*ஆதலால், பாச பசு ஞானத்தை விட்டு பதி ஞானத்தால் பதியைத் தெரிசிக்க என்பதாயிற்று என அறிக.*

*'கதியாகும்' என்ற சொல்லை எவ்விடத்தும் கூட்டிப் பொருள் கூறுக.*

*இதுவும் என்ற உம்மை எதிரது தழீஇய எச்ச வும்மை. ஏகாரம்: ஈற்றசை.*

*இதற்குப் பிரமாணம் சிந்தியாகமம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** கருவிகள் எல்லாம் நீங்கி ஆன்மா ஒன்றும் அறியாமல் பாடாணம்போலக் கிடக்கு மதுவே முத்தி என்ற பாடாணவாதியை நோக்கி அருளிச்செய்கின்றார்.

**இ - ள் :** கரணங்கள் கெட இருக்கை முத்தியாம் என்னில் - அந்தக்கரணங்கள் கெட்டுப்போய் ஒன்றும் அறியாமலிருக்கிறதே மோட்சம் என்று சொல்லில்,—

கதி ஆகும் சினை முட்டை கரு மரத்தின் உயிர்கள் - சினையிலும் முட்டையிலும் பெரிய மரத்திலும் உள்ள பிராணிகளுக்கெல்லாம் மோட்சமும் உண்டாகவேணும்; இது அன்றியும்,—

மரணம் கொண்டிட - ஆன்மா தேகத்தை விட்டபொழுதும்,—

உறங்க - நித்திரைகொண்ட அவதரத்தும்,—

மயங்கி மூர்ச்சிக்க - மிகுந்த மயக்கத்தினாலே மூர்ச்சைவந்தவிடத்தும்,—

வாயுத்தம்பனை பண்ண - பிராணவாயு இயங் தம்பித்த இடத்தும்,—

வல் விடத்தை அடைய - தீர்த்தற்கு அரிய வலிய விடத்தைப் பொருந்தின இடத்து முத்தி உண்டாக வேண்டும்; அவ்விடங்களில் முத்தியில்லாமல் இருக் கையால்,—

சரணங்கள் புகு நிழல்போல் தனை அடையும் சமாதி - மத்தியானகாலத்தில் அடிக்குள் அடங்கின நிழல்போல ஆன்மா தன்னைப் பொருள் என்று அறிகிற இடத்திலும்,—

தவிராது மலம் - ஆணவமலம் விட்டுநீங்காது,—

இதுவும் பசுஞானம் ஆகும் - இது பசுஞானம்,—

*முத்தியைப் பெறுகிறபடி எப்படி ? என்னில்,*

அரணங்கள் எரித்தவன் தன் அடியை அறிவு இறந்து அங்கு அறிந்திடீர் செறிந்த துகள் அகற்றிடீர் ஏ - திரிபுரதகனம் பண்ணின பரமேசுவரனுடைய சிபாதங்களைத் தற்போதத்தை விட்டு நின்ற இடத் திலே ஆசாரியனாலே அந்த உண்மையைத் தரிசித்து அந்தத் தரிசித்த ஞானப்பிரகாசத்தினாலே அநாதியே சம்பந்தித்துக்கொண்டு நிற்கிற மலமாயா கன்மங்க ளில் உண்டாகிய குற்றங்களைப்போக்கீர் என்றவாறு.

*'செறிந்த துகள அகற்றிடீர்' எனறது க்ஷேமச் சொல். 'கரணங்கள் கெட இருக்கை முத்தி' என்ற பாடாணவாதியை மறுத்தற்குப் பிரமாணம:*

*" கரணு பாவம் மரணம் கருமரம்*
*ஏய்ந்தவர் முத்தி சேர்ந்தவ ரன்றே*

அனைய கதிக்கோர் முனைவரும் வேண்டா
தனிதரு துயரம் எனும்இது திடமே"

—சங்கற்ப - பாடாணவாதி நிராகரணம்.

என்னுமதும கண்டுகொள்க.

இதனுல் சொல்லியது, கரணங்கள ஒடுங்கின இடமே முததி எனற பாடாணவாதியை நோக்கிக கரணஙகள ஒடுஙகின இடம முத்தி என்னில்? சினை முதல் வல்விடத்தைப் பொருந்தினவர்கள் ஈருகச் சொல்லப்பட்ட எல்லாத்துக்கும் முத்தி உண்டாக வேணும எனறும், அது இல்லாதபடியாலே கரணங்கள நீஙகின இடம முததி ஆகாது எனறும, சிவனுடைய ஞானத்துடனே கூடி ஆன்மபோதம சிவியாமல் அந்தஞானததாலே சிவனுடைய திருவடியைப் பொருந்தினுலொழிந்து மலமும நீங்காது முததியும உண்டாகாது எனனும முறைமையும அறிவித்தது. (ரு.)

செய்யுள்—294

சிவனைஅவன் திருவடிஞா னத்தாற் சேரச்
செப்புவது செயல்வாக்குச் சிந்தை எல்லாம்
அவனையனு காவென்றும் ஆத லானும்
அவனடிஅவ் வொளிஞான மாத லானும்
இவனும்யான் துவக்குதிரம் இறைச்சி மேதை
என்புமச்சை சுக்கிலமோ இந்திரியக் கொத்தோ
அவமகல எனையறியேன் எனுமையம் அகல
அடிகாட்டி ஆன்மாவைக் காட்ட லானும்.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் அகங்காரவாதி, சிவனை அந்தக்கரணங்களால் அறிவதாயிருக்கச் சிவஞானத்தால் அறியவேண்டும் என்றது என்? என்று வினவ, அவனைக்குறித்து உணர்த்துகின்றார்.

என்பது : சிவனை அவன் திருவடி ஞானத்தால் சேர செப்புவது - சிவனை மனம் முதலிய கரணங் களால் அறிந்து அடையப்படாது என்றும் அவனது திருவடியாகிய சிவஞானத்தால் அவனை அறிந்து அடையவேண்டும் என்றும் வேதாகமங்கள் கூறு வது யாது ? என்னில்,—

செயல் வாக்கு சிந்தை எல்லாம் அவனை அணுகா என்றும் - அவன் வாக்கு மனாதீதன் ஆதலாலே எப் பொழுதும் மனம் வாக்குக் காயங்களால் அறிந்து அடையப்படான்,—

*'' தத்துவா தீதனெனச் சாற்றுமறை யுஞ்சிவனைத்*
*தத்துவம் காணுமெங்ஙன் சாற்று ''*

*—மறை - சங்கற்ப - சங்கிராந்தவாதி நிராகரணம் 21.*

*என னுட*

*'' கரணங்க ளெல்லாம் கடந்துநின்ற கறைமிடற்றன்*
*சரணங்க ளேசென்று சார்தலுமே தானெனக்கு*
*மரணம் பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுத்த*
*கருணைக் கடலுக்கே சென்றூதாய்க் கோத்தும்பீ ''*

*—திருக்கோத்தும்பி - 9.*

*என்னும் திருவாசகச் சொல்லானுா,*

*" சொல்லாலும் மனனாலும் அறியா வொன்றைச்*
*சொல்லாலே தோற்றுவிக்கத் துணியும் சொல்லும்*
*புல்லாலே எரிசுடுதல் போலும் போலும்*
*போலாதேல் புகையிலெழு கனலே போலும் "*

*எனனும் அஞ்ஞவதைப்பரணியானும அறிக.*

ஆதலானும் - இன்னதன்மை உடையவன் ஆதலாலும், —

அவன் அடி அ ஒளிஞானம் ஆதலானும் – மறுதி கனப்பிரகாசமாய் அவனது திருவடி விளங்காநின்ற ஞானப்பிரகாசமாயிருக்கையாலும்.—

இவனும் யான் துவக்கு உதிரம் இறைச்சி மேதை என்பு மச்சை சுக்கிலமோ இந்திரியக்கொத்தோ அவம் அகல எனை அறியேன் எனும் 'ஐயம் அகல – இந்த ஆன்மாவும் யான் துவக்கு உதிரம் முதலிய சத்த தாதுக்களுமோ அன்றி இந்திரியசமுகங்களோ பிறவிக் கிலேசமானது என்னை விட்டு நீங்க இவையிற்றில் யாது எனில் தனது சொரூபத்தை அறிகிறேனில்லை என்னும் சந்தேகமாகிய மயக்கம் தீர்ந்து நிற்கும்படி அவனுக்கு.—

அடி காட்டி ஆன்மாவை காட்டலானும் – தனது திருவடிஞானத்தைப் பிரகாசிப்பித்துத் தன்னை யும் காட்டி ஆன்மாவையும் உணர்த்திநிற்கையாலும் என்றவாறு.

*" ஊனக்கண் பாசம் உணரா துயிர்க்குயிரை*
*ஞானக்கண் ணுலுளத்து நாடு "*

*—பதிபசுபாசப்பனுவல் - போதக 4.*

*என்னும் திருவாக்கினும்,*

" நாடியோ என்போ நரம்புசீக் கியா "
—சிவஞானபோதம்: சூத் 9, வெண்பா 1.

எனா னும் முனனூலினும் காண்க.

ஆதலால் இந்த மூன்று ஏதுக்களினாலும, சிவனைச் சிவஞானத்தினால் அறிகிறதல்லது மனம முதலியவற்றால் அறியபபடாது.

இதற்குப பிரமாணம் கிரணம், காமிகம் என அறிக.

2. நிரம்பவழகியர் :

அ - கை : சிவனுடைய ஞானத்தாலே சிவனை அறியவேணும் என்றது என் நம்பு? என்ற சங்கிராந்த வாதியை நோக்கி அருளிச்செய்கின்றார்.

இ - ள் : சிவனை அவன் திருவடி ஞானத்தால் சேர செப்புவது - பரமேசுவரனை அவனுடைய சீபாதமாகிய ஞானத்தாலே கூடவேணும் என்று சொன்னது.—

அது எப்படி ? என்று நீ கேட்கில்,

செயல் வாக்கு சிந்தை எல்லாம் அவனை அணுகா என்றும் ஆதலானும் அவன் அடி அ ஒளி ஞானம் ஆதலானும் - அவனுடைய சீபாதமாகிய அந்த ஞானம் விட்டுவிளங்காநின்ற ஞானம் ஆகையாலும் மனோ வாக்குக் காயங்களால் அவனைக் கிட்டவும் செல்லவும் நினைக்கவும் ஒண்ணாது ஆகையாலும், இது அன்றியும் ஆன்மா தன்னையும் இந்திரியங்களால் அறியப்படாது; அது எப்படி ? என்னில்,—

இவனும் யான் துவக்கு உதிரம் இறைச்சி மேதை என்பு மச்சை சுக்கிலமோ இந்திரியக் கொத்தோ - ஆன்மாவானது தோலோ இரத்தமோ மாமிசமோ நிணமோ எலும்போ மூளேயோ சுக்கிலமோ இந்திரியக் கூட்டமோ என்று,—

பவம் அகல எனே அறியேன் எனும் ஐயம் அகல - செனனங்களெல்லாம் விட்டுநீங்கும்படி என்னே அ ]ன்றிலேன் என்கிற சந்தேகம் தீர,—

அடி காட்டி ஆன்மாவை காட்டலானும் - தனது ஞானத்தினுலே தன்னுடைய திருவடியும் தரிசிப்பித்து, ஆன்மாவையும் தரிசிப்பிக்கையால் பாச ஞானம் அறியாது; ஆகையால் பதிஞானமே எல் லாத்தையும் அறியும் என்றவாறு.

*இதற்குப பிரமாணம :*

*'' சத்த பரிச ரூப ரச நறை*
*எத்திறத் தினதருள் இயம்புக அன்றியும்*
*நிறைந்து நீயாய் நின்றனே யேனும்*
*மறைந்தைம் புலனுய் வாராய் என்றும்*
*கரணம் எல்லாம் கடந்தனே என்றும்*
*மரணமை யைந்தின் அப்புறத் தென்றும்*
*முன்னருட் டலேவர் பன்னினர் எனவும்*
*இனேயவை யொழிய அறிகுவ தெவ்வா(று)*
*என்ற நிற்கலிக் கொன்றிய இன்பம்*
*கூறுதல் தகுமருட் பேறினே யன்றே ''*

*—சங்கற்ப - சங்கிரா ந்தவாதி நிராகரணம்.*

*என்றும,*

*' நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ*
*தேடி எனேயறியேன் தேர்ந்தவகை - நாடிஅரன்*

தன்னாலே தன்னையும் கண்டுதமைக் காணார்
என்னும் எனஅறிவார் இன்று ''

—சிவஞானபோதம்: சூத் - 9 - வெண்பா - 1.

என்னுமதும் கண்டுகொள்க.

இதனால் சொல்லியது, பாச ஞானத்தினால் பாசத்தை அறியுமதொழிந்து பதியை அறியாது என்றும், பதிஞானத்தினாலே பதியை அறியவேணும் என்னும் முறைமையும அறிவித்தது. (௪)

செய்யுள்—295

கண்டிடுங்கண் தனைக்காணா கரணம் காணா
கரணங்கள் தமைக்காணா உயிருங் காணா
உண்டியமர் உயிர்தானுந் தன்னைக் காணா(து)
உயிர்க்குயிராம் ஒருவனையும் காணா தாகும்
கண்டசிவன் தனைக்காட்டி உயிரும் காட்டிக்
கண்ணாகிக் கரணங்கள் காணாமல் நிற்பன்
கொண்டரனை உளத்திற்கண் டடிகூடிற் பாசம்
கூடாது கூடிடினும் குறித்தடியின் நிறுத்தே.

1. மறைஞானசம்பந்தர்:

மேல் சிவனைப் பாசஞானம் முதலியவற்றால் அறியப்படாது என்பதூஉம், அவையிற்றை அறிந்திருப்பன் என்பதூஉம் உணர்த்துகின்றார்.

**என்பது:** கண்டிடும் கண் தனை காணா - விசுவத்தில் பதார்த்தங்களையெல்லாம் காணாநிற்கின்ற கண்களானவை தம்மை அறியமாட்டா,—

கரணம் காட்டாகிய மனதி
களையும் அறியமாட்டா,

கரணங்கள் தமை காணு உயிரும் காணு – சட்சு வாதிகளுக்குக் காட்டாகிய கரணங்களும் தம்மை அறியமாட்டா; தமக்குக் காட்டாகிய ஆன்மாவையும் அறியமாட்டா,—

உண்டி அமர் உயிர் தானும் தன்னை காணுது உயிர்க்கு உயிர் ஆம் ஒருவனையும் காணுதாகும் – இந்தக் கருவிகரணுதிகளைக்கொண்டு உணவாகிய சுக துக்க மோகங்களைப் புசிக்கும் ஆன்மாவும் தன்னை அறியமாட்டாது; அந்த ஆன்மாவும் தனக்கு மேலு மாய் உயிருக்கு உயிருமாய் உணர்த்தும் கர்த்தாவை யும் அறியமாட்டாது; ஆதலால் இப்படி ஒன்றுக்கு ஒன்று நூனவிருத்தியும் அதிக விருத்தியுமாய்க் காரியப்படும் முறைமையினையும் அறிந்து,—

கண்ட சிவன் தனை காட்டி உயிரும் காட்டி கண் ஆகி கரணங்கள் காணுமல் நிற்பன் - இப்படி எல்லா வற்றையும் அறிந்து எல்லாத்துக்கு மேலாய் எல்லாத் தையும் வியாபித்திருக்கின்ற சிவன் பக்குவான்மாக்க ளுக்குத் தன்னுடைய சொரூபத்தையும் காட்டி ஆன்ம சொரூபத்தையும் தெரிசிப்பித்து ஆன்மாத் தன்னைத் தரிசித்தற்குக் கண்ணுய் அக்கரணங்களிடத் தினும் இந்திரியங்களிடத்தினும் அணுப்பிரவிட்டனுய் வியாபித்து அவைகளால் அறியப்படாமல்நிற்பன்,—

கொண்டு அரனை உளத்தில் கண்டு அடி கூடில் பாசம் கூடாது - சிவனது உண்மை இப்படி என்று கொண்டு தன்னிடத்தில் கண்டு மயக்கவிகற்பமின்றி

அவனது சீபாதங்களை எப்பொழுதும் நினைந்திருக்கில் ஆணவாதி பாசங்கள் விட்டுநீங்கும்.—

கூடிடினும் குறிப்படியில் நிறுத்தே - அப் பாசங்கள் வந்து மேல் கூடிற்றேயாயினும் ஆசாரியன் உபதேசித்தபடி. முன்புபோல நிற்கில் அந்தப் பாசங்கள் வந்து அடரா என்றவாறு.

*இப்படிச் சொல்லவே சிவன் ஆன்மாக்களுக்கு உபகரிக்கும் முறைமை உணர்த்தியதாயிற்று.*

*இதற்குப் பிரமாணம் காலோத்தரம், வாயவ்விய சங்கிதை என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை:** அந்த முத்தியில் பதியும் பசுவும் தரிசனப்பட்டதே உண்டாகில் இந்தப் பேதத்திலும் தரிசனப்பட வேண்டாவோ என்ற பாடாணவாதியை நோக்கி அருளிச்செய்கின்றார்.

**இ - ள்:** கண்டிடும் கண் தனை காணு - அவயவங்களைக் காண்கிற கண் தன்னைக் காணமாட்டாது.—

கரணம் காணு - அது அன்றியும் அந்தக்கரணங்கள் தாம் எல்லாவிடயத்துக்கும் அறிவாய் நிற்பினும் தன்னை அறியமாட்டாது,—

உயிரும் காணாது - அந்தக்கரணங்களைக் காரியப்படுத்தி நிற்கிற பிராணவாயுவும் தன்னைத்தான் காணமாட்டாது.—

உண்டி அமர் உயிர் தானும் தன்னை காணுது - கன்மத்துக்கு ஈடாகச் சரீரத்தைப் பொருந்திச் சுக துக்கங்களை அநுபவிக்கிற ஆன்மாவும் தன்னைத்தான் காணமாட்டாது,—

உயிர்க்கு உயிராம் ஒருவனையும் காணுதாகும் - தனக்குப் பிராணனுய் நின்று உணர்த்துகிற பரமே சுவரனையும் ஆன்மா காணமாட்டாது,—

*ஆனுல் அந்தச்சிவனை அறியுமபடி என? எனனில்,*

கண்ட சிவன் தனை காட்டி உயிரும் காட்டி - எல்லாத்தையும் அறியத்தக்க சிவன் பேதத்தில் இந்த ஆன்மாவுக்குத் தோன்ருமல் நின்று முத்தியில் தன்னை யும் காட்டி இந்த ஆன்மாவையும் காட்டி,—

கண் ஆகி கரணங்கள் காணுமல் நிற்பன் - சிவன் தன்னைக் காணுகைக்கு ஆன்மாவுக்குத் திருட்டியு மாய்க் கரணங்களால் அறியுமிடத்துத் தோன்ருமலும் நிற்பன்,—

*அந்தக்கரணங்களாகிய பாசஞானம நீங்கும்படி எப்படி? எனற மாணுக்கனை நோக்கி அருளிச்செய் கினருர்:*

கொண்டு அரனை உளத்தில் கண்டு அடி கூடில் பாசம் கூடாது - அப்படி வாதனை மேலிட்டால் தனக்குப் பிராணனுய் நிற்கிற சிவனை அவனுடைய ஞானத்திஞலே தன்னிடத்திலே கண்டுகொண்டு அவ னுடைய சீபாதத்தைப் பொருந்தில் மயக்க விகற்பங் கள் பொருந்தாது,—

கூடிடினும் குறித்து அடியின் நிறுத்தே - அந்த மயக்க விகற்பங்கள் கூடிற்றுயினும் ஞாதிரு என்கிற தன்மை பொய்ஞானமாய் நிற்கவே முற்பட்ட கூடும் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம:*

> *'' காட்டிய கண்ணே தனைக்காணு கீ*
> *காட்டிய உள்ளத்தைக் கண்காணு - காட்டிய*
> *உள்ளந் தனைக்காணு உள்ளத்தின் கண்ணுய*
> *கள்ளன்ருன் உள்ளத்தில் காண் ''*
>
> *—சிவஞானபோதம்: சூத் - 9 வெண்பா - 2.*

*எனனுமதும கண்டுகொள்க.*

*இதனல் சொல்லியது, பேதத்தில் மலசம்பந்த மாய் இருக்கையால் பதியையும பசுவையும தரிசிக்கப் பட்டது இல்லை என்றும, முத்தியில் அந்த மலம நீங்குகையால் அவ்விரண்டையும தரிசிக்கபபடும் என்றும முறைமையும அறிவித்தது.*

## செய்யுள்—296

குறித்தடியின் நின்றட்ட குணமெட்டுச் சித்தி
 கோகனதன் முதல்வாழ்வு குலவுபத மெல்லாம்
வெறுத்துநெறி அறுவகையும் மேலொடுகீ ழடங்க
 வெறும்பொ யென நினைந்திருக்க மேலொடுகீழில்லான்
நிறுத்துவதோர் குணமில்லான் தன்னையொரு வர்க்கும்
 நினைப்பரியான் ஒன்றுமிலான் நேர்படவந் துள்ளே
பொறுப்பரிய பேரன்பை அருளியதன் வழியே
 புகுந்திடுவன் எங்குமிலாப் போகத்தைப் புரிந்தே.

**1.** மறைஞானசம்பந்தர் :

மேற்சொல்லிய முறைமையின் நிலைபெற்று நிற்கும் ஞாதாக்களுக்கு அநுக்கிரகிக்கும் முறைமை உணர்த்துகின்றார்.

என்பது : குறித்து அடியில் நின்று - ஆசாரியன் உபதேசித்தபடி அறிந்து அந்தப்படி சிவனுடைய திருவடியில் பொருந்திநின்று.—

அட்டகுணம் எட்டு சித்தி - அட்டகுணங்களும் அட்டமாசித்திகளும்,—

*'' தோற்று மனந்த ஞானத் தோடனந்த தரிசனமும்*
*தோற்று மனந்த வீரத் தோடனந்த சுகத்துடனே*
*ஆற்றிய நாமமின்மை கோத்திர மின்மை ஆயுவின்மை*
*ஏற்றிய தோயழி யாஇயல் பென்ப ரேந்திழையே ''*

*எனறுர் பார்த்திபமுடையார்.*

*'' அணுவினுநுண் ணுருவுகொளல் அணிமாவா மவற்றின்*
*அதிவேகத் தியங்கியும்தோய் வற்றவுடல் லகிமா*
*திணியபெரு வரையெனமெய் சிறப்புறுகை மகிமா*
*சிந்தித்த பலமெவையும் செறிந்துறுகை பிராத்தி*
*பிணைவிழியா ராயிரவ ரொடும்புணர்ச்சி பெறுகை*
*பிரகாமி யீசிதைமா வலியுமடி பேணி*
*மணமலர்போ லெவராலும் வாஞ்சிக்கப் படுகை*
*வசிவசிதை வலியாரால் தடுப்பரிய வாழ்வே ''*

*என்றார் எமது குரவர் என அறிக.*

கோகனகன் முதல் வாழ்வு குலவு பதம் எல்லாம் வெறுத்து - பிரம விட்டுணு இந்திராதியர் அநுபவிக்கும் ஐசுவரியபோகம் முற்றும் கொண்டாடப்பட்ட

பதங்களில் உள்ளார் போகங்கள் எல்லாவற்றையும் உவர்த்து,—

நெறி அறுவகையும் மேலொடு கீழ் அடங்க வெறும் பொய் என நினைந்திருக்க - மேலும் கீழும் எங்கும் உள்ள ஆறத்துவா என்ற எல்லாவற்றையும் பந்தம் என்று வெறுத்து இவை போகவேது ஆகையால் சுத்தப்பொய் என்று கருதி ஆசாரியன் உபதேசித்த நிட்டையைப்பொருந்தி யிருக்கவே அப்பொழுது,—

மேலொடு கீழ் இல்லான் நிறுத்துவது ஓர் குணம் இல்லான் தன்னை ஒருவர்க்கும் நினைப்ப அரியான் ஒன்றும் இலான் - தான் பூரணன் ஆதலால் தனக்கு ஆதியும் அந்தமும் இல்லாதவனுமாய்த் தான் சுத்தன் ஆதலால் தன்கண் வைக்கப்படுவதொரு வன்னரூபங் களும் சத்துவாதி குணங்களும் இல்லாதவனுமாய் வாக்கு மனதீதன் ஆதலானும் பிரமாணங்களைக் கடந்து உண்மை இன்னபடி என்று அறிதற்கு அரிய னுமாய் ஆதித்தன் எப்படித் தனக்கு ஒன்றை விரும்பிச் செய்யாது உலகர்க்கு உபகரிக்கும் முறை மைபோல் இவனும் திருத்தனாய் ஒருகுறையுமின்றி இருக்கிறவன் ஆதலால் தனக்கென வேறொரு கைம் மாறு கருதாது ஆன்மாக்கட்கு உபகாரம் செய்யா ¤மாய் இருக்கிற சிறப்பையுடைய சிவன்

நேர்பட வந்து உள்ளே பொறுப்ப அரிய பேரன்பை அருளி அதன் வழியே புகுந்திடுவன் - இச் சிறப்பினையுடைய சிவன் இந்த முத்தான்மாவை அநுக் கிரகம் செய்தற்பொருட்டாக வந்து அவனிடத்திலே

தரித்தற்கு அரிதாம் மிகுந்த அன்பைப் பிரகாசிப்பித்து அவ் அன்பின்வழியே அவ்வான்மாவிடத்தில் சென் றேவன்,—

எங்கும் இலா போகத்தை புரிந்தே - எவ்விடத்து மின்றி அவனிடத்து உண்டான சுவானந்தானுபூதியை விளக்கித் திளைப்பிப்பன் என்றவாறு.

*சிவன சர்வதந்திர பரிபூரணன ஆதலால் 'புகுந் திடுவன' என்றது விளங்கித் தோனறிடுவன எனக் கொளக. 'எங்குமிலாப் போகத்தை' என்றது அரி பிரமாதி தேவர்களிடத்தினும் மற்றும எவ்விடத்தும உளள உத்கிருட்டமான பேரிடததுமில்லாத போகம எனறறிக.*

*'' செங்க ணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்*
*எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதா ''*

*—திருவாசகம் - திருவெம்பாவை - **17.***

*எனனும திருவாக்கினும் தெளிக. அவர்களிடத்து அநாதியேயுளள இனபத்தை இல்லாதது எனக் கூறியது என்னை? எனின், அவ்வின்பம் அவர்பால் அநாதியே உளளதாயினும அவரால் பெற்று அநுபவித்தற்கு அரியது ஆதலால் என்க.*

*இதற்குப் பிரமாணம சிவதருமோத்தரம், சர்வ ஞானோத்தரம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** இப்படி சிவ பரம் என்று இரண்டு இல்லை எல்லாம் சிவமே என்ற பரிணமவாதியை

நோக்கிச் சிவன் நின்மலன் என்றும், ஆன்மா மல சம்பந்தியாய் இருப்பன் என்றும், அது நீங்கினுல் ஒழிந்து சிவதரிசனம் உண்டாகாது என்றும் மேல் அருளிச்செய்கின்ருர்.

இ - ள்: குறித்து அடியின் நின்று - ஆசாரியன் அறிவித்தபடியே அறிந்து பரமேசுவரனுடைய திரு வடியிலே தற்போதம் சீவியாமல் அந்த ஞானமேயாய் நின்று,—

அட்ட குணம் எட்டு சித்தி - நற்குணங்க ளாகச்சொல்லப்பட்ட எட்டுக்குணங்களும் நுண்மை, பெருமை, அறவும் நொய்தாயிருத்தல், மிகவும்கனத் திருத்தல், விண்மிசையேகல், பாரம் மெய்சேர்தல், வேண்டின உருவைக் கொள்ளுதல், எங்கும்தானே யாய் நிற்றல் என்னும் எட்டுச்சித்தியும்,—

கோகனகன் முதல் வாழ்வு குலவு பதம் எல்லாம் வெறுத்து - பிரமாவினுடைய ஐசுவரியம் முதலாக உள்ள ஐசுவரியங்களையும் கொண்டாடப்பட்ட பதங் களையும் உபேட்சித்து,—

நெறி அறுவகையும் மேலொடு கீழ் அடங்க - கீழும் மேலும் எங்கும் நிறைந்து நிற்கத்தக்க சடத் துவாக்களின் வழியடங்கலும்,—

வெறும் பொய் என நினைந்து இருக்க - இங்ஙனம் சொல்லப்பட்டவை எல்லாம் சுத்தவசத்தியம் என்று இவையிற்றைச் சிவஞானத்தாலே அறிந்து அந்த ஞானமாய் நிற்கவே,—

மேலொடு கீழ் இல்லான் - முதல் நடுவு இறுதி மூன்றும் இல்லாதவனுமாய்.—

நிறுத்துவது ஓர் குணம் இல்லான் - சொல்லப் பட்டதொருகுணங்களும் இல்லாத நிர்க்குணனுமாய்.–

தன்னை ஒருவர்க்கும் நினைப்ப அரியான் - தன் உண்மையைத் தான் அறிவிக்க அறியும்தொழிந்து ஒருவராலும் அறியப்படாதவனுமாய்,—

ஒன்றும் இலான் - சர்வமும் தானாய் நிற்கச் செய்தே ஒன்றும் தான் அல்லனுமாய் நிற்கிறவன்,—

நேர்பட வந்து உள்ளே பொறுப்ப அரிய பேரன்பை அருளி - வேதத்தில் தோன்றாமல் அப்பிர காசமாய் நின்ற முதல் தானே முத்தியில் பிரகாசித்து இவனுக்குள்ளே பொறுத்தற்கு அரிய மிகுந்த பத்தி யையும் உண்டாக்கி அதன்வழியே புகுந்திடுவன்.—

எங்கும் இலா போகத்தைப் புரிந்து ஏ - அந்தப் பெரிய பத்திவழியாகத் தானும் சென்று கூடி எவ் விடத்திலும் இல்லாத சிவபோகத்தைக் கொடா நிற்பன் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் :*

*" சத்தியும் சிவமும் தாமே நுகரும்என்(று)*
*இத்திறன் உணர்வுவந் தெய்துவ தெவர்க்கோ*
*தமக்கே என்னில் தாம்உண ராமையும்*
*அமைப்பற உணர்தலும் அவர்க்கடை வன்றே "*

*—சங்கற்ப - பரிணமவாதி நிராகரணம்.*

*என்றும்,*

" நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வன் - அற்புதம்போல்
ஆனா அறிவாய் அளவிறந்து தோன்றானோ
வானே முதல்களையின் வந்து "
—சிவஞானபோதம்: சூ - 9, வெண்பா - 3.

என்னுமதும் கண்டுகொள்க.

இதனால் சொல்லியது, ஆன்மா பாசமாகிய பிரபஞ்சத்தை அசத்து என்று அறிந்து நீங்கச் சத்தாகிய சிவம் பிரகாசிக்கும் என்னும் முறைமை அறிவித்தது. (சா)

செய்யுள்—297

கண்ட இவை யல்லேன் நான் என்றகன்று காணாக்
கழிபரமும் நானல்லேன் எனக்கருதிக் கசிந்த
தொண்டினொடும் உளத்தவன்றான் நின்றகலப் பாலே
சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றின்றி
விண்டகலும் மலங்களெலாம் கருடதியா னத்தால்
விடமொழியும் அதுபோல விமலதையும் அடையும்
பண்டைமறை களுமதுநா னானேன் என்று
பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் மாயாவாதி சிவ பரங்களை ஒன்று என்று ஓதியிருக்க நீர் இரண்டாகக் கூறியது என்? என்று வினவ, உணர்த்துகின்றார்.

என்பது: கண்ட இவை அல்லேன் நான் என்று அகன்று - ஆன்மாவானவன் இது அது என்று சுட்டி அறியப்பட்ட தேகம் முதலிய எல்லாவற்றையும் இது

நானல்ல நானல்ல என்று அறிந்து அவையிற்றுக்கு வேறாய்,—

காணா கழிபரமும் நான் அல்லேன் என கருதி - ஆன்மபோதத்துக்கு எட்டாமல் மேலான பரமசிவனும் நான் அல்ல என்று அறிந்து,—

*எனவே தேகம் முதலியவற்றையும் பரபிரமத்தையும் ஆன்மா என்பாரை மறுத்துப் பாச பதிகட்கு வேறாய இருப்பது ஓர் ஆன்மா உண்டென்று அறிவித்ததாயிற்று.*

கசிந்த தொண்டினொடும் உளத்து அவன்தான் நின்ற கலப்பாலே சோகம் என பாவிக்க தோன்றுவன் வேறு இன்றி – அந்தச் சிவன்தான் உருகாநின்ற அடிமைத்திறத்துடன் கூடிநின்ற ஆன்மாவினிடத்தில் எள்ளுக்குள் எண்ணெய்போலவும், பூவினிடத்தில் கந்தம் பொருந்தி நின்றாற்போலவும், உள்ளும் புறம்பும் கலந்துநின்ற ஐக்கியத்தினாலே நான் அந்தச் சிவனாகாநின்றேன் என்று அவன் அறிந்து பாவிக்க அப்பொழுது அவனிடத்தில் அநந்நியமாய் நின்ற சிவன்தானே இரண்டற விளங்கித்தோன்றாநிற்பன்,—

*இச்சோகம்பாவனை வேதாந்திமதம்போல் ஒன்றான தன்மை அன்று.*

விண்டு அகலும் மலங்கள் எல்லாம் கருட தியானத்தால் விடம் ஒழியும் அது போல - இங்ஙனம் இப்பாவனையைப் பண்ணவே கருட தியானத்தால் விடம் கெடுமாப்போல, இவனுக்கு அநாதியே பொருந்தாநின்ற மலங்களெல்லாம் விட்டுப்போகாநிற்கும்,—

விமலதையும் அடையும் - ஆதலால்
நின்மலத்துவத்தைப் பொருந்ாநிற்கும்,—

பண்டை மறைகளும் அது நான் ஆனேன் என்று பாவிக்க சொல்லுவது இ பாவகத்தை காண் ஏ - பழையதாகிய வேதங்களும் அது நான் ஆனேன் என்று பாவனை பண்ணச்சொல்லுவது இந்தப் பாவனையைக்காண் என்றவாறு.

*நீ அதற்குப் பொருள அறியாமல் விபரீதமாகக் கொண்டாயகாண்; ஆதலால், அது கூடாது என அறிக. சக (ஸ:) - அவன, அகம (ஈஹம்) - நான; இதனைச் சோகம் (ஸொஹம்) என்ருர்; வட மொழி. செய்யுட்கண்ணும வரப்பெறும.*

*'' செந்தமிழ்ச் செய்யுட் டெரித்துணர்த்துஞ் செய்யுட்கண்*
*வந்த வடமொழியை மாற்ருதே - சந்தம்*
*வழுவாமற் கொண்டியற்ற மாண்பினர்க் குண்டோ*
*தழுவாமல் நிற்கும் தமிழ் ''*

*என்பது அறிக.*

*'' வழித் தலைப்படு வான்முயல் கின்றேன்*
*உன்னைப்போ லென்னைப் பாவிக்க மாட்டேன் ''*
*—சுந்தரர் - ர் - தக்கேசி - 5.*

*எனபதினும அறிக.*

*இதற்குப் பிரமாணம் வாதுளம், சித்தாந்தசம்போதி என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** அது நான் என்று சாத்திரம் சொல்லுகைசெய்தே நீர் இதை இரண்டாகச் சொல்லுவானேன்? என்ற பரிணமவாதியை நோக்கி மேல் அருளிச்செய்கின்றார்.

**இ - ள் :** கண்ட இவை நான் அல்லேன் என்று அகன்று - தேகாதிப் பிரபஞ்சத்தை இது நான் அல்ல என்று நியதிபண்ணி அந்தப்பிரபஞ்சத்துக்குத் தான் வேறாய்,—

*வேறு என்றது என் நட்பு? அப்படி அறிந்து நீங்கினதால் அலலோ அந்தச் சிவம எனனில்,*

காணு கழிபரமும் நான் அல்லேன் என கருதி - வாக்கு மனதீதமாயிருக்கிற மேலான சிவமும் அல்ல நான் என்று அறிந்து,—

கசிந்த தொண்டினெடும் உளத்து அவன் தான் நின்ற கலப்பாலே - பத்தி பண்ணுகிற அடிமைத் திறத்துடனே பொருந்தின ஆன்மாவிலே அவன் கூடி நின்ற அயிக்கியத்தினால்,—

சோகம் என பாவிக்க தோன்றுவன் வேறு இன்றி - நான் அவன் என்றே தியானித்து நிற்கப் பேதத்தில் தோன்றாமல் அப்பிரகாசமாய் நின்ற சிவன் இப்பொழுது வேறறநின்று பிரகாசியாநிற்பன்,—

விண்டு அகலும் மலங்கள் எல்லாம் - அவன் அப்படிப் பிரகாசிக்கவே அநாதியே பொருந்திநிற்கிற மலங்களெல்லாம் விட்டு நீங்காநிற்கும்,—

*அது எனபோல? எனனில்,*

கருட தியானத்தால் விடம் ஒழியும் அது போல விமலதையும் அடையும் - விடந்தீண்டினவன் தன்னைக் கருடனாகப் பாவிக்க அந்தப்பாவகத்திலேலே அவனுக்கு உண்டாகிய விடம் தீர்ந்தாற்போல் இவ னும் அந்தச் சிவன் என்று சோகம்பாவனை செய்ய நின்மலத்துவமும் பொருந்தாநிற்கும்.—

பண்டை மறைகளும் அது நான் ஆனேன் என்று பாவிக்க சொல்லுவது இ பாவகத்தை காண் ஏ - பழமையாய் வருகிற வேதங்களும் தத்துவமசி யென் கின்ற மகாவாக்கியத்திலேலே அது நான் ஆனேன் என்று தியானிக்கச்சொல்லுவதும் இந்தப் பாவனையே காண் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம :*

*'' கண்டதை அன்றன் றெனவிட்டுக் கண்டசத்தாய்*
*அண்டனை ஆன்மாவில் ஆய்ந்துணரப் - பண்டணைந்த*
*ஊனத்தைத் தான்விடுமா றுத்தமனின் ஒண்கருட*
*சானத்தில் தீர்விடம்போற் றன் ''*

—சிவஞானபோதம்: சூத் - 9, வெண்பா - 5.

*என்னுமதும் கண்டுகொளக.*

*றல் சொல்லியது, சிவன் ஆன்மாவிலே நின்ற கலப்பை அறிந்து தான அவனுக்கு அடிமை யாய்ச் சோகமபாவனை செய்யவே தனக்கு உண்டான பாசம் நீங்கும என்னும முறைமையும அறிவித்தது.*

(எ)

செய்யுள் —298

அஞ்செழுத்தால் ஆன்மாவை அரனுடைய பரிசும்
அரனுருவுமஞ்செழுத்தா லமைந்தமையுமறிந்திட்(டு)
அஞ்செழுத்தால் அங்ககர நியாசம் பண்ணி
ஆன்மாவின் அஞ்செழுத்தால் இதயத் தர்ச்சித்(து)
அஞ்செழுத்தால் குண்டலியின் அனலை யோம்பி
அணைவரிய கோதண்ட மணைந்தருளின் வழிநின் (று)
அஞ்செழுத்தை விதிப்படிஉச் சரிக்கமதி யருக்கன்
அணையரவம் போற்றேன்றும் ஆன்மாவில் அரனே.

1. மறைஞானசம்பந்தர் :

இந்நிலைமயங்கிற்றுயின் வேறும் ஓர் உபாயநிட்டை உணர்த்துகின்றார்.

என்பது: அஞ்செழுத்தால் ஆன்மாவை அர னுடைய பரிசும் – ஸ்ரீபஞ்சாக்கரத்தினுள்ளே சிவமும் சத்தியும் முந்நின்று ஆன்மாவை நடுவே வைத்த முறைமையினையும் அதன்பின் பாசம்நிற்கும் முறை மையினையும் அறிந்தே.—

*எனவே சிவன் ஆன்மாக்கள்பாசத்தை நீக்கி அனுக்கிரகம் செய்கையால் ஆன்மாக்களைச் சிவன் உடைமை என்றார்.*

*" ஊன நடனம் ஒருபால் ஒருபாலாம்*
*ஞானநடம் தான்நடுவே நாடு."*

*" சிவம்முதலே ஆமாறு சேருமேல் தீரும்*
*பவம்இதுநீ ஓதும் படி."*

*—திருவருட்பயன் - 83, 87.*

*என்பவையும் அறிக.*

" சிவம்சத்தி ஆன்மாத் திரோதம் திமிரம்
சிவமுதலேந் திற்சிந்தை செய். "

—பதிபசுபாசப்பனுவல் - போதக - 31.

என்றார் எமது குரவரும்.

அரன் உருவும் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்டு - சகளநிட்களராகிய சதாசிவ மூர்த்திக்கும் சகளமூர்த்திகளுக்கும் ஸ்ரீ பஞ்சாக்கரமே திருமேனி யான முறைமையினையும் அறிந்து,—

அஃதாவது,

" யகார மிலிங்கமாம் நாளம் வகாரம்
சிகாரமேற் பீடம் தெரிக்கின் – மகாரந்தான்
கண்டமே யாகும் கவினு ரடிப்பீடம்
பண்டிகழும் நகாரமும் பார். "

" நகரமே சத்தியோ சாதமுகம் நாடின்
மகரந்தான் வாமம் மதிக்கில் - பகருங்கால்
சிகார வகாரம் புருட மகோரம்
யகாரமீ சானமுக மென். "

என்றார் எமது குரவர். மேற்சகளமாவது,

" நவ்விரண்டு காலதாய் நவின்றமவ் வயிறதாய்ச்
சிவ்விரண்டு தோளதாய்ச் சிறந்தவவ்வு வாயதாய்
யவ்வுமேன் முடியதாய் எழுத்துநின்ற நேர்மையைச்
செவ்வனெத்து நின்றதே சிவாயவஞ் செழுத்துமே. "

என அறிக. இவ்விரண்டும் பஞ்சாக்கர தரிசனம் என அறிக.

அஞ்செழுத்தால் அங்க கர நியாசம் பண்ணி - கனிட்டாதி அங்குட்டாந்தமானவிரல்களிலே யகாராதி யாக்கிச் சங்காரக்கிரமமாகிய நியாசம்பண்ணி, பாதம் முதல் தலை ஈருன அங்கங்களிலே அவ்வெழுத்துக்களை அடைவே நியாசம்பண்ணி. இருதயம் முதலிய தானங் களிலே சடங்கங்களை நியசித்து, மற்றைய அங்கங் களிலே பிரணவத்தை நியசித்து,—

ஆன்மாவின் அஞ்செழுத்தால் இதயத்து அர்ச் சித்து - ஆன்மாவினுடைய இதயகமலத்திலே கோடி சூரியப்பிரபை போன்று பஞ்சாக்கரமே வடிவான சிவனை எட்டங்குல உயரத்தையும் தனக்குவேண்டின தொரு நிறத்தையும் சிவலிங்கமாகக் கற்பித்து அஞ் செழுத்தால் பூசைபண்ணி,—

அஞ்செழுத்தால் குண்டலியின் அனலை ஓம்பி - குண்டலி என்ற பெயரையுடைய நாபித்தானத்தில் இருக்கிற நாடி அட்டகோணமாய்ப் பாம்பானது மண்டலமாகப் பேழை செய்தாற்போல் இருக்கிற தைக் குண்டமாகப் பாவித்து, அதிலே ஞானுக்கினி நின்று சொலிக்கின்றதாகப் பாவித்து, அந்த ஞான அனலைச் சுழுமுனைநாடியிலே மேலேகொண்டுபோய்ப் பிரமரந்திரத்திலே வைத்து, அந்த அனற்பொறியோடும் ஏகோபிக்கிறதாகப் பாவித்து, அதனுலேதான் சுத்தனுய் அதனைக் கீழே இறக்கி, நாபியில் அக்கினியிலே கூட்டிச் சதாசிவனைப் பூசித்து, அந்த நாடியினின்று மேலே புறப்பட்டு விந்துத்தானத்தை அடைந்திருக்கிற அமிர்ததாரையாகிய பெருக்கை மனதாகிற பாத்திரத் திலே வாங்கி, இடை பிங்கலைகள் ஆகிற சுருக்குச்

சுருவங்களினுலே அஞ்செழுத்தை உச்சரித்து ஓமம் பண்ணி,—

அணைவு அரிய கோதண்டம் அடைந்து அருளின் வழி நின்று - கருவி கரணுதிகளை விட்டுச்சென்று கூடு தற்கு அரிதாகிய புருவமத்தியத்தைப் பொருந்தித் தன் னுடைய அதீனம் அன்றி அருளின்வழியே நின்று சரற்காலத்தில் சந்திரப்பிரபைபோலத் தியானித்து,—

அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க மதி அருக் கன் அணை அரவம் போல் தோன்றும் ஆன்மாவில் அரனே - "நம்முதலா ஓதில் அருள் நாடாது நாடும் அருள், சிம்முதலா ஓது நீ சென்று" (உண்மை விளக்கம்–41) என்னும் விதிவழி அறிந்து நாடோறும் தனக்கு இயன்றமாத்திரம் செபம் செய்திருக்கில் காணப்படாமல் இருக்கிற இராகு கேதுக்கள் உவாக் காலத்தில் சந்திராதித்தரிடத்திலே எப்படிக் காணப் படுமோ? அப்படிச் சிவனும் அந்த ஆன்மாவின்கண் வந்து பிரகாசியாநிற்பன் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் சிந்தியம், காரணம், சுப்பிர பேதம் என அறிக.*

2. நிரமபவழகியர்:

**அ - கை:** மேல் ஸ்ரீ பஞ்சாக்கரத்தாலே ஆன்மா வைச் சிவனுக்கு அடிமையான பத்தி பண்ணுகிற முறைமை மாணுக்கனை நோக்கி அருளிச்செய்கின்றுர்.

**இ - ள்:** அஞ்சு எழுத்தால் ஆன்மாவை அர னுடைய பரிசும் - ஸ்ரீ பஞ்சாக்கரத்தாலே ஆன்மா வைச் சிவனுக்கு அடிமையானபடி அறிந்து,—

அரன் உருவும் அஞ்சு எழுத்தால் அமைந்தமை யும் அறிந்திட்டு - பரமேசுவரனுக்குப் பஞ்சாக்கரம் திருமேனியான முறைமையும் அறிந்து.—

அஞ்சு எழுத்தால் அங்க கர நியாசம் பண்ணி ஆன்மாவில்-ஆன்மாவிலே பஞ்சாக்கரத்தினலே அங்க நியாசமும் கரநியாசமும் செய்து.—

அஞ்சு எழுத்தால் இதயத்து அர்ச்சித்து - அந்தச் சிவனைப் பஞ்சாக்கரத்தினலே இதயகமலத்திலே பூசித்து.—

அஞ்சு எழுத்தால் குண்டலியின் அனலை ஓம்பி - பஞ்சாக்கரத்தினலே நாபி குண்டத்திலே சுவாகா என்று அக்கினிகாரியம் செய்து.—

அணைவு அரிய கோதண்டம் அடைந்து அருளின் வழி நின்று - பொருந்துதற்கு அரிய இலாடத்தானத் தின் கீழான புருவமத்தியிலே சிவன் ஆன்மாவுக்குப் பிராணனய்நிற்கிற தன்மையை அவனுடைய ஞானத் தினலே அறிந்து சோகம்பாவனை செய்ய அப்பொழுதே சிவனுக்கு அடிமை ஆவன்.—

*இப்படி நிற்க ஆன்மசுத்தி வருகிறபடி எப்படி? எனின், மேல் அருளிச்செய்கின்றர்.*

அஞ்சு எழுத்தை விதிப்படி உச்சரிக்க - பஞ்சாக் கரத்தை உபதேசப்படியே அறிந்து உச்சரிக்க.—

மதி அருக்கன் அணை அரவம் போல் தோன்றும் - ஆதித்தனிடத்திலும் சந்திரனிடத்திலும் ஆச்சரியமாக

இராகு கேதுக்கள் கூடினவிடத்து அந்தச்சந்திரா தித்தர்களை உள்ளடக்கி இராகு கேதுக்கள் மேலிட்டு நின்றாற்போல,—

ஆன்மாவில் அரன் ஏ - அந்தச்சிவன் நான் என்று சோகம்பாவனை செய்யில் அப்பொழுதே காட்டத்தில் அக்கினி தோன்றினாற்போலச் சிவனும் ஆன்மாவிலே தோன்றிப் பிரகாசியாநிற்பன் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் :*

*"அஞ்செழுத்தா லுள்ளம் அரனுடைமை கண்டரனை*
*அஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தில் - அஞ்செழுத்தால்*
*குண்டலியில் செய்தோமங் கோதண்டம் சானிக்கில்*
*அண்டனும் சேடனும் அங்கு"*

—*சிவஞானபோதம்: சூத் - 9, வெண்பா - 6.*

*'அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க மதி அருக்கன் அணை அரவம்போல் தோன்றும் ஆன்மாவில் அரனே' என்றதற்குப் பிரமாணம் :*

*"இந்துவில் பானுவில் இராகுவைக் கண்டாங்குச்*
*சிந்தையில் காணில் சிவன்கண்ணும் - முந்தவே*
*காட்டாக்கில் தோன்றிக் கனல்சேர் இரும்பென்ன*
*ஆள்தானும் ஓதஞ் செழுத்து"*

—*சிவஞானபோதம்: சூத் - 9, வெண்பா - 7.*

*என்னுமதும் கண்டுகொள்க.*

*இதனால் சொல்லியது, ஸ்ரீ பஞ்சாக்கரத்தாலே ஆன்மா சிவனுக்கு அடிமை என்று அறிந்து பூசை ஓமத்தியானங்களும் ஸ்ரீ பஞ்சாக்கரத்தாலே செய்யக் கடவன் என்றும், ஸ்ரீ பஞ்சாக்கரத்தை உள்ளம் அறியாது அறிந்து சோகம்பாவனை செய்ய இந்த*

*ஆன்மாவை உள்ளடக்கிச் சிவன் பிரகாசித்துநிற்பன் என்னும் முறைமையும் அறிவித்தது.* (அ)

செய்யுள்—299

**நாட்டுமித யந்தானும் நாபியினி லடியாய்**
**ஞாலமுதல் தத்துவத்தால் எண்விரல்நா ளத்தாய்**
**மூட்டுமோ கினிசுத்த வித்தைமல ரெட்டாய்**
**முழுவிதழ்எட் டக்கரங்கள் முறைமையினின் உடைத்**
**காட்டுகம லாசனமேல் ஈசர்சதா சிவ,ரம் [தாய்க்**
**கலாமூர்த்த மாமிவற்றின் கண்ணுகுஞ் சத்தி**
**விட்டையருள் சிவன்மூர்த்தி மாறுகிச் சத்தி**
**மேலாகி நிற்பனிந்த விளைவறிந்து போற்றே.**

1. மறைஞானசம்பந்தர் :

பிருதிவி முதல் நாதம் ஈருன தத்துவங்கள் ஆதன மும் மூர்த்தியும் மூர்த்திமாஞகிய சிவனையும் அறிந்து பாவித்து வழிபடுமாறு உணர்த்துகின்றுர்.

**என்பது** ; நாட்டும் இதயம் தானும் நாபியினில் அடியாய் - சிவனைப் பூசித்தற்குக் கற்பித்த இதயகம லத்துக்கு நாபித்தானமே அடியாய்,—

ஞாலம் முதல் தத்துவத்தால் எண்விரல் நாளத் தாய் - மாணிக்கநிறம் போன்று இருக்கின்ற கிழங்கே பிருதிவி தத்துவமாக, அப்புமுதல் மாயை ஈருன தத்து வங்கள் அந்தக் கிழங்கின் மேலே நீலநிறம் போன்று எட்டங்குல உயரத்தையுடைய நாளத்தின் நடுவே நவத்துவாரத்தையும் பவளநிறம் போன்ற முள்ளினை யும் பொருந்தி,—

மூட்டு மோகினி - அந்த நாளத்தின் நுனியிலே பூவின் அடியிலே பொருந்திய முடிச்சு மாயையாக வும்,—

சுத்தவித்தை மலர் எட்டாய் முழு இதழ் எட்டு அக்கரங்கள் முறைமையினில் உடைத்தாய் - சுத்தவித் தியாதத்துவமாகிய தாமரைப்பூவானது பன்னிரண்டு அங்குல விரிவினையும் சுவேத நிறத்தினையும் உடைய எட்டு இதழையும் ஓர் அங்குல உயரத்தினையும் விரிவி னையும் உடைத்தாய் அதில் ஐம்பத்தொரு அக்கரங்களை விதையாகவும், ஓடவைத்த பொன்போன்ற கர்ணிகை யினையும், அதனைச் சூழப் பொன்னிறமாகிய அறுபத்து நாலு கேசரங்களையும், அதன் நுனியிலே முத்துப் போலவும் இருப்பதாய் இப்படியிருக்கின்ற பதுமத் திலே பிரதானமான எட்டிதழினும் கிழக்கு முதலாக அடைவிலே ஓம் சிவாயநமோநம: என்னும் இவ்வக்க ரங்கள் எட்டும் பொருந்தியிராநிற்கும்; அந்த இதழ் எட்டினையும் அட்டவித்தியேசுரர் அதிட்டித்திருப் பர்கள்,—

காட்டு கமலாசனமேல் ஈசர் - இப்படிச் சொல்லப் பட்ட பதுமத்தின்மேல் ஈசுரதத்துவத்தின் மகேசுரர் இருப்பதாகவும்,—

சதாசிவமும் கலாமூர்த்தம் ஆம் - சதாசிவ தத்து வத்தில் சசினியாதி சத்திகளான முப்பத்தெட்டுக் கலைகளையும் வடிவாகவுடைய சதாசிவமூர்த்தியும்,—

இவற்றின் கண் ஆகும் சத்தி - [illegible]ச்சதாசிவ வத்திற்கு மேலாகிச் சத்[illegible]ல் இருக்கும் சத்தி,—

வீட்டை அருள் சிவன் மூர்த்திமான் ஆகி சத்தி மேலாகி நிற்பன் - முற்கூறிய சத்திதத்துவத்துக்கு மேல் சர்வான்மாக்களுக்கும் மோட்சத்தைக் கொடா நிற்கின்ற சிவதத்துவம் எல்லாத்துக்கும் மேலாகியிரா நிற்கும்,—

இந்த விளைவு அறிந்து போற்று ஏ - இப்படி மண்முதல் சிவம் ஈருகிய தத்துவங்கள் ஆதனமும், முப்பத்தெட்டுக் கலைகள் மூர்த்தியும், சதாசிவ மூர்த்தி மூர்த்திமானுகவும் நிற்கும்முறைமையினைச் சற் குருவினது கடாட்சத்தால் அறிந்து சிவனை ஆராதனை செய்வாயாக என்றவாறு.

*இதயகமலம் வாழைப்பூப்போல அதோமுகமாய் நாலங்குலம தாழ்ந்து இருக்கும் என்று ஓதியிருக்க, அக்கமலத்தில் பூசிக்கச்சொல்லியது எனனை? எனில், அதனை உத்தம பீசமந்திரத்தால் பண்ணி அஃது அலர்ந்ததாகப் பாவித்து அதில் பூசை செயக என்றதாம.*

*இதற்குப் பிரமாணம்* ***காமிகம், சுப்பிரபேதம், நிச்சுவாசம், காலோத்தரம், கிரணம், சூதசங்கிதை*** *என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை:** இத்தன்மை கூடாதவர்களுக்குச் சிவனை உள்ளே பூசித்து அதனுலே ஆன்மசுத்தி உண்டாகும் முறைமை அருளிச்செய்கின்ருர்.

இ - ள்: நாட்டும் இதயம் தானும் நாபியினில் அடியாய் - சொல்லப்பட்ட இதயமாகிய தாமரைப்பூத் தனக்குக் கிழங்கு நாபித்தானமாய்,—

ஞாலம் முதல் தத்துவத்தால் எண்விரல் நாளத் தாய் - பிருதிவி முதல் கலை அந்தமாக உள்ள முப்பத் தொரு தத்துவத்தாலே அந்தப்பூவுக்குத் தண்டு எட்டு அங்குல நீளத்தை உடையதாய்,—

மூட்டு மோகினி - நாளமும் பூவும் பொருந்தின மூட்டு அதோமாயையாய்.—

சுத்தவித்தை மலர் - தாமரைப்பூச் சுத்தவித்தை யாய்,—

எட்டாய் முழு இதழ் எட்டு அக்கரங்கள் - எட்டு அக்கரங்களும் பூவுக்கு நிறைந்த இதழ் எட்டாய்,—

முறைமையினை உடைத்தாய் காட்டு கமலா சனம் - முன்சொன்ன கிழங்குமுதல் இதழ் முடிவான முறைமையினை உடைய பிரமாசனமாய் இருக்கிற முப்பத்திரண்டு தத்துவத்துக்கும் நிவிர்த்தி பிரதிட்டை என கலைகள் வடிவாம்,—

மேல் ஈசர் சதாசிவமும் கலா மூர்த்தமாம் - இந்த ஆதனத்துக்குமேல் ஈசுரதத்துவமும் சாதாக்கிய தத்து வமும் நடுவில் கர்ணிகையாம்; இவை இரண்டுக்கும் சாந்தியும் சாந்தியாதீதமும் வடிவாம்,—

இவற்றின் கண் ஆகும் சத்தி - சத்திதத்துவம் இந்தக் கர்ணிகையின் கண்ணுனை விந்துக்களாம்,—

வீட்டை அருள் சிவன் மூர்த்திமான் ஆகி சத்தி மேலாகி நிற்பன் - மோட்சத்தைத் தருகிற அந்த நாதம் அதற்குப் பிராணனுமாய் மேல் நிரந்தரமுமாய்ச் சத்தி தத்துவத்துக்கு மேலுமாய் இந்தப் பூவுக்குக் கந்தமுமாய் நிற்பன் அந்தச்சிவன்,—

இந்த விளைவு அறிந்து போற்று ஏ - இப்படிப் பூசித்தால் உண்டாகிய பயனை அறிந்து அந்தச் சிவன் நான் என்று சோகம்பாவனை செய்கிறதுதானே அந்தரியாகபூசையாம் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் :*

*" மண்முதல் நாளமலர் வித்தை கலாரூபம்*
*எண்ணிய ஈசர் சதாசிவமும் — நண்ணில்*
*கலையுருவாம் நாதமாம் சத்தியதன் கண்ணும்*
*நிலையதிலாம் அச்சிவன்தாள் நேர்"*

*—சிவஞானபோதம்: சூத்- 9, வெண்பா 8.*

*என்னுமதுங் கண்டுகொள்க.*

*இதனால் சொல்லியது, அத்துவாசோதனை செய்து சிவனைக் கூடுகிற அந்தரியாகத்தினமுறைமை அறிவித்தது.* (கூ)

## செய்யுள்—300

**அந்தரியா கந்தன்னை முத்திசா தனமா**
**அறைந்திடுவர் அதுதானும் ஆன்மசுத்தி யாகும்**
**கந்தமலர் புகையொளிமஞ் சனமமுது முதலாக்**
**கண்டனஎ லாம்மனத்தாற் கருதிக் கொண்டு**

சிந்தைதனில் அர்ச்சிக்கச் சிவஞானத்தால்
சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க
வந்திடுமவ் வொளிபோல மருவிஅரனுளத்தே
வரவரவந் திடுவன்பின் மலமான தறுமே.

**1. மறைஞானசம்பந்தர்:**

முற்கூறிய அந்தரியாகத்துக்கு வேண்டும் உபகரணங்களும், அதனால் பிரயோசனமும் உணர்த்துகின்றார்.

என்பது: அந்தரியாகம் தன்னை முத்தி சாதனம் ஆ அறைந்திடுவர் - இந்த அந்தரியாகபூசனையானது ஞானயோகமாதலால் அதுவே மேலான மோட்சத்துக்கு ஏது என்று ஞாதாக்கள் சொல்லாநிற்பர்கள்,—

அது தானும் ஆன்மசுத்தி ஆகும் - அந்த அந்தரியாக பூசையை நாடோறும் இயற்றவே ஆன்மாவுக்குச் சுத்தியாகும்,—

*அஃது இயற்றுவது எங்ஙனம்? எனனில்,*

கந்தம் – சந்தனம்,—

*அஃதாவது போக வெறுப்பினால் வைராக்கியமாகினறதே சந்தனமாம.*

மலர் – அட்டபுட்பம்,—

*அவையாவன: கொல்லாமை, இந்திரியநிக்கிரகம் அஃதாவது புறக்கருவியின்வழி போகாதிருத்தல், சாந்தி அஃதாவது உட்கருவி யடக்குதல், தயை,*

*ஞானம், சத்தியவசனம் பேசுதல், தவம், பாவம் அஃதாவது மனம் அழுக்கற்றிருத்தல் என எட்டினை யும் அறிக.*

புகை - தூபம்,—

*அஃதாவது போக்குவரவுடன் கூடியிருக்கிற மனமாகிறபாத்திரத்தில் பிராணனாகிய அக்கினியை யிட்டுக் கர்வம் என்பதொரு தூபம் கொடுக்கை.*

ஒளி - ஞானதீபம்,—

*அஃதாவது புத்தி எல்லாத்தையும் பிரகாசிப்பிக் கையால் ஞானமே தீபமாயிற்று.*

மஞ்சனம் - திருமஞ்சனம் நிறை,

அமுது – பிரத்தியாகாரம் ஆகிற அமிர்தமே நைவேத்தியம்,—

*அஃதாவது இந்திரியத்துவாரங்களிலே செல்லா மல் திருப்பக்கொண்டுபோய்ப் பலகாலும் இதயத்து இருத்துதல்.*

முதலாக கண்டன எலாம் மனத்தால் கருதிக் கொண்டு - இவை முதலிய எல்லாவற்றையும் இந்தப் பாவனைகளுடனே பாவித்துபசாரங்களைக்கொடுத்து,—

சிந்தையினில் பூசித்து சிவனை ஞானத்தால் – சிவனை ஞானவதியால் ஆன்மாவினிடத்திலே இப்படிப் பாவகத்துடனே பூசித்து,—

சிந்திக்க சிந்திக்க தர்ப்பணத்தை விளக்க வந்திடும் அ ஒளிபோல மருவி - கண்ணுடியை விளக்க விளக்க மலினம் போய்ப் பிரகாசம் அதிகமாவது போல இவன் உன்னிடத்திலே அனவரதமும் பாவனை பண்ணப்பண்ண,--

அரன் உளத்தே வர வர வந்திடுவன் - ுவன உள்ளத்தில் இரண்டற நிற்கின்ற சிவன் ித் தோன்றுநிற்பன்,—

பின் மலமானது அறும் ஏ - சிவன் பிரகாசித்துத் தோன்றினவாறே இவனிடத்து உள்ள மலங்களும் விட்டு நீங்கும் என்றவாறு.

*'சிந்திககச் சிந்திக்க' எனவும், 'வர வர' எனவும் இரட்டுறக்கிளத்தலின் அஃது இரட்டைச் சொல் என அறிக.*

*இதற்குப் பிரமாணம சிவதருமோத்தரம், சுப்பிர பேதம், வாதுளம், மோகசூரோத்தரம், பூசாத்தவம் என அறிக.*

*இங்கிலை கைவராதார் புறத்தில் பூசிக்குமவை களைப் பாவித்துப் பூசிக்க எனபதூஉம பெறுதும.*

## 2. நிரம்பவழகியர்:

**அ - கை :** இப்படி உட்பூசையாகச் சொல்லப் பட்ட அந்தரியாகத்துக்குப் பயன் எப்படி? என்று மாணுக்கனை நோக்கி அருளிச்செய்கின்றார்.

இ - ள்: அந்தரியாகம் தன்னை முத்தி சாதனமா அறைந்திடுவர் - இப்படிப் பூசிக்கிற உட்பூசையாகிய அந்தரியாகத்தை மோட்ச ஏது என்றே சொல்லுவர்கள் அறிவால் உயர்ந்தோர்,—

அது தானும் ஆன்மசுத்தி ஆகும் - அந்த அந்தரியாகந்தான் உயிர்க்கு விளக்கமும் ஆம்,—

*இந்தப் பூசைக்கு உண்டான உட்கரணங்கள் ஏது என்னில்?—*

கந்த மலர் புகை ஒளி மஞ்சனம் அமுது முதல் ஆக கண்டன எலாம் மனத்தால் கருதிக்கொண்டு - கந்தம் புஷ்பம் தூபம் தீபம் மஞ்சனம் திருவமுது முதலாக நூல்களில் சொல்லப்பட்டன எல்லாம் மனத்தாலே சங்கற்பித்துக்கொண்டு,—

சிந்தையினில் பூசித்து சிவனை - தனக்குப் பிராணனாய் நிற்கிற பரமேசுவரனைத் தன்னுடைய இதயத்திலே பூசித்து,—

ஞானத்தால் சிந்திக்க சிந்திக்க - சிவஞானத்தாலே அவனைச் சந்ததமும் நினைக்க நினைக்க,—

தர்ப்பணத்தை விளக்க வந்திடும் அ ஒளிபோல் - கண்ணாடியை விளக்கவே மேலே உண்டாகின்ற பிரகாசம்போல,—

மருவி அரன் உளத்தே வர வர வந்திடுவன் - சிவன் ஆன்மாவைப் பொருந்திநின்று மேலே மேலே பிரகாசியாநிற்பன்; அங்ஙனம் பிரகாசிக்கவே,—

பின் மலமானது அறும் ஏ - முன் அநாதியே மறைத்துக்கொண் ய அந்த அந்தகாரம் இப்பொழுது ந்தச் சிவப்பிரகாசத்தாலே நீங்கும் என்றவாறு.

*இதனால் சொல்லியது பூசைக்கு வேண்டத்தக்க உபகரணங்கள் எல்லாம் மனத்தாலே சங்கற்பித்துக் கொண்டு ஞானத்தாலே உள்ளே பூசிக்கிற பூசை ஆன்மசுத்தி எனறும, அப்படிப் பூசிக்கவே இவனுக்குச் சிவபபிரகாசம உண்டாம் என்றும், அந்தச் சிவப் பிரகாசத்தினலே பாசமானது நீங்கும் என்னும முறைமையும அறிவித்தது.* (௰)

செய்யுள்—301

**புறம்பேயும் அரன்கழல்கள் பூசிக்க வேண்டில்**
**பூமரத்தின் கீழுதிர்ந்த போதுகளுங் கொண்டு**
**சிறந்தாருஞ் சிர்ச்சிவனை ஞானத்தா லங்குச்**
**சிந்திக்கும் படிஇங்குச் சிந்தித்துப் போற்றி**
**அறம்பாவங் கட்குநாம் என்கடவேம் என்றும்**
**ஆண்டவனைக் கண்டக்கால் அகம்புறமென் றேதே**
**திறம்பாதே பணிசெய்து நிற்கை யன்றே**
**சீரடியார் தம்முடைய செய்தி தானே.**

**1.** மறைஞானசம்பந்தர் :

அந்த நிட்டையைப் பிரிந்தகாலத்தில் புறப்பூசை யில் விருப்பம் உண்டாகில் பூசிக்கும் முறைமை உணர்த்துகின்றார்.

**என்பது:** புறம்பேயும் அரன் கழல்கள் பூசிக்க வேண்டில் - புறப்பூசையும் செய்யவேண்டிற்றுயின் பூசிக்குமாறு,—

பூ மரத்தின்கீழ் உதிர்ந்த போதுகளும் கொண்டு— பாதிரி சண்பகம் கோங்கலர் முதலிய மரங்களினின்றும் வீழ்ந்த பூக்கள் முதலான திரவியங்களைக் கொண்டு,—

சிறந்து ஆரும் சீர் சிவனை ஞானத்தால் அங்கு சிந்திக்கும்படி இங்கு சிந்தித்து போற்றி - சர்வக் கினுய் எவ்விடத்தும் நிறைந்து நிற்கின்ற அழகிய சிவனை அந்தரியாகம்பண்ணும் முறைமைபோல இவ் விடத்தும் அப்படியே கருதிப் பூசிப்பதும் செய்து தோத்திரம் பண்ணி,—

*''புறத்தும் சிவபூசை பூவாற் புரியாய்*
*அறத்தின் மலையிலக்கே யாம்''*

*—பதிபசுபாசப்பனுவல் - போதக - 28.*

*எனபது அறிக.*

அறம் பாவங்கட்கு நாம் என் கடவேம் - யாம் இவ்விடத்துச் செய்யும் புண்ணிய பாவங் கட்கு அவனே தலைவனுதலால் அவற்றினைச் செய்ய எமக்கென்ன ஓர் அறிவும் சுதந்திரமும் இன்மையால் இவற்றினுக்கு எவ்வாற்ருன் உரியேம் என்று கருதி.—

*என்னவே, ஆன்மசமர்ப்பணம கூறியதாயிற்று.*

எங்கும் ஆண்டவனைக் கண்டக்கால் அகம் புறம் என்னுதே - சர்வவியாபியாயிருக்கிற கர்த்தாவாகிய இந்தப்படி தெரிசித்தவிடத்து அகப்பூசை

புறப்பூசை என கருதலின்றிப் பூர ணத்தை விட்டுநீங்காமல்,—

திறம்பாதே பணி செய்து நிற்கை அன்றே சீர் அடியார் தம்முடைய செய்தி தானே - இந்த நிலையில் பிரியாது உற்றுத் தோன்றினகண்ணே அவன்பணியே என்று பிறழாமல் வழிபாடுசெய்து நிற்றல் சிறப்பினை யுடைய ஞாதாக்கள் முறைமையாம் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் தேவிகாலோத்தரம், சிவ தந்திரம், இரகசியசாரம் என அறிக.*

2. நிரம்பவழகியர் :

அ - கை : ஞானவான்களுக்கு இந்த உட்பூசை ஒழிந்து புறப்பூசைவேண்டுமோ? என்ற மாணுக்கனை நோக்கி, புறப்பூசை பூசிக்க வேண்டினும் அந்த ஞானத்தினலே பூசிப்பர்கள் என்று அருளிச்செய் கின்றார்.

இ - ள் : புறம்பேயும் அரன் கழல்கள் பூசிக்க வேண்டில் - உட்பூசை ஒழிந்து புறத்திலும் பரமேசு வரனுடைய சீபாதங்களை அர்ச்சிக்கவேண்டியிருந்தால் அதனாலே,—

பூ மரத்தின் கீழ் உதிர்ந்த போதுகளும் கொண்டு - பூவுள்ள மரத்தின் கீழே உதிரப்பட்ட புட்பங்கள் திருமஞ்சனம் திருவமுது முதலான திரவியங்களும் தேடிக்கொண்டு,—

சிறந்தாரும் சீர் சிவனை ஞானத்தாலே சிந்திக்கும்படி அங்கு சிந்தித்து போற்றி - சிறப்புப்பொருந்திய அழகிய பரமேசுவரனைச் சிவஞானத்தாலே அங்கு உட்பூசையிலே தரிசித்து இரண்டறநிற்கிற முறைமை போல இவ்விடத்திலும் அப்படியேகண்டு அர்ச்சித்துத் தோத்திரமும் செய்து.—

*இந்த முறைமையிலே நிறகையினுலே,*

அறம் பாவங்கட்கு நாம் என்கடவேம் - பிராரத்தகன்மம் துலையும் அளவும் தேகத்திலே நின்று சுகதுக்கங்களைப் புசித்தாலும் விருப்பு வெறுப்புக்களுக்கும் நமக்கும் தொந்தனை உண்டாகாது; நாம் ஞானமாய் நிற்கையினுலே.—

எங்கும் ஆண்டவனைக் கண்டக்கால் - எவ்விடத்திலும் நம்மை அடிமை கொண்ட பரமேசுவரனைக் கண்ட இடத்து.—

அகம் புறம் என்னுது ஏ - உள் என்றும் புறம் பென்றும் நினையாதே உள்ளும் புறம்பும் ஒருநீர்மையாகக் கண்டு.—

திறம்பாதே பணி செய்து நிற்கை அன்றே சீர் அடியார் தம்முடைய செய்தி தான் ஏ - இந்தநிலை திரியாமல் எங்கும் அவன் பரிபூரணனுய் நிற்கையால் எவ்விடத்திலும் வழிபாடுசெய்து நிற்பதல்லோ திருவுளத்துக்கு உவந்த அடியார்க்கு உள்ள செயல் என்றவாறு.

இதனால் சொல்லியது ஞானவான்களுக்கு உட்பூசை அமையும் என்றும், புறப்பூசை வேண்டினாலும் அந்த உட்பூசையைப்போல அர்ச்சிக்கவேணும் என்றும், பரமேசுவரனை வழிபடுமிடத்து எங்கும் பூரணமாய் நிற்கிற முறைமை அறிந்து உள்ளும் புறம்பும் ஒருநீர்மையாக வழிபாடு செய்யவேணும் என்றும் முறைமையும் அறிவித்தது. (கக)

## செய்யுள்—302

இந்தனத்தின் எரிபாலின் நெய்பழத்தின் இரதம்
எள்ளின்கண் எண்ணெயும்போல் எங்குமுள னிறை
வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவே யருளும் [வன்
மலமறுப்போர் ஆன்மாவின் மலரடிஞா னத்தாற்
சிந்தனைசெய் தர்ச்சிக்கச் சிவனுளத்தே தோன்றித்
தீஇரும்பைச் செய்வதுபோற் சீவன் தன்னைப்
பந்தனையை அறுத்துத்தா னாக்கித்தன் னுருவப்
பரப்பெல்லாங் கொடுபோந்து பதிப்பனிவன் பாலே.

**1.** மறைஞானசம்பந்தர் :

சர்வவியாபித்துவத்தை அறிந்து வழிபட்ட ஆன்மாக்களுக்கு அவன் கொடுக்கும் வரிசை உணர்த்துகின்றார்.

**என்பது** : இந்தனத்தின் எரி பாலின் நெய் பழத்தின் இரதம் எள்ளின்கண் எண்ணெயும் போல் எங்கும் உளன் இறைவன் – காட்டத்தின்கண் அக்கினியும் பாலின்கண் நெய்யும் பழத்தின்கண் சுவையும் எள்ளின்கண் எண்ணெயும் வியாபித்து நிற்றல் போலக்

கர்த்தாவாகிய சிவனும் சித்து அசித்து என்னும் சர்வத்தின்கண்ணும் வியாபித்துநிற்பன்,—

வந்தனை செய்து எ இடத்தும் வழிபடவே அருளும் - அகப்பூசை புறப்பூசை எனக் கூறியவற்று ஒன்றுள் இப்படிப்பட்ட சிவனை வழிபட்டு அர்ச்சனை செய்யவே அப்பொழுது அந்தச்சிவன் தான் சாந்நித் தியமாய் நின்று ஆன்மாக்கட்கு அனுக்கிரகத்தைச் செய்யாநிற்பன்,—

*இவனை அர்ச்சிக்கும் முறையும சிவன் அனுக்கிர கிக்கும முறையும் எங்ஙனம? என்னில்,*

மலம் அறுப்போர் ஆன்மாவில் மலரடி ஞானத் தால் சிந்தனை செய்து அர்ச்சிக்க - ஆன்மாவின்கண் அநாதியிலே பொருந்திநின்ற ஆணவாதி பாசங்களைப் போக்கக் கருதுமவர் மலர்போன்ற அவனது திருவடி ஞானத்தினாலே விருப்பத்துடன் அவனைப் பாவித்து அர்ச்சனை செய்யில்,—

சிவன் உளத்தே தோன்றி - தன்னை வழிபடா நின்றவரிடத்து உண்டாகிய கிருபையினாலே சிவன் அவரிடத்துப் பிரகாசியாநின்று,—

தீ இரும்பை செய்வதுபோல் சீவன் பந்தனையை அறுத்து தான் ஆக்கி தன் உருவ பரப்பு எல்லாம் கொடு புகுந்து பதிப்பன் இவன்பால் ஏ - அக்கினியானது தன்னைச் சேர்ந்த இரும்பை எப்படித் தற்சொரூபம் ஆக்கிற்று? அதுபோலச் சிவனும் தன்னைப் பொருந்தின ஆன்மாக்களை அவரிடத்துண் டாகிய ஆணவாதி மலங்களைப்போக்கித் தன்னைப்

போலச்சுத்தராக்கித் தற்சொரூபம் போல விரிந்திருக்கின்ற இச்சா ஞானக் கிரியா சொரூபம் எல்லாவற்றையும் கொடுவந்து இவரிடத்தில் பதியாநிற்பன் என்றவாறு.

*ஆன்மாவை இசசா ஞானக கிரியா சொரூபன் என்று முனனம ஓதியிருக்க இபபொழுது கொடுப்பன எனறது, பாசத்துடன கூடின பொழுது விருத்தி காரியமாகச் சிவிக்கும, ரண்டு நிச்சயமாய்ச சிவிக்கும: அதனையே இவவிடத்தில் கொடுத்தது எனக்கூறிய தென அறிக.*

*இதறகுப் பிரமாணம சர்வஞானோத்தரம், மதங்கம், ஆக்கினேயபுராணம் என அறிக.*

*மறைஞானசம்பந்ததேசிகர் உரை முடிந்தது.*

**2.** நிரம்பவழகியர் :

**அ - கை :** உட்பூசை மகத்தாக அருளிச்செய்தது என் நம்பு? என்ற மாணுக்கனை நோக்கி மேலும் அருளிச்செய்கின்றார்.

**இ - ள் :** இந்தனத்தின் எரி பாலின் நெய் பழத்தின் இரதம் எள்ளின்கண் எண்ணெயும்போல் எங்கும் உளன் இறைவன் - காட்டத்தில் அக்கினிபோலவும் பாலில் நெய்போலவும் பழத்தில் சுவைபோலவும் எள்ளினிடத்து உண்டாகிய எண்ணெய்போலவும் பரமேசுவரனும் சடசித்துக்களாய் எவ்விடத்திலும் வியாபியாய் இருப்பன்,—

வந்தனை செய்து எ இடத்தும் வழிபடவே அருளும் - ஆகையாலே பரமேசுவரனும் தன்னை யாதோரிடத்திலே நமஸ்கரித்து வழிபாடு செய்யவே அவரவர் கருத்துக்குக் தக்கதாக அநுக்கிரகியாநிற்பன் அத்தன்மை ஒழிந்து.—

மலம் அறுப்போர் ஆன்மாவில் - ஆன்மாவுக்கு அநாதியேயுள்ள மலத்தைத் திருவருளினாலே போக்க விசாரிக்கிறவர்கள்.—

மலரடி ஞானத்தால் சிந்தனைசெய்து அர்ச்சிக்க - எவ்விடத் விட்டுவிளங்காநின்ற சீபாதமாகிய ஞா சிவனை அறிந்து தன்னுடைய இதய கமலத்

உளத்தே தோன்றி - அநாதியே தோன் றாமல் நின்ற சிவன் ஆன்மாவிலே பிரகாசித்து.—

இரும்பை செய்வது போல்
பாந யை அறுத்து தான் ஆக்கி - அக்கினியானது க் கூடின இரும்பை இரும்பின் தன்மையை மறைத்துத் தானாக்கின முறைமை போலச் சிவனும் தன்னைப் பொருந்தின ஆன்மாவை அவனுடைய பாச சம்பந்தங்களையும் விடுவித்துத் தன்னைப்போல நின்மல அப்படி அருபம் ஆக்கினதும் அன்றி.—

தன் உருவ பரப்பு எல்லாம் கொடு புகுந்து பதிப்பன் இவன்பால் ஏ - தன்னுடைய சுகசொரூபத் தின் வியாத்தியெல்லாம் இவனுக்குப் பிராணனாய் நின்ற நிலையிலே காட்டி அநுபவித்து அசைவறநின்று பிரகாசியாநிற்பன் என்றவாறு.

இதனுல் சொல்லியது, எவவிடத்திறும் வியாத்தமாயுளள பரமேசுவரனை ஞானவான்களாய உளளவர்கள தங்கள் தங்களுக்குப் பிராணனுய் நிறகிற முறைமையைச் சிவஞானத்தாலே அறிந்து உள்ளே பூசிககத் தங்களுக்கு உண்டான மலசம்பந்தமுமநீங்கிச் சிவனைப் பெறுவர்கள் எனனும் முறைமை அறிவித்தது. (கஉ)

நிரம்பவழகியதேசிகர் உரை முடிந்தது.

சாதனவியல் - ஒன்பதாஞ்சூத்திரம் முடிந்தது.

# பயனியல்

## பத்தாஞ்சூத்திரம்

### செய்யுள்—303

இவனுலகில் இதமகிதம் செய்த வெல்லாம்
இதமகிதம் இவனுக்குச் செய்தார்பால் இயையும்
அவனிவனாய் நின்றமுறை ஏக னாகி
அரன்பணியின் நின்றிடவும் அகலுங் குற்றம்
சிவனுமிவன் செய்தியெலாம் என்செய்தி யென்றும்
செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும்
பவமகல உடனாகி நின்றுகொள்வன் பரிவாற்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே.

1. மறைஞானசம்பந்தர்:

மேல் பத்தாஞ்சூத்திரம் என்னுதலிற்றோ? எனின், முற்கூறிய பாசவாதனைநீங்கிச் சீவன்முத்தராய் நிற்கும் நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இத்தலைச்செய்யுள் என்னுதலிற்றோ? எனின், சீவன்முத்தர்க்கு ஆகாமியம் ஏறாமைக்குக் காரணம் உணர்த்துதல் நுதலிற்று.

**என்பது:** இவன் உலகில் இதம் அகிதம் செய்த எல்லாம் இதம் அகிதம் இவனுக்குச் செய்தார்பால் இசையும் - இந்தச் சீவன்முத்தரானவர்கள் இவ்வுல கத்தின்கண் செய்த இருவினையும் ஆகாமியமாக வந்து ஏறாது; அஃது எங்கே சென்றடையும்? என்னில்,

அவர்களுக்கு இதம் அகிதம் செய்தவர்களிடத்தில் சென்றடையும்படி சிவன் திருவுளம்செய்வன்,—

*அஃது எக்காரணத்தால்? என்னில்,*

அவன் இவன் ஆய் நின்ற முறை ஏகன் அரன் பணியில் நின்றிடவும் அகலும் குற்றம் - காட்டத்தில் அக்கினிபோல அயிக்கியம் கூறுதலால் அந்த அயிக்கியத்தின் முறைமையிலே இவன் செய்கின்ற செயல்களெல்லாம் சிவன் ஏவல் எனக்கருதிப் பணியறுத்துக்கொண்டு நிற்கவே இவனுக்கு ஆகாமியம் ஏறுமல் இவனுக்குச் செய்தவர்களிடத்திலேதானே அவ்வினைகள் சென்றடையாநிற்கும்,—

*இச்சிறப்புடையோன ஆதலாலே,*

சிவனும் இவன் செய்தி எல்லாம் என் செய்தி என்றும் செய்தது எனக்கு இவனுக்குச் செய்தது என்றும் - பரமேசுவரனும் சீவன்முத்தனானவன் செய்கின்ற இருவினைகள் அனைத்தினையும் இவன்செய்தான் எனக் கருதாது அவையெல்லாம் நாமே செய்தது எனக்கருதியும்; யாதாமொருவர் இவனுக்குச் செய்யப்பட்ட நல்வினை தீவினை அனைத்தும் என்றனக்குச் செய்தது என்றும் எண்ணி,—

பவம் அகல உடன் ஆகி நின்று கொள்வன் பரிவால் பாதகத்தை செய்திடினும் பணி ஆக்கி விடுமே - இந்த ஞானவான்கள் சுத்தராதலால் அவர்கள் சென்மம் எடாமல் நீங்கும்படி சிவனும் அவர்களுடனே கூடி ஒன்றுபட்டுக்கொள்வன்; அஃதன்றி, சிவன்

இவர்களிடத்திலிருக்கிற நேசத்தாலே அவர்கள் மகத்தாகிய பாவங்களைச் செய்தாரேயாயினும் அவர் பணி யறுத்திருக்கையால் நன்மையாக்கிவிடும் என்றவாறு.

> '' சொன்ன ஞானி தனைத்துதித் தாரவன்
> முன்னம் செய்யறம் முற்று மடைவர்கள்
> இன்னல் சொற்றவ ரேய்வர் வன்கரி
> சன்ன மீபவர் ஞான மடைவரால். ''

எனவும,

> '' அருத்துக அமலன் தன்னை
> அகத்துணர்ந் தவரை யன்னம்
> கருத்திருந் தவர்க்குச் செய்த
> பூசனை கடவுள் கொள்வர்
> ஒருத்தருக் குபசா ரங்கள்
> உடலிடை யுலகர் செய்வர்
> பிரித்துட லுயிரைப் பேணும்
> பெற்றியை யாரே பெற்றார் ''
>
> — சிவதருமோத்தரம் - பலவிசேட - 10.

என்றும ஓதினர் எமது குரவர்.

இதறகுப பிரமாணம தேவிகாலோத்தரம், சிவ ஞானபோதம் என அறிக.

**2. நிரம்பவழகியர் :**

**அ - கை :** மேல் இப்படி உள்ளே கண்டு பூசித்து வருகிறேன் என்ற மாணுக்கனை நோக்கி அருளிச் செய்கின்றார்.

**இ - ள் :** இவன் உலகில் இதம் அகிதம் செய்த எல்லாம் இதம் அகிதம் இவனுக்கு செய்தார்பால்

இயையும் அவன் இவன் ஆய் நின்ற முறை ஏகன் ஆகி - பெத்தத்தில் சிவன் தோற்றம் இன்றி இந்த ஆன்மாவாய் நின்ற முறைமைபோல இவனும் தன் தோற்றம் இன்றிச் சிவனிடத்து ஏகனாய் நில்லாமல் நானும் தனியே ஒருமுதல் சிவனும் தனியே ஒருமுதல் என்று இப்படி இரண்டாக விசாரிக்கிறவர்களுக்கு விசாரிக்கிறநினைவு கிடைக்கையினாலே சிவன் தான் ஒருமுதல் இல்லை என்னும்படி அந்த ஆன்மாவேயாய் நிற்பன்; ஆகையால், சிவனைக்கூடுகை உண்டாகாது.—

*படித் தனதோற்றமற்றுச் சிவனாகி நின்ற இந்தப் பிரபஞ்சத்தில் சுகதுக்கங்களைப் புசிக்கிற இத்தது உண்டாகிய பிரியாப்பிரியங்கள் எல்லாம் இந்தச் சீவன்முத்தனாய் உள்ளவனுக்கு முன்புள்ள புண்ணியபாவம் எல்லாம் இல்லையாய்ப் போனபடியாலே இவனுக்கு விருப்பு வெறுப்புக்கள் செய்தவர்களிடத்திலே சென்று பொருந்தாநிற்கும்; இத்தன்மை கூடாதொழியில் மேலும் ஓர் உபாயம் அருளிச்செய்கின்றார் :*

அரன் பணியில் நின்றிடவும் அகலும் குற்றம் - அப்படி நிற்கக்கூடாதபொழுது சிவனுடைய ஏவல் என்றும் சிவனுடைய நியதி என்றும் நிற்கவும் மல மாயா கன்மம் ஆகிய குற்றங்கள் நீங்கும்.—

இவன் செய்தி எலாம் என் செய்தி என்றும் - இப்படித் தன்செயலற்று நிற்பானேயாகில் கர்த்தாவும் இவனாலே செய்யப்பட்டது எல்லாம் தன்னுடைய செயல் என்றும், —

செய்தது எனக்கு இவனுக்கு செய்தது என்றும் - இவனுக்குச்செய்த நன்மை தீமையெல்லாம் நமக்குச் செய்ததாயிருக்கும் என்றும்,—

பவம் அகல உடன் ஆகி நின்று கொள்வன் - இவனுக்கு உண்டான செனனங்களெல்லாம் விட்டுப் போம்படி ஆன்மா என்பது ஒருமுதல் அற ஆன்மா தானேயாய் ஒன்றுபட்டு அசைவற நில்லாநிற்பன்,—

பரிவால் பாதகத்தை செய்திடினும் பணி ஆக்கி விடும் ஏ - முன்சொன்ன முறைமையிலே நின்ற இவன் சிவனளவில் உண்டாகிய பத்தியினலே கொலே முதலாக உண்டாகிய பாதகங்களைச் செய்தானே ஆயினும் பரமேசுவரனும் இவனைவிட்டு நீங்காமல் நின்ற கலப்பாலே அதுவும் தன்னுடைய பணிவிடையாக்கி விடுவன் என்றவாறு.

*ற்குப் பிரமாணம் :*

*"தீதில்லை மாணி சிவகருமம் சிதைத்தானைச்*
*சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டும்*
*சேதிப்ப ஈசன் திருவருளால் தேவர்தொழப்*
*பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்"*

*—திருவாசகம் - திருத்தோணோக்கம் - 7.*

*என்னுமதும் கண்டுகொள்க.*

*இதனல் சொல்லியது, பெத்தத்தில் பரமேசுவரன ஆன்மாவாய் நின்ற முறைமைபோல இந்த ஆன்மாவும் இப்பொழுது தன்தோற்றம் அறச் சிவமாய் நிற்கவே மலமாயா கன்மங்கள் நீங்கும் என்னும முறைமை அறிவித்தது.* (க)

## செய்யுள்—304

**யான்செய்தேன் பிறர்செய்தார் என்னதுயான்என்னும்**
**இக்கோணை ஞானஎரி யால்வெதுப்பி நிமிர்த்துத்**
**தான்செவ்வே நின்றிட—அத் தத்துவன்தான் நேரே**
**தனையளித்து முன்நிற்கும் வினையொளித்திட்டோடும்**
**நான்செய்தேன் எனுமவர்க்குத் தானங் கின்றி**
**நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங்கன்மம்**
**ஊன்செய்யா ஞானந்தான் உதிப்பி னல்லால்**
**ஒருவருக்கும் யானெனதிங் கொழியா தன்றே.**

1. மறைஞானசம்பந்தர் :

சிவஞானம் உண்டாய் அதனாலே யான் எனது என்னும் செருக்கு அற்றவர்க்குச் சிவன் விளங்கித் தோன்றாநிற்பன் என்றும்; இந்த ஞானம் பெறாத வர்க்கு யான் எனது என்பது அகலாது, அவனும் தோன்றான் என்றும் உணர்த்துகின்றார்.

**என்பது:** யான் செய்தேன் பிறர் செய்தார் என்னது யான் என்னும் இ கோணை ஞான எரியால் வெதுப்பி நிமிர்த்து - நான் பிறர்க்கு நன்மைசெய்தேன் தீமை செய்தேன் பிறர் எனக்கு நன்மை செய்தார் தீமை செய்தார் என்பதும் யான் என்னும் அபிமான மும் எனது என்னும் அபிமானமும் என்று இவன் கூறிய கோணாகிய குற்றத்தை ஞானாக்கினியினாலே வெதுப்பி நிமிர்த்து.—

*அஃதாவது நம்மால் பிறருக்கும், பிறரால் நமக்கும செயலில்லை; அவரவர் கருமங்கட்கு ஈடாகச் சிவனே பலனகளைச் செய்வன் என்று ஞானத்தால் அறிவது என்க.*

தான் செவ்வே நின்றிட அ தத்துவன் தான் நேரே தனை அளித்து முன் நிற்கும் வினை ஒளித்திட்டு ஓடும் - தான் பெத்ததசையைக் கருதாது முத்தி தசையையுடையேன் என்றும் சிவனே எல்லாத்துக்கும் பிரேரகன் என்றும் கருதி அவன்வழித்தாய் நிற்கவே அப்பொழுது அந்த உண்மைப்பொருளாகிய சிவன் அவனிடத்தில் தானே பிரகாசித்துத் தோன்று நிற்பன்; அங்ஙனம் தோன்றிநிற்கவே: இவனிடத்து ஏறிய வினைகளெல்லாம் ஒளித்தோடிப்போம்.—

*ஒளித்தல் — வலிகெடுதல்.*

நான் செய்தேன் எனும் அவர்க்கு தான் அங்கு இன்றி நண்ணுவிக்கும் போகத்தை பண்ணுவிக்கும் கன்மம் - நான்என்னும்சுட்டுப்போதத்தைப்பொருந்தி அகங்கரித்து நான்செய்தேன் என்னும் ஆன்மாவுக்கு அவனுடன் சிவன் கலந்து நின்றனே ஆயினும் அவனுக்கு அப்பிரகாசியாய் நின்று கன்மத்தைச் செய்விப்பன்; அப்படிச் செய்வித்து ஏறின ஆகாமிய கன்மத்தால் மேல் வேறொரு சரீரம் எடுப்பித்துப் போகத்தைப் புசிப்பிப்பன்,—

ஊன் செய்யா ஞானம் தான் உதிப்பின் அல்லால் ஒருவர்க்கு யான் எனது இங்கு ஒழியாது அன்றே - ஆகையால் ஆன்மாக்கட்குக் குற்றத்தைப் போக்குவதான சிவஞானமானது பிரகாசியாவிடத்து ஒருவருக்கும் யான் எனது என்னும் இடும்பை ஒழியாது என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் காலோத்தரம், மதங்கம், சிவதருமோத்தரம் என அறிக.*

2. நிரம்பவழகியர் :

அ - கை: யான் என்னது என்னும் செருக்கு அற்றவர்களுக்கொழிந்து ஞானப்பிரகாசம் உண்டா காது என்று அருளிச்செய்கின்றார்.

இ - ள்: யான் செய்தேன் பிறர் செய்தார் என்னது யான் என்னும் இ கோணை ஞான எரியால் வெதுப்பி நிமிர்த்து - நான் பிறருக்கு ஒன்றைச் செய் தேன் என்றும் பிறர் தனக்கு ஒன்றைச் செய்தார்கள் என்றும் யான் என்றும் என்னுடைய பதார்த்தம் என்றும் பிறர் என்றும் பிறருடைய பதார்த்தம் என்றும் சொல்லுகிற அஞ்ஞானமாகிய முட்டினது திருக்கை ஞானக்கினியினாலே வெதுப்பி நன்றாக நிமிர்த்து.—

தான் செவ்வே நின்றிட - தான் அஞ்ஞான மாகிய குற்றத்தைவிட்டுச் சிவஞானத்துடனே கூடி ஞானத்தின்வழித்தாய் நிற்கவே.—

அ தத்துவன் தான் நேரே தனை அளித்து முன் நிற்கும் வினை ஒளித்திட்டு ஓடும் - அந்த ஞானத்துக்கு மேலாய் இருக்கிற சிவன் தானே புலப்படத் தன்னை இவன் வசத்திலேகொடுத்து ஆன்மா என்று ஒன்று இல்லை என்னும்படி தான் பிரகாசியாநிற்பன்; அப்படி நிற்கவே இவனுக்கு உண்டான பிராரத்தமும் அது புசிக்கச்செய்தே ஏறுகிற ஆகாமியமும் ஆதித்தன் சந்நிதியில் அந்தகாரம்போலத் தோன்றாமல் ஓடிப் போகாநிற்கும்.—

நான் செய்தேன் எனும் அவர்க்கு தான் அங்கு இன்றி - தன்னாலே செய்யப்பட்டது என்று அகங்கரித்து நிற்கிற பேதான்மாக்களுக்குக் கர்த்தா அவர்களுடனே பொருந்தி நிற்கச்செய்தேயும் தோன்றாமல் நின்று.—

நண்ணுவிக்கும் போகத்தை பண்ணுவிக்கும் கன்மம் - அவர்கள் முன்செனனங்களில் செய்த கன்மத்துக்கு ஈடாகச் சுகதுக்கங்களையும் புசிப்பித்து அது புசிக்கிற அவதரத்திலே இத அகிதங்களாகிய ஆகாமியத்தை உண்டாக்காநிற்பன்.—

*இப்படிச் சொல்லுகிற யான் எனது போம்படி எங்ஙனே ? எனின்,*

ஊன் செய்யா ஞானம் தான் உதிப்பின் அல்லால் - சர்வருக்கும் அநுக்கிரகத்தைச் செய்கின்ற சிவஞானம் பிரகாசியாதபொழுது —

ஒருவர்க்கும் யான் எனது இங்கு ஒழியாது அன்று ஏ - சர்வான்மாக்களுக்கும் யான் எனது என்று சங்கற்பித்துக்கொண்டு நிற்கிற பசுஞானம் விட்டுநீங்காது என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் :*

*“ நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுளம் உண்டாதல்*
*தானெனவொன் றின்றியே தானதுவாய்-நானெனவொன்(று)*
*இல்லென்று தானே எனுமவரைத் தன்னடிவைத்(து)*
*இல்லென்று தானும் இறை ”*

*—சிவஞானபோதம் : சூ. - 10, வெண்பா - 1.*

*என்னுமதும் கண்டுகொள்க.*

*இதனால் சொல்லியது, யான் எனனும் சங்கற்பத்தால் உண்டாகிய அஞ்ஞானத்தைச் சிவஞானத்தாலே நீக்கி அந்த ஞானத்தின்வழித்தாய நின்றவர்க்குச்சென்மம் உண்டாகாது என்றும். யான் எனது எனனும் சங்கற்பத்தோடே கூடி அஞ்ஞானமேயாய நின்றவர்களுக்குச் சென்மம் ஒழியாது என்றும் சர்வ ஆன்மாக்களுக்கும் சிவஞானம் உதயமாறலொழிந்து இந்த அஞ்ஞானம் போகாது எனனும் முறைமையும் அறிவித்தது.* (உ)

## செய்யுள் —305

**இந்திரியம் எனைப்பற்றி நின்றேனன் வசந்நின்**
**இசையாதே தன்வசத்தே எனையீர்ப்ப நிவற்றைந்**
**தந்தவன்றன் ஆணைவழி நின்றிடலால் என்றும்**
**தானறிந்திட்டிவற்றினெடுந்தனையுடையான் றாள்கள்**
**வந்தனைசெய் நிவற்றின்வலி அருளினால் வாட்டி**
**வாட்டமின்றி இருந்திடவும் வருஞ்செயல்களுண்டேல்**
**முந்தனுடைச் செயலென்று முடித்தொழுக வினைகள்**
**மூளாஅங் காளாகி மீளான் அன்றே.**

**1.** மறைஞானசம்பந்தர் :

இம்முறைகூடாது இந்திரியவசத்தனானால்; அதற்கு ஓர் உபாயம் உணர்த்துகின்றார்.

**என்பது:** இந்திரியம் எனை பற்றி நின்றே என் வசத்தின் இசையாதே தன் வசத்தே எனை ஈர்ப்பது - இந்திரியங்களானவை என்னுடன் கூடியிருந்தும் அவை என்வழித்தாய் வாராமல் தம்வழித்தாக்கி இழுத்துக் கொள்ளுகின்ற முறைமையினையும்,—

இவற்றை தந்தவன் தன் ஆணைவழி நின்றிடலால் என்றும் தான் அறிந்திட்டு - இந்திரியங்களை உண்டாக்கிப் பந்தித்த கர்த்தாவினது ஆக்கினையின்வழித்தாக அவைகள் நிற்குமுறைமையினையும் அறிந்து.—

அவற்றினெடும் தனை உடையான் தாள்கள் வந்தனை செய்து - அவ்விந்திரியங்களையும் தன்னையும் சுதந்திரமாகவுடைய சிவனுடைய சீபாதகமலங்களை வணங்கி,—

இவற்றின் வலி அருளினுல் வாட்டி - அவைகளால் வருத்தம் வந்தவிடத்து அந்தப்பலத்தை அருளினுல் கெடுத்து,—

வாட்டம் இன்றி இருந்திடவும் வரும் செயல்கள் உண்டேல் - இம்முறையில் அவைகளால் வருத்தம் இன்றி இருந்த இடத்தும் பூர்வவாசனையால் திரும்பவும் தம்வழித்தாய் இழுத்தவாயினும்,—

முந்தனுடை செயல் என்று முடித்து ஒழுக வினைகள் மூளா அங்கு ஆள் ஆகி மீளான் அன்றே - நாம் முன்னே ஆர்ச்சித்த கன்மங்கட்கு ஈடாகச் சிவனே செய்தது எனக்கருதி இதுவும் அவன்செயல் என்று அவற்றின்வழி ஒழுகின இடத்தும் பணியறுத்து நிற்பனுகில் இவனுக்கு ஒருக்காலும் கன்மம் ஏறப்பெரு ஆகையால் இவன் சிவனுக்கு ஆளாந்தன்மையினின்றும் சென்னத்தை அடையான் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் சிந்தியாகமம், சிவதருமோத்தரம் என அறிக.*

**2.** நிரம்பவழகியர் :

**அ - கை :** இந்தத் தன்மை கூடாதவர்களுக்கு மேலும் ஓர் உபாயம் அருளிச்செய்கின்ருர்.

இ - ள் ; இந்திரியம் எனை பற்றி நின்றே என் வசத்தின் இசையாதே தன் வசத்தே எனை ஈர்ப்ப — பஞ்சேந்திரியங்களிலும் யான் முதன்மையாயிருக்க அவை என்னைப் பற்றிக்கொண்டு நிற்கச்செய்தேயும் என்னுடைய வசத்திலே பொருந்திவாராமல் இவை என்னைத் தன்னுடைய வசத்திலே வலித்துக்கொள்ளுகிற இவையிற்றை,—

இவற்றை தந்தவன் தன் ஆணைவழி நின்றிடலால் என்றும் தான் அறிந்திட்டு — இந்திரியங்களை எனக்குக் கூட்டின பரமேசுவரனுடைய ஆக்கினைவழியிலே எப்பொழுதும் நிற்கிறது என்றும் இவையிற்றுக்கு ஒருசெயல் இல்லை என்றும் தான் அறிந்து.—

இவற்றிெடும் தனை உடையான் தாள்கள் வந்தனை செய்து - இந்த இந்திரியங்களோடும் தன்னை அடிமையாக உடைய பரமேசுவரனது சீபாதங்களிலே தன்செயல் அற்று அவன்செயலான முறைமையை

புவ ன் வ அருளினலே வாட்டி - இந்தப் பஞ்சேந்திரியங்களினது பலத்தைத் தம்பிரானருடைய அருளினலொழிந்து வாராது என்று அறிந்து அவையிற்றைக் கெடுத்து,—

வாட்டம் இன்றி இருந்திடவும் வரும் செயல்கள் உண்டேல் - இவையிற்றை நீக்கி மயக்க விகற்பங்கள்

கூடாமல் இருக்கலாம்; அப்படி இருக்கவே மீண்டும் இந்திரிய வியாபாரங்கள் வந்து கூடில்,—

முந்தனுடை செயல் என்று முடிந்து ஒழுக - கர்த்தாவினுடைய செயல் ஒழிந்து இந்திரியங்கள் தானுகவந்துகூடாது என்று அறுதியிட்டு நிற்கவே,—

வினைகள் மூளா - இந்த முறைமையிலே நின்று பிராரத்தம் புசிக்கிற இவர்களுக்கு ஆகாமியம் ஏறு,—

அங்கு ஆள் ஆகி மீளான் அன்று ஏ - அந்தப் பரமேசுவரனுக்கு அடிமையாயவனை விட்டுநீங்காமல் நிற்பன் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் :*

*'' நாமல்ல இந்திரியம் நம்வழியின் அல்லவழி*
*நாமல்ல நாமும் அரனுடைமை - ஆமென்னில்*
*எத்தனுவில் நின்றும் இறைபணியார்க் கில்லைவினை*
*முற்செய்வினை யுந்தருவான் முன் ''*

*—சிவஞானபோதம் : சூத் - 10, வெண்பா - 2.*

*என்னுமதும் கண்டுகொள்க.*

*இதனால்சொல்லியது இவனுலுள்ள செயல்கள் எல்லாம் சிவனுடைய செயல்கள் என்று காணவே ஆகாமியம் ஏறுது என்னும் முறைமை அறிவித்தது.*

(௩)

செய்யுள்—306

**சலமிலனுய் ஞானத்தால் தனையடைந்தார் தம்மைத்**
**தானுக்கித் தலைவனவர் தாஞ்செய்வினை தன்னுல்**
**நலமுடனே பிறர்செய்வினை யூட்டியொழிப் பானுய்**
**நணுகாமல் வினையவரை நாடிக் காப்பன்**

உலகினில்என் செயலெல்லாம் உன்விதியே நீயே
உள்நின்றும் செய்வித்தும் செய்கின்றா யென்றும்
நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே யென்றும்
நினைவார்க்கு வினைகளெல்லாம் நீங்குந் தானே.

**1.** மறைஞானசம்பந்தர் :

கைம்மாறு கருதாது அநுக்கிரகம் செய்வது சிவனுக்குச் சுபாவம் என்று உணர்த்துகின்றார்.

**என்பது:** சலம் இலன் ஆய் ஞானத்தால் தனை அடைந்தார் தம்மை தான் ஆக்கி தலைவன் அவர்தாம் செய் வினை தன்னால் நலமுடனே பிறர் செய் வினை ஊட்டி ஒழிப்பானாய் நணுகாமல் வினை அவரை நாடி காப்பன் - சிவனானவன் தனக்கு ஒருவரிடத்திலும் விருப்பு வெறுப்பு இல்லாதவனாய் நமக்கும் பிறர்க்கும் செயலில்லை அவரவர் கன்மங்கட்கு ஈடாக எல்லாம் செய்விக்கின்றான் என்று அறியாமல் நாமே செய்கின்றோம் என்னும் ஆன்மாக்கள் கன்மங்களை அறிந்து ஏறாமல் குறையாமல் அவையிற்றுக்கு உசிதமான போகங்களை அவருக்கு நன்மையாகிய கிருபையுடனே கூடிக்கொடுத்துப் புசிப்பித்துத் தொலைப்பிப்பானு மாய்க் கன்மங்களைச் செய்யுமிடத்து ஆன்மாக்கட்கு ஒருசெயலும் இல்லை எல்லாம் சிவன்செயல் என்று அறிந்து ஞானமார்க்கத்தினாலே தன்னை அறிந்து பொருந்தினவர்களைத் தன்னைப்போல் ஆக்கி அவர் செய்த கன்மங்கள் அவரைப் பொருந்தாமல் அறிந்து பாதுகாவாநிற்பன்,—

உலகினில் என் செயல் எல்லாம் உன்விதியே நீயே உள் நின்றும் செய்வித்தும் செய்கின்றாய் என்றும் -

இப்பிரபஞ்சத்தின்கண் யான்செய்யும் செயலெல்லாம் நீ கற்பித்த நியமமே நீதானே என்னுள் நின்றும் இவை எல்லாவற்றையும் செய்வித்தும் செய்கின்றாய் என்றும்,—

*உண்ணின்றும் என்னும் உபமையால் புறம்பேயும் எனக் கூறியதாயிற்று.*

நிலவுவது ஓர் செயல் எனக்கு இன்று உன் செயலே என்றும் நினைவார்க்கு வினைகள் எல்லாம் நீங்கும் தான் ஏ - ஆனபடியினாலே இப்படிப் பணி யறுத்து எண்ணுவாரிடத்து உண்டாகிய கன்மங்கள் எல்லாம் சிவானுக்கிரகத்தால் அவர்களைப் பொருந்தா என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் சர்வஞானோத்தரம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை:** இப்படிச் சிலரை இரட்சித்தான் என்னில், பட்சவாதி ஆகானோ? என்ற அவிகார வாதியை நோக்கி அருளிச்செய்கின்றார்.

**இ - ள்:** சலம் இலன் ஆய் ஞானத்தால் அடைந்தார் தம்மை தான் ஆக்கி தலைவன் - சிவ ஞானத்தாலே தன்னை அடைந்தவர்களை இரட்சித்துத் தன்னைப்போலே ஆக்கிக் கொள்ளுகின்ற இது கர்த்தா வுக்கு உள்ளது ஆகையாலே தன்னை அடைந்தவர்களை இரட்சிக்கச்செய்தேயும் பிறரோடு வெறுப்பில்லை,—

*இப்படிச் சிவனைப் பெற்றவர்கள் இந்திரிய வியா பாரத்தோடு கூடியிருந்தால் மீளவும ஆகாமியம ஏருதோ? எனனில்,*

அவர் தாம் செய் வினை தன்னால் நலமுடனே பிறர் செய் வினை ஊட்டி ஒழிப்பான் ஆய் - தன்னை அடைந்த அடியாரைச் சிவன் தானாக்கி இருக்கச் செய்தேயும் இந்திரிய வியாபாரங்களுடனே கூடி இருந்தார்கள் ஆயினும் அவர்கள் முன்புசெய்த கன் மத்துக்கு ஈடாகப் பிறரால் பலிக்கிற பலன்களும் இவர்கள் பிறருக்குப் பலிக்கிற பலன்களும் இவை யெல்லாம் சிவனுடைய செயல் என்று காணவே சிவனும் புசிப்புமாத்திரம் புசிப்பித்துத் துலைப்பிப் பானாய் நின்று,—

நணுகாமல் வினை அவரை நாடி காபபன - அப் படித் தன்செயலற்று நின்றவர்களுக்கு ஆகாமியம் ஏருமல் திருவுளம்பற்றிப் பாதுகாத்துக்கொள்வன்,—

*இந்த உண்மையைப பெற்றவர்கள நிற்கும முறைமை அருளிச்செய்கினருர்:*

உலகினில் என் செயல் எல்லாம் உன் விதியே நீயே உள் நின்றும் செய்வித்தும் செய்கின்ருய் என்றும் - பிரபஞ்சத்திலே நான் செய்கிற தொழில்கள் எல்லாம் நீ நியமித்ததே; நீதானே எனக்குள்ளே நின்றும் இவை எல்லாம்செய்கின்ருய் செய்விக்கின்ருய் என்றும்,—

நிலவுவது ஓர் செயல் எனக்கு இன்று உன் செயலே என்றும் - எனக்கு இப்பொழுது பொருந்தப் பட்டது யாதொருசெயல்கள் எல்லாம் உன்னுடைய செயலே என்றும்,—

நினைவார்க்கு வினைகள் எல்லாம் நீங்கும் தான் ஏ – இங்ஙனம் சொல்லப்பட்ட முறைமையைச் சிவனுடைய ஞானத்தால் கண்டுநிற்பார்க்கு எல்லாக் கன்மங்களும் விட்டுநீங்காநிற்கும் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம்;*

*'' முன்னம் அடியேன் அறியாமை யினால்*
*முனிந்தென்னை நலிந்து முடக்கியிடப்*
*பின்னை அடியேன் உமக்காளும் பட்டேன்*
*சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்*
*தன்னை அடைந்தார் வினைதீர்ப்ப தன்றோ*
*தலையாயவர் தங்கட னாவதுதான்*
*அன்ன நடையார் அதிகைக் கெடில*
*வீரட் டானத்துறை அம்மானே ''*

*—திருநாவு - திருவதிகை - 4.*

*எனவும்,*

*'' சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்*
*சார்ந்தாரைக் காத்தும் சலமிலனாய்ச் - சார்ந்தடியார்*
*தாந்தானாய்ச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்தல்*
*ஆய்ந்தார்முன் செய்வினையும் ஆங்கு ''*

*—சிவஞானபோதம் : சூத் - 10, வெண்பா - 3.*

*என்னுமதும கண்டுகொள்க.*

*இதனால் சொல்லியது, பக்குவான்மாக்களை இரட்சிக்கையினால் சிவன பட்சவாதி அல்லன் என்றும, சிவனைப் பெறறவர்கள பிராரத்தம் புசிக்குமிடத்து உண்டாகிய செயல்கள எல்லாம சிவனுடைய செயலே என்றும காணவே அவர்களுக்கு ஆகாமியம ஏறாது என்னும் முறைமையும அறிவித்தது.* (௪)

செய்யுள்—307

நாடுகளிற் புக்குழன்றும் காடுகளிற் சரித்தும்
நாகமுழை புக்கிருந்தும் தாகமுதல் தவிர்ந்தும்
நீடுபல காலங்கள் நித்தரா யிருந்தும்
நின்மலஞா னத்தையிலார் நிகழ்ந்திடுவர் பிறப்பில்
ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே
எறிவிழியின் படுகடைக்கே கிடந்துமிறை ஞானம்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே இருப்பர்.

1. மறைஞானசம்பந்தர் :

இத்தன்மையில்லாதார் சிறப்பின்மையும். ஙஃது உள்ளாரது சிறப்புண்மையும் உணர்த்துகின்றார்.

**என்பது:** நாடுகளில் புக்கு உழன்றும் காடுகளில் சரித்தும் நாகம் முழை புக்கு இருந்தும் தாகம் முதல் தவிர்ந்தும் நீடு பல காலங்கள் நித்தர் ஆய் இருந்தும் நின்மல ஞானத்தை இலார் நிகழ்ந்திடுவர் பிறப்பில் - சிவஞானத்தைப் பெறாதவர்கள் பூப்பிரதட்சிணம் பண்ணித்திரிந்தாலும், புறப்பற்றை அற்று வனங்களில் சஞ்சரித்தும் மலை முழைஞ்சுக்குள்ளே புகுந்து யோகம் சாதித்திருந்தாலும், சருகும் வாயுவும் புசித்துத் தாகம் முதலிய தவிர்ந்திருந்தாலும், அநேக காலம் நித்தியத்துவம் பெற்றிருந்தாலும் இறுதியின் கண் பூமியினிடத்துப் பிறவாநிற்பர்,—

ஏடு தரு மலர் குழலார் முலை தலைக்கே இடைக்கே எறி விழியின் படு கடைக்கே கிடந்தும் இறைஞானம்

கூடுமவர் கூட அரிய வீடும் கூடி குஞ்சித்த சே அடி யும் கும்பிட்டே இருப்பர் - அந்தச் சிவஞானத்தைப் பொருந்தினவர்கள் இதழினையுடைய பூக்கள் பொருந் தின குழலையுடைய மாதர்முலை நுனியினும், அல்குற் றடத்தினும், கொடிதாகிய விழிகளின் கடைக்கண் பார்வையினும் அகப்பட்டுக் கூடியிருந்தார்களே யாயினும் தாமரையிலை சலத்திற்கூடியிருந்தும் அதில் பற்ருதவாறுபோல அந்த விடயங்களின் வசமாகாமல் பற்றற்றிருந்து பெறுதற்கரிய முத்தியினைப் பொருந்திப் பரமானந்த தாண்டவத்தைப் புரிந்தருளா நின்ருே னது தூக்கிய சீபாதத்தை அனவரதமும் அநுசந் தானம் பண்ணிக்கொண்டிராநிற்பர்கள் என்றவாறு.

*சேவடியும் என்ற உம்மை சிறப்பின்கண் வந்தது.*

*இதற்குப் பிரமாணம சர்வஞானேத்தரம், இரத் தினத்திரயம், பத்திரகிரி என அறிக.*

2. நிரம்பவழகியர் :

**அ - கை:** பிரபஞ்ச வியாபாரங்களைவிட்டு நீங்கி அரிய தபசுகளைப் பண்ணினலும், சர்வமும் சிவ னுடைய செயல் என்று அறியாதவர்களுக்குச் செனனம் நீங்காது என்றும், சர்வமும் சிவன்செயல் என்று அறிந்தவர்களுக்குச் செனனம் நீங்கும் என்றும் மேல் அருளிச்செய்கின்ருர்.

**இ - ள்;** நாடுகளில் புக்கு உழன்றும் - பூப்பிர தட்சிணம் முதலாக எல்லா இராச்சியங்களும் புக்குத்

ரம்,—

காடுகளில் சரித்தும் – வனசரிதராய்த்திரிந்தும்,—

நாகம் முழை புக்கு இருந்தும் – மலை முழைஞ்சுகளிலேயிருந்து தவசுபண்ணியும்,—

தாகம் முதல் தவிர்ந்தும்–ஆகாரம் நித்திரை பயம் மைதுனம் என்னும் உடற்குணங்களைவிட்டும்,—

நீடு பல காலங்கள் நித்தர் ஆய் இருந்தும் - எண்ணிறந்த நெடுங்காலங்கள் நித்தத்துவம் பெற்றிருந்தும்,—

நின்மல ஞானத்தை இலார் நிகழ்ந்திடுவர் பிறப்பில் - சிவனுடைய ஞானத்தைப் பெருதவர்களுக்குச் செனனம் உண்டாகாநிற்கும்,—

*இத்தன்மையனறி,*

ஏடு தரு மலர் குழலார் முலைதலைக்கே இடைக்கே எறி விழியின் படு கடைக்கே கிடந்தும் இறை ஞானம் கூடுமவர் கூட அரிய வீடும் கூடி குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே இருப்பர் - இதழ்பொருந்தின மலரையுடைய கூந்தலார்களுடைய முலைமுகத்திலே அவர்கள் மருங்குலிலே காமத்துறை இலக்கு ஆகாமல் அம்பிலும் கடிதாகப்பட்டுப் பறியப் பார்க்கின்ற கொடிய கடைக்கண்களிலே கிடந்தார்களாயினும் பரமேசுவரனுடைய ஞானத்தைக் கூடினவர்கள் யாவராலும் கூடுதற்கு அரிய மோட்சத்தையும் பொருந்திக் குனிப்பையுடைய சீபாதத்தையும் தொழுதுகொண்டிருப்பார்கள் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம :*

*'' வீட்டிலே சென்று வினையொழிந்து நின்றிடிலென்*
*நாட்டிலே நல்வினைகள் செய்திடிலென் – கூட்டில்வாள்*
*சாத்தியே நின்றிலையேல் தக்கனுர் வேள்விசெய்த*
*மாத்திரமே யாம்கண்டாய் வந்து ''*

*—திருக்களிற்றுப்படியார் - 63.*

*என்னுமதும கண்டுகொள்க.*

*இதனால் சொல்லியது பிரபஞ்சவியாபாரங்களை விட்டு அரிய தபசுகளைப் பண்ணினாலும் சர்வமும் சிவனுடைய செயல் என்று அறியாதவர்களுக்குச் சென்னம நீங்காது என்றும், சர்வமும் சிவனுடைய செயல் என்று அறிந்தவர்களுக்கு இந்திரியவியா பாரத்தோடு கூடியிருந்தாலும் சென்னம நீங்கும் என்னும் முறைமையும அறிவித்தது.* (ரு)

செய்யுள்—308

**அங்கித்தம் பனைவல்லார்க் கனல்சுடா தாகும்**
**ஔடதமந் திரமுடையார்க் கருவிடங்கள் ஏறு**
**எங்கித்தைக் கன்மமெலாஞ் செய்தாலும் ஞானிக்(கு)**
**இருவினைகள் சென்றணையா முற்செய்வினை இங்குத்**
**தங்கிப்போம் பாத்திரமும் குலாலன்வினை தவிர்ந்த**
**சக்கரமும் கந்தித்துச் சுழலுமாபோல்**
**மங்கிப்போய் வாதனையால் உழல்விக்கும் எல்லா**
**மலங்களும்பின் காயமொடு மாயு மன்றே.**

**1.** மறைஞானசம்பந்தர் :

இத்தன்மையினையுடைய சீவன்முத்தர் வாதனை யினாலே கன்மங்களைச் செய்தார்கள் ஆயினும்

அவையிற்றைப் பொருந்தார்கள் ஆதலால் அவருக்கு ஆகாமியமும் ஏருது என்று உணர்த்துகின்ருர்.

**என்பது:** அங்கி தம்பனே வல்லார்க்கு அனல் சுடாதாகும் ஔடதம் மந்திரம் உடையார்க்கு அரு விடங்கள் ஏரு எங்கித்தை கன்மம் எலாம் செய்தாலும் ஞானிக்கு இருவினைகள் சென்று அணையா - அங்கித் தம்பனம் வல்லவர்க்கு அனல்சுடாதவாறுபோலவும், ஔடத மந்திரபலத்தையுடைய சித்தபுருடரானவர் களே விடசத்தி வாதியாதவாறு போலவும் ஞான வான்கள் எங்தெந்தக் கன்மங்களேச் செய்தாரே யாயினும் அந்தந்த இருவினைப் பலன்களும் அவரைப் பொருந்தி வாதைபண்ண மாட்டா.—

*'ஔடதம்' 'மந்திரம' எனபதனே இருபாலும கூட்டுக.*

முன் செய் வினே இங்கு தங்கி போம் பாத்திரமும் குலாலன் வினே தவிர்ந்த சக்கரமும் கந்தித்து சுழலும் ஆ போல் மங்கி போய் வாதனையால் உழல்விக்கும் - பூர்வத்தில் உண்டான கன்மானுகுணமான சரீரத்தி லுண்டான பிராரத்தகன்மம் கெட்டுப்போய் வாதனே சிறிது இருந்து சுகதுக்கங்களே உறுவித்துச் சிறிது உழலப்பண்ணும். அஃது என்போல? என்னில், பெருங்காயமிருந்த பாண்டமானது அப்பெருங்காயம் முற்றும்போயிருந்தாலும் அந்தப் பாண்டம் நாற்ற முண்டாயிருக்கும்; இருந்தும் மேல் அதனுல் ஒரு பிரயோசனம் இல்லாததுபோலவும், குயவன் திரிகை யில் ஏற்றின மண் கடத்தை உண்டாக்கினபின் குலாலன் சுற்றும் திரிகையையொழிந்தும் அந்த

வாதனையினாலே மேல் சுழன்று தானே ஒழிந்துபோம் அது போலவும்,—

*இந்த வாதனாத்மிகம மீளவும ஓர் உடலையுண்டாக்குமோ? என்னின், அக்கினியைசசேர்ந்த வித்தானது பின முளையாதவாறுபோல் என அறிக.*

எல்லா மலங்களும் பின் காயமொடு மாயும் அன்று ஏ - இந்த ஆன்மா சரீரத்தைவிட்டு முத்தியடையும் பொழுது முற்கூறிய வாதனாத்மிகமாகிய கன்மமும் மாயையும் ஆணவமும் கெடாமல் தன்சத்தி வலிகெட்டுநிற்கும் என்றவாறு.

*அபபொழுது தடையினறி முத்தியடைவன என்றறிக.*

*'' உக்கொளியா தொளிக்குமிருள் உதயகதி ரொளிமுன்னே*
*பக்குவத்திற் பசுபாச வலியடங்கும் பரமசிவன்*
*நக்கனுயிர்க் கருள்புரிய நசித்ததல வசித்ததல*
*நெய்க்கனனீங் குதலென்ன மாயேய நிலைதுலையும்''*

*என்றார் எமது குரவர்.*

*இதற்குப் பிரமாணம் சிவதருமோத்தரம், கிரணம், சுப்பிரபேதம் என அறிக.*

*மறைஞானசம்பந்ததேசிகர் உரை முடிந்தது.*

**2. நிரம்பவழகியர் :**

**அ - கை :** இப்படிக்கொத்த ஞானவான்கள் இந்திரியவியாபாரங்களோடு கூடியிருக்கச் செய்தே அவையிற்றில் தோயாமல் நின்றமுறைமை எங்ஙனே? என்ற மாணாக்கனை நோக்கி அருளிச்செய்கின்றார்.

இ - ள் : அங்கி தம்பனை வல்லார்க்கு அனல் சுடாது ஆகும் - அக்கினிக் கட்டாகிய உபதேசம் வல்லவர்களுக்கு, அந்த அக்கினியிலே நடக்கச் செய்தே அக்கினி சுடாமல் அவர்கள்வசமாய் இருந் தாற் போலவும்.—

ஔடதம் மந்திரம் உடையார்க்கு அரு விடங்கள் ஏறு - ஔடதப் பிரயோகமும் மந்திரத் தியானமும் உடைய விடகாரிகளைத் தீர்த்தற்கு அரிதாகிய விடங் கள் பொருந்திலும் அந்தவிடங்கள் ஏறாமல் அவர்கள் வசமாய்க் கிடந்த தன்மைபோலவும்.—

எங்கித்தை கன்மம் எலாம் செய்தாலும் ஞானிக்கு இரு வினைகள் சென்று அணையா முன் செய்வினை - எல்லாக்கன்மங்களையும் ஞானவான்களா யுள்ளவர்கள் செய்யார்கள்; வாதனையாலே செய்தார்க ளாயினும் திரிபதார்த்தத்தைத் தரிசித்துச் சிவனல்லது ஒன்றும் நடவாது என்கிற விசாரத்தை அறுதியாக உடைய சிவஞானிகள் சுகதுக்கங்களைப் புசிக்குமிடத் துண்டான விருப்பு வெறுப்பு இவர்கள்வசமாவது ஒழிந்து இவர்கள் அதன்வசம் ஆகார்கள்; ஆகையால், ஆகாமியமானது சென்று பொருந்தாது.—

*முன்பு பிராரத்தம் புசிக்கச் செய்தேயல்லோ ஆகாமியம் ஏறிவந்தது; இப்போது பிராரத்தம் புசித்தானகிலுமிளவும் ஆகாமியம் ஏறாதோ? எனனில், ஆகாமியம் ஏறாமல்போகிற வழியும் மேல் அருளிச் செய்கின்றார் :*

இங்கு தங்கி போம் பாத்திரமும் குலாலன் வினை தவிர்ந்த சக்கரமும் கந்தித்து சுழலும் ஆ போல் -

பெருங்காயம் இட்டிருந்த பாத்திரம் மீளவும் நாறின தன்மை போலவும் குலாலன் திரிகையைத் திரியாமல் கைவிட்டாலும் முன்பு திரித்த விசை உள்ள அளவும் சுழன்றாற்போலவும்.—

மங்கி போய் வாதனையால் உழல்விக்கும் - முன்பு உள்ள பிராரத்தகன்மமும் ஆசாரியன்செய்த அத்துவ சோதனையாலே தீரப்போய் இருக்கச்செய்தேயும் வாதனுமாத்திரத்தாலே ஞானவான்களிடத்துப் பிரா ரத்த கன்மம் தேகத்தோடேகூடிச் சீவியாநிற்கும்.—

*அப்படிச் சீவிப்பித்ததாமாயினும் பினனை ஒரு சென்னனத்துக்கு ஏது ஆகாது; அது எங்ஙனே? எனனில்,*

எல்லா மலங்களும் பின் காயமொடு மாயும் அன்று ஏ - அப்படிப் பிராரத்தம் புசிக்கச்செய்தேயும் ஏறின ஆகாமியமும் அந்தக் கன்மத்துக்கு ஈடாக எடுக்கிற மாயாதேகமும் உண்டாகாது; அந்த ஞான வான் தற்போதம் சீவியாமல் அந்த ஞானமாய் நிற்கிற கோட்பாட்டாலே ஆணவம் மாயை காமியம் என்கிற மலங்களெல்லாம் வாதனையாலே சரீரமுள்ளமட்டும் நின்று பின்பு அந்தச்சரீரத்தோடேமாயும் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் :*

*'' நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்*
*பண்ணமர மாச்செலுத்தும் பாகரினும் — எண்ணி*
*அரனடி ஓர்பவர் ஐம்புலனில் சென்றும்*
*அவர்திறன் நீங்கார் அதற்கு ''*

*—சிவஞானபோதம் : சூத் - 10, வெண்பா – 5.*

*என்றும்,*

ை ) வாங்கும் கலம்போல ஞானிபால்
முன்செய் வினைமாயை மூண்டிடினும் — பின்செய்வினை
மாயையுடன் நில்லாது மற்றவன்றன் மெய்ப்பொருளே
ஆயவத னுலுணரும் அச்சு ''

—சிவஞானபோதம் . சூத் - 10. வெண்பா - 4.

என்னுமதும் கண்டுகொள்க.

இதனால் சொல்லியது சிவனைப் பெற்றவர்கள் இந்திரியங்களோடு கூடியிருந்தார்களாயினும் அந்த இந்திரியங்கள் இவர்களவசமாய் இருக்குமதொழிந்து இவர்கள அதனவசம் ஆகார்கள; ஆகையால் இவர்களுக்கு ஆகாமியம ஏருது என்றும, பெருங்காயம இட்ட பாத்திரமபோலப் பிராரத்தகன்மம வாதனை மார்க்கததாலே கூடிவந்ததாயினும அதில் ஏறின ஆகாமியத்தினுல் மேல ஒரு சரீர தொடர்ந்தனை உண்டாகாது எனனும முறைமையும அறிவித்தது. (சு)

நிரம்பவழகியதேசிகர் உரை முடிந்தது.

பயனியல் - பத்தாஞ்சூத்திரம் முடிந்தது.

# பயனியல்

## பதிஞேராஞ்சூத்திரம்

### செய்யுள்—309

காயமொழிந் தாற்சுத்த னகி ஆன்மாக்
  காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய கண்ணுக்(கு)
ஏயும்உயிர் காட்டிக்கண் டிடுமா போல
  ஈசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவன் இத்தை
ஆயுமறி வுடையனய் அன்பு செய்ய
  அந்நிலைமை இந்நிலையின் அடைந்தமுறை யாலே
மாயமெலாம் நீங்கிஅரன் மலரடிக்கீழ் இருப்பன்
  மாருத சிவானுபவம் மருவிக் கொண்டே.

**1. மறைஞானசம்பந்தர் :**

மேல் பதிஞெராஞ்சூத்திரம் என்னுதலிற்ருே? எனின், இப்படிப் பந்தத்திலே கிலேசமுற்றுப் பந்தங்களை நீங்கின சீவன்முத்தர்க்கு உபகாரம் செய்த சிவனது திருவடியை அடைந்து அவனிடத்தில் பத்தி செய்யுமாறு உணர்த்துதல் நுதலிற்று

மேல் இத்தலைச்செய்யுள் என்னுதலிற்ருே? எனின், எல்லாவற்றையும் காணும் கண்ணுக்கு ஆன்மா காட்டாய் நின்று உபகரித்தல் போல ஆன்மாவுக்குச் சிவன் உபகரிக்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

**என்பது :** காயம் ஒழிந்தால் சுத்தன் ஆகி ஆன்மா—ஆன்மாவானவன் பிராரத்ததேகம் போனவாறே மலங்கள் நீங்கி ஓடவைத்த பொன்போலச் சுத்தத்தை அடைந்து.—

காட்ட கண்டிடும் தன்மையுடைய கண்ணுக்கு ஏயும் உயிர் காட்டி கண்டிடுமா போல - ஒருவன் காட்டக் காணும் முறைமையினையுடைய கண்ஆன்மா காட்டாநிற்கக் காணுமாறுபோல.—

ஈசன் உயிர்க்கு காட்டி கண்டிடுவன் - தானுக ஒரு விடயங்களையும் அறியமாட்டாத ஆன்மாவுக்குக் கன்மங்களை அறிந்து மேலான சிவன் காட்ட அப்பொழுது காணுநிற்பன்,—

இத்தை ஆயும் அறிவு உடையன் ஆய் அன்பு செய்ய - இந்தச் சிவனுலல்லோ நாம் அறிந்தோம் மலம் போய் நின்மலமானேம் என்னும்தன்மையை ஆராய்ந் தறியும் அறிவுடையவனாய் அந்தச் சிவனிடத்தில் பத்தி செய்ய,—

அ நிலைமை இ நிலையில் அடைந்த முறையாலே - இப்படி ஆன்மாவானவன் நாடோறும் சோகம் பாவனைபண்ணி அயிக்கியமாய் இருக்கவே அதன் பின்பு சிவனைப்போலத் தானும் நின்மலனாயிருக்கும் தன்மையுடையன் ஆதலாலே,—

மாயம் எலாம் நீங்கி அரன் மலர் அடி கீழ் இருப் பன் மாறுத சுவானுபவம் மருவி கொண்டே - ஆன்மா தன்னிடத்து அனவரதமும் நீங்காதிருக்கின்ற சுவானந் தானுபூதியாகிய *ஆன்மசத்தியினது இன்பத்தைப் பொருந்திக் கொண்டு மலத்தினுலே வரும் மயக்க

)க் கண்கட்டி - மறைஞானபண்டாரம் முதலியோரை ஸ்ரீ குருஞானசம்பந்ததேசிகமூர்த்திகள் முத்திநிச்ச மறுத்தமை காண்க.

விகற்பங்களை விட்டுநீங்கிச் சிவனது திருவடிப் புறத் தின் கீழேயிராநிற்பன் என்றவாறு.

*தன்னிடத்துண்டான அநுபவம சுவாநுபவம்; இஃது வடமொழி. சிவாநுபவம என்று உரைக்கில் அஃது இசையா. மூலசூத்திரமாகிய சிவஞானபோ தத்தில் சுவாநுபூதிமான் என்று ஓதியிருக்கையி னாலும், மற்றுள்ள ஆகம புராணங்களில் கூறுகையி னாலும் எனறறிக.*

*இதனை எமது குரவர் பரமோபதேசம் என ஒரு நூலாககி விரித்துக் கூறினர்; ஆண்டுக் காண்க.*

*இதற்குப பிரமாணம சர்வஞானோத்தரம், சூத சங்கிதை, பிரமகீதை என அறிக.*

**2.** நிரம்பவழகியர் :

**அ – கை :** இந்தச் சரீர சம்பந்தம் நீங்கினால் ஆன்மாக்கள் சிவனுடைய திருவடியைப் பெறுவது எப்படி? என்ற மாணுக்கனைநோக்கி மேல் அருளிச் செய்கின்றார்.

**இ - ள் :** காயம் ஒழிந்தால் சுத்தன் ஆகி ஆன்மா காட்ட கண்டிடும் தன்மையுடைய கண்ணுக்கு ஏயும் உயிர் காட்டி கண்டிடுமா போல ஈசன் உயிர்க்கு காட்டி கண்டிடுவன்; இத்தை ஆயும் அறிவு உடைய னாய் அன்பு செய்ய அ நிலைமை இ நிலையின் அடைந்த முறையாலே மாயம் எலாம் நீங்கி அரன் அடி கீழ் இருப்பன் மாறாத சிவானுபவம் மருவிக்கொண்டு ஏ -

(மாயம் எலாம் நீங்கி காயம் ஒழிந்தால் சுத்தனுகி ஆன்மா என்று கூட்டுக) காட்டக்காணும் தன்மை யினையுடைய கண்ணுக்குக் காட்டுகிற முறைமை யினையுடைய ஆன்மா காட்டக்காணும் கண்ணைப் போல இவ்வான்மாக் காணும்பகுதிக்குள்ள கன்மத் தைச் சிவன் திருவுள்ளத்திலே அறிந்து ஆன்மாவுக்கு அறிவிக்க அறிவன்; இந்த உபதேசத்தினுலே ஆராய்ந் தறிந்து மறவாதே பத்திபண்ணின் அந்தப் பத்தியி னுடையநிலை ஏதுவாக இப்பொழுது சிவனைக் கூடுகிற முறைமையாலே மலம் மாயா கன்மங்கள் உண்டாகிய மயக்கங்களெல்லாம் விட்டு நீங்கியிருந்து பிராரத்தத் தொலைவிலே சரீரம் ஒழிந்தால் ஆன்மாச் சுத்தனுய்ப் பரமேசுவரனுடைய தாமரைமலர் போன்ற சீபாதத் தின் கீழே இருப்பன்; இருக்குமிடத்தும் ஒழியாத சிவானுபவத்தைப் பொருந்திக் கொண்டிருப்பன் என்றவாறு.

*இதனுல் சொல்லியது பெத்தத்தன்மையில் பரமேசுவரன் உபகரித்துநின்ற முறைமையை அறிந்து மறவாமல் பத்திபண்ண, அந்தப் பத்தி ஏதுவாக உண்டாகிய ஞானத்திறுலே நமது பரமேசுவரனுடைய சீபாதத்தை அணையும் என்னும் முறைமையும அறிவித்தது.* (5)

செய்யுள்—310

**பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே**
**பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க**
**வருஞானம் பலஞானம் அஞ்ஞான விகற்பம்**
**வாச்சியவா சகஞானம் வைந்தவத்தின் கலக்கம்**

தருஞானம் போகஞா திருஞான ஞேயம்
தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகும்
திருஞானம் இவையெல்லாம் கடந்தசிவ ஞானம்
ஆதலால் சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர்.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் அந்தச் சீவன்முத்தர்கள் ஞேயத்து அழுந்தும் முறைமை உணர்த்துகின்றார்.

என்பது: பரஞானத்தால் பரத்தை தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் - மேலான சிவஞானத்தினாலே சிவனைத்தரிசித்தசிவஞானிகள் தேகாந்தமளவும் அந்தச் சிவத்தையே தரிசித்துக்கொண்டிருப்பார்கள்,—

பதார்த்தங்கள் பாரார் - பிரபஞ்சப்பொருள்களைப் பார்த்திரார்கள்,—

*அஃது என்போல? எனனில், அமிர்தபானம பண்ணினவன விடமபுசிக்க விரும்பாதவாறுபோல.*

‡ *'' உலகுளார் பெறுது துஞ்சும் . . . .*
*. . . . அவனலால் ஞேயம் யாதே ''*

*— சிவதருமோத்தரம் - சிவஞானயோக - 5.*

*என்பதனுனும் அறிக.*

பார்க்க வரு ஞானம் - பிரபஞ்சத்தில் பொருள்களைப் பார்க்கவரு ஞானமானது,—

‡ இப்பாடலை 1033-ம் பக்கத்தில் காண்க.

பலஞானம் அஞ்ஞான விகற்பம் - விசுவத்தில் கடபடாதி ஞானங்களெல்லாம் பலஞானமாம்; அவைகளை விகற்பமாக விசாரித்துப் பார்க்கில் அதுவும் அஞ்ஞானமாம், —

வாச்சிய வாசக ஞானம் வயிந்தவத்தின் கலக்கம் தரு ஞானம் - வாய்வழக்காய்ச் சொல்லப்படாநின்ற சத்தார்த்த ஞானத்தால் உண்டான ஞானங்களெல்லாம் விந்துவில் தோன்றிய வைகரிஞானமாம்; அது பரஞானபந்தமாம்.—

போக ஞாதிரு ஞான ஞேயம் தங்கிய ஞானம் சங்கற்பனை ஞானம் ஆகும் - இவைகள் அன்றிப் புசிப்பைப் பொருந்தின ஞாதிரு ஞான ஞேயங்களாகிய ஞானங்களும் ஆன்மபோதத்தால் சுட்டி அறிகிற ஞானங்களாம்; அவையெல்லாம் சங்கற்பனை ஞானம் ஆகையினாலே இவையிற்றால் சிவத்தை அறியக்கூடாது.—

திருஞானம் இவையெல்லாம் கடந்த சிவஞானம் - அழகிய ஞானமானது இவை எல்லாவற்றிற்கும் மேலாய்ச் சிவத்தைப் பிரகாசிப்பிக்குமதாய் உள்ள விசிட்டமான சிவஞானமே.—

ஆதலால் சீவன்முத்தர் சிவமே கண்டிருப்பர் - ஆகையினாலே சீவன்முத்தர் அந்த ஞானத்தால்தானே பரமசிவனைத் தரிசித்து அனவரதமும் அவனுடன் அநுசந்தானம் பண்ணிக்கொண்டிராநிற்பர் என்றவாறு.

*"ஞாயதேநேந்தண" வியுற்பத்தியாலே ஞானம் எனனும பதம உண்டாயிற்று என அறிக. இது வடமொழி.*

*வாச்சிய வாசக ஞானம் அபரம் ஆதலால் தள்ளி னார். பதிஞானம், பிரத்தியட்சம் அநுமானம் ஆகமம் இம்மூன்றினாலும் அறியப்படாமையால் சிறப்புடைத் தெனக் கூறியதாயிற்று.*

*இதற்குப பிரமாணம் சர்வஞானோத்தரம், சிவ தருமோத்தரம், யோகஜம், சிந்தியம், மிருகேந்திரம் என அறிக.*

**2. நிரம்பவழகியர் :**

**அ - கை :** சரீரதொந்தனை நீங்கின் பரமுத்தியிலே சிவானுபூதியைப் பெறுமது ஒழிந்து சரீரத்தோடே கூடியிருக்கச் சிவானுபூதி உண்டாவது எப்படி? என்ற மாணாக்கனைநோக்கி மேல் அருளிச்செய்கின்றார்.

**இ - ள் :** பரஞானத்தால் பரத்தை தரிசித்தோர் - மேலான சிவஞானத்தாலே அசத்தியத்தை அசத்தியம் என்று அறிந்து நீங்கிச் சத்தியமாய் உள்ள பரமே சுவரனைத் தரிசித்தவர்கள்,—

பரமே பார்த்திருப்பர் - அந்தப் பரமேசுவரனை எவ்விடத்திலும் கண்டிருப்பார்கள்,—

பதார்த்தங்கள் பாரார் - வாதனாமார்க்கத்தாலே பிரபஞ்ச விடயங்கள் மேலிட்டாலும் அதில் கூடார்கள்,—

பார்க்க வரு ஞானம் பல ஞானம் அஞ்ஞான விகற்பம் - அந்தவிடயங்களோடும் கூடிநின்று பார்க்க உண்டான அறிவு வெகுவிதமான அறிவு மாயாமயக்க விகற்பமுமாய் இருக்குமதொழிந்து.—

வாச்சிய வாசக ஞானம் வைந்தவத்தின் கலக்கம் தரு ஞானம் போகம் - வைந்தவமாகிய சுத்தமாயையில் உண்டான வாசகம் ஆகிய சத்தமும் வாச்சியமாகிய அத்தமுமாய் இருக்கிற அறிவு, சத்தந்தான் பிரமம் என்றும் அத்தந்தான் பிரமம் என்றும் மயக்கத்தைத் தருகிற ஞானமாம்; அவை நீங்க,—

ஞாதிரு ஞான ஞேயம் தங்கிய ஞானம் சங்கற்பனை ஞானம் ஆகும் - காண்பானும் காட்டுவதும் காணப்படுகிற பொருளுமாய் இருக்கிற ஞானம் சங்கற்பித்து அறிகிற ஞானமாம்; அவை நீங்க,—

திருஞானம் இவை எல்லாம் கடந்த சிவஞானம் - அழகிய ஞானமாவது இவை எல்லாத்துக்கும் அப்பாற்பட்டு வாக்கு மனோகோசரமாய் இருக்கிற சிவஞானமாயிருக்கும்.—

ஆதலால் சீவன்முத்தர் சிவமே கண்டிருப்பர் - ஆகையினாலே சீவன்முத்தராய் உள்ளவர்கள் வாதனையாலும் அபுத்தி பூர்வத்தால் உண்டாகிய பிராரத்தம் புசித்துத்தொலையும் அளவும் கனவிலும் நனவிலும் அந்தச் சிவத்தையே தரிசித்துக் கொண்டிருப்பார்கள் என்றவாறு.

*இதனால் சொல்லியது உபதேசக்கிரமத்திலே உண்மையைப்பெற்ற சீவன்முத்தராய் உள்ளவர்கள் பிரபஞ்சவிடயங்களையும் அசுத்தமும் சுத்தமுமாய் இருக்கிற வைந்தவஞானத்தையும் விட்டு ஞாதிரு ஞான ஞேயங்களையும் கழன்று இவையிற்றுக்கு மேற்பட்டுச் சிவஞானத்தாலே சிவனைத்தரி*

*அநவரதமும் அந்தச் சிவமேயாய் இருபபார்கள் எனனும முறைமையும் அறிவித்தது* (உ)

செய்யுள்—311

**அநாதிஉடல் ஒன்றினைவிட் டொன்றுபற்றிக் கன்மால்**
**ஆயழிந்து வருதலால் அந்த மில்லை**
**பினுதியருள் பெற்றவர்கள் நித்தவுரு வத்தைப்**
**பெற்றிருக்கை முத்தியெனிற் பெறும்பதமே இதுவும்**
**இனுதுநிலை இதுதானுங் காய முண்டேல்**
**இருங்கன்ம மாயைமல மெல்லா முண்டாம்**
**மனுதிதரு முடலாதி காரியத்தால் அநாதி**
**மலமறுக்கும் மருந்தற்ருல் உடல்மாயுங் காணே.**

**1.** மறைஞானசம்பந்தர் **:**

மேல் சிவசமவாதி சரீரம்நீங்கி முத்திபெற வேண்டுமோ? முத்தியினும் நித்தியத்துவம் பெற்றிருக்கலாமோ? என்று வினவ உணர்த்துகின்ருர்.

**என்பது :** அநாதி உடல் - இந்தச்சரீரம் அநாதி.—

*அஃது எக்காரணுல்? எனனில்,*

ஒன்றினை விட்டு ஒன்று பற்றி கன்மால் ஆய் அழிந்து வருதலால் - பழம்புடைவையைப் போட்டு வேருெரு புதுப்புடைவையை உடுக்குமாறுபோலக் கன்மத்துக்கு ஈடாக எடுத்த தூல உடலைவிட்டு வாசனுத்மிகமாகிற சூக்குமதேகத்துடன் கூடி மற்ருெர் உடலை எடுத்துப் பிறந்து இறந்து செல்லப் பிரவாகம் போலச் செனனந்தோறும் தொடர்ந்து பிரவாகாஞதியாக வருகையினுலே,—

அந்தம் இல்லை - உலவாக்கிழிபோல் இத்தேகத் துக்கு முடிவில்லை.—

பின் ஆதி - பின்பு ஒருகாலத்தில் மாயா காரிய மான வடிவை எடுத்து நாசம் அடைந்திருக்கையால் ஆதி எனவும் பெறும்.—

அருள் பெற்றவர்கள் நித்த உருவத்தை பெற் றிருக்கை முத்தி எனில் - சிவானுக்கிரகத்தைப் பெற்ற முத்தான்மாக்கள் நித்தியமான உருவத்தைப் பெற் றிருப்பதே முத்தியென்று நீ சொல்லில்,—

பெறும் பதமே இதுவும் - இந்த நித்தியத்துவம் பெற்றிருப்பதும் ஒரு பதப்பிராப்தியைப் பெற்றிருப் பதுகாண்,—

இறைது நிலை இது தானும் - இப்படி நித்தியத் துவம்பெற்ற சரீரந்தானும் பொல்லாததே.—

*அஃது எக்காரணத்தால்? எனில்,*

காயம் உண்டேல் இரும் கன்மம் மாயை மலம் எல்லாம் உண்டாம் - சரீரம் என்பது ஒன்று உண் டாகவே அதற்கு ஏற்ற கன்மம் உண்டாம்; அஃது உண்டாகவே மாயை மலம் இவைகளெல்லாம் உண்டாய்விடுங்காண்,—

மறுதி தரும் உடல் ஆதி - மனோவாக்குக் காய மாகிய மூவிதத்தினாலும் ஆர்ச்சித்த கன்மம் உண்டா கவே அதற்கேற்றதொரு தனு கரண புவன போகம் உண்டாம் ஆதலால் இதுவும் மறுதியெனப்பெறும்.—

காரியத்தால் அநாதி - செனனந்தோறும்தொடர்ந்து காரியப்பட்டு வருதலினாலே பிரவாகானாதி எனப் பெறும்,—

*ஆனால் இது மாயாதோ? என்னில்,*

மலம் அறுக்கும் மருந்து அற்றால் உடல் மாயும் அன்றே - வைத்தியனாகிய சிவன் மாயாகாரியமாகிய மருந்தைக் கொடுத்து மலவாதனையாகிய வியாதியைப் போக்கவே பின்பு ஒருக்காலும் சரீரம் உண்டாகாமல் போம் என்றவாறு.

*இதனால் கன்மத்துக்கு ஆதியும் அநாதியும் கூறவே கன்மக்ஷயம் கூறியதாயிற்று.*

*இதற்குப் பிரமாணம் சிந்தியம் என அறிக.*

2. நிரம்பவழகியர் :

**அ - கை :** சிவசமவாதி சரீரம் நீங்கி முத்தியைப் பெறவேணும் என்றது எப்படி? முத்தியிலும் சரீரம் நித்ததத்துவத்தைப் பெற்றிருக்கும் என்று சொல்ல அவனை மறுத்து மேல் அருளிச்செய்கின்றார்.

**இ - ள் :** அநாதி உடல் ஒன்றினை விட்டு ஒன்று பற்றி கன்மால் ஆய் அழிந்து வருதலால் அந்தம் இல்லை - அநாதியே ஆன்மா கன்மத்துக்கு ஈடாக ஒரு தேகம் போக ஒருதேகம் எடுத்துக்கொண்டு உண்டாயும் இல்லையாயும் வருகையாலே தேகத்துக்கு ஒருக்காலும் முடிவில்லை; இத்தன்மை ஒழிந்து.—

பின் ஆதி அருள் பெற்றவர்கள் நித்த உருவத்தை பெற்றிருக்கை முத்தி எனில் - இப்படிக் கன்மம்

தொலைந்தபின்பு வேட்டுவாளி ஒன்றும் அறியாப் பச்சைப்புழுவை எடுத்துத் தன்சொரூபம் ஆக்கினதன்மைபோல, ஒன்றும் அறியாமல் கிடக்கிற ஆன்மாவையும் சிவனுடைய ஞானம் எடுத்துத் தன் சொரூபம் ஆக்க அந்த மாயா உடலே நித்ததத்து வத்தைப் பெற்றிருக்கிறவர்கள் சொரூபத்தை நீங்கி யும் பெற்றிருக்கிறது முத்தி என்று நீ சொல்லில்,—

பெறும் பதமே இதுவும் - சரியை கிரியா யோகங் களைச் செய்தவர்கள் பெறுகிற பதமுத்தியொழிந்து சாயுச்சியம் ஆகாது,—

இறுது நிலை இதுதானும் காயம் உண்டேல் ம் கன்மம் மாயை மலம் எல்லாம் உண்டாம் - இந்த முத்திதானும் பொல்லாதது ஒன்று, அது எப்படி? என்னில், ஒரு வடிவு உண்டானபொழுதே வேறு விதமான கன்மமும் அதனாலே மாயையும் இவ்விரண் டிற்கும் காரணமாய் இருக்கிற மலமும் சர்வமும் உண்டாகாநிற்கும்,—

மறுதி தரும் உடல் ஆதி காரியத்தால் அநாதி மலம் அறுக்கும் மருந்து - மனம் புத்தி ஆங்காரம் தன்மாத்திரை என்று சொல்லும் புரியட்டகதேகம் முதலான தனு கரண புவன போகங்கள் என்று சொல்லும் மருந்தைக் கொண்டே பரமேசுவரன் அநாதியே ஆன்மாக்களை மறைத்துக்கொண்டுநிற்கிற மலத்தைப் போக்காநிற்பன்,—

அற்றால் உடல் மாயும் காண் ஏ - ஆகையால் அந்த ஆணவமலம் போகவே நீ முத்தியில் அழியாது

என்ற மாயாசரீரமும் அழிந்து போம் என்று அறி வாயாக என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் :*

*'' முன்னேன் தனது முதிரொளி ஞானம்*
*அறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த*
*வண்டென உயிரைக் கொண்டிடும் உயிரது*
*தன்னை நோக்கித் தான்அது வாகி*
*ஐவகைத் தொழிலும் மெய்வகை உணர்வும்*
*பிரியா வாறு பெற்றுத்*
*திரியாப் பெரியோர் திரட்சிசேர்ந் திடுமே ''*

*—சங்கற்ப - சிவசமவாதி சங்கற்பம்.*

*என்றும்,*

*'' முத்தி யுற்ற நற்றவர் அவையிடைச்*
*சேர்வர் என்றனை சார்தரு முத்தி*
*சாலோக் கியமோ சாயுச் சியம்எனில்*
*பந்த முற்ற கந்தல கழித்த*
*அறிவினே டறிவு பிறியாப் பெற்றி*
*வேண்டு மென்றதற் கீண்டிவர் இவ்வா(று)*
*இருப்பர் என்பதற் குருத்தான் வேண்டும்*
*இச்சா ரூபம் நச்சினர் என்னின்*
*மும்மலத் தேதும் இன்மைய தன்றே ''*

*—சங்கற்ப - சிவசமவாதி நிராகரணம்.*

*என்னுமதும கண்டுகொள்க.*

*இதனல் சொல்லியது சிவசமவாதி அருளைப் பொருந்தின ஆன்மாக்களுடைய மாயாதேகம தானே முத்தியில் அநித்ததத்துவத்தைப் பெற்றிருக்கும என்று சொல்ல, அது பதமுத்தியாவதொழிந்து*

*சாயுச்சியம் ஆகாது என்றும், யாதொரு சரீர தொந்தனை உள்ளமட்டும் மூன்று மலமும் நீங்காது என்றும், இந்த மாயாசரீரம் மலத்தைப் போக்க வந்தது என்றும், ஆகையால் இந்த மலம் நீங்கின போதே மாயாசரீரமும் நீங்கும் என்னுமமுறைமையும் அறிவித்தது.* (ரு)

செய்யுள்—312

தெரிவரிய மெய்ஞ்ஞானம் சேர்ந்த வாறே
சிவம்பிரகா சிக்குமிங்கே சீவன்முத்த னாகும்
உரியமல மௌடதத்தால் தடுப்புண்ட விடமுங்
ஒள்ளொளியின் ஒளிமுன்னர் இருளுந் தேற்றின்
வருபரல்சேர் நீர்மருவு கலங்கலும்போ லாகி
மாயாதே தன்சத்தி மாய்ந்து காயம்
திரியுமள வும்உளதாய்ப் பின்பு காயஞ்
சேராத வகைதானுந் தேயு மன்றே.

**1.** மறைஞானசம்பந்தர் :

இந்தச் சீவன்முத்தர் முற்கூறிய மலவாதனை கெட்டு நிற்குமதற்கு உதாரணமிட்டுணர்த்துகின்றார்.

**என்பது :** தெரிவு அரிய மெய்ஞ்ஞானம் சேர்ந்த வாறே சிவம் பிரகாசிக்கும் - முத்தான்மாவுக்கு யாவராலும் அறிதற்கரிய உண்மைஞானம் பொருந்தியுண்டான இடத்துச் சிவம் விளங்கித் தோன்றாநிற்கும், —

இங்கே சீவன்முத்தன் ஆகும் - அப்போது இவ்விடத்திலேதானே சீவன்முத்தன் ஆவன், —

*அஃதாவது இதாகிதம வந்தவிடத்தில் பிரியாப் பிரியம இனறிச் சமவோட்ட காருசருய்ச் சிவத்துடன கூடித் தேகாபிமானம் அறறிருக்கை.*

உரிய மலம் - அவனுக்கு அநாதி உரிமையாய் அவனே எவ்விடத்தும் விட்டுநீங்காத ஆணவமலம்,—

*அவனிடத்து எபபடி யிருக்கும? எவ்வளவு கால மிருந்து எந்தககாலம் போம ? எனனில்,*

ஔடதத்தால் தடுப்புண்ட விடமும் - ஔடத சத்தியால் வாதை செய்யாமல் தடைப்பட்டிருக்கும் சர்ப்பாதி விடங்களைப்போலவும்,—

ஒள் எரியின் ஒளி முன்னர் இருளும் - மிகுந்த அக்கினிப் பிரகாசத்தின் முன் அந்தகாரத்தின் வலி கெட்டு அடங்கி நிற்குமாறு போலவும்,—

தேற்றின் வரு பரல் சேர் நீர் மருவு கலங்கலும் போல் ஆகி - தேற்றம் வித்திஞல் தேற்றப்பட்ட கலங்கலான நீர் அந்த மண்ணைக் கீழ்ப்படுத்தி அது தோன்ருமல் தானே தெளிந்து மேற்பட்டு நின்ருற் போலுமாய், —

மாயாதே தன் சத்தி மாய்ந்து - தான் கெடாமல் தன்சத்தி கெட்டு,—

காயம் திரியும் அளவும் உளதாய் - இப்படியே தேகாந்தமளவும் உண்டாயிருந்து,—

பின்பு காயம் சேராத வகை தானும் தேயும் அன்றே - இந்தக்காயம் போனபின் வேருருதேகம்

எடாதபடி பண்ணிநின்று அது தானும் போம் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம சுப்பிரபேதம், கிரணம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** முன்சொன்ன ஆணவமலம் நீங்குவது எப்படி? என்ற மாணுக்கனை நோக்கி அருளிச் செய்கின்றார்.

**இ - ள் :** தெரிவு அரிய மெய் ஞானம் சேர்ந்த வாறே சிவம் பிரகாசிக்கும் - ஆன்மாவுக்கு அநாதியே யுள்ள மலசம்பந்தத்தினலே அறிதற்கரிய உண்மை ஞானம் சத்திநிபாதம் பிறந்து மலம் நீங்கி அந்தச் சிவ ஞானத்தைப் பொருந்தினபொழுதே சிவப்பிரகாசம் உண்டாகாநிற்கும்,—

இங்கே சீவன்முத்தன் ஆகும் - அப்பொழுதே இந்தச்சரீரத்தோடே இருக்கச்செய்தே சீவன்முத்தனுய் விடுவன்,—

*மலம் கூடிநிற்கச்செயதே முத்தனுவது எபபடி? என்னில்,*

உரிய மலம் - மற்ற மலங்களைப்போல விட்டும் பற்றியும் நில்லாமல் எப்பொழுதும் ஆன்மாவுக்குச் சகசமாய் இருக்கிற ஆணவமலமானது,—

அவுடதத்தால் தடுப்புண்ட விடமும் - ஔட தத்தினலே தடைப்பட்ட விடமானது தான் கெடா மல் சத்தி கெட்டுநிற்கிற முறைமைபோலவும்,—

ஓள் எரியின் ஒளி முன்னர் இருளும் - நன்றாக விட்டுவிளங்காநின்ற அக்கினிப்பிரகாசத்தின் முன்னே தான்கெடாமல் கெட்டுநிற்கிற அந்தகாரம்போலவும்,-

தேற்றின் வரு பரல் சேர் நீர் மருவு கலங்கலும் போல் ஆகி - தேற்றும் விதையாலே தேற்றப்பட்ட நீரில் கலங்கலானது தான் கெடாமல் கெட்டுநிற்கிற முறைமைபோலவும்.—

மாயாதே தன் சத்தி மாய்ந்து - அந்த மலமும் தன்னுடைய நித்ததத்துவம் கெடாமல் ஆன்மாவை மறைக்கிற சத்திகள் கெட்டு; அப்படிக் கெட்டும்,—

காயம் திரியும் அளவும் உளது ஆய் - ஆன்மா தேகத்துடனே கூடித் திரியுமளவும் உண்டாய்,—

பின்பு காயம் சேராத வகை தானும் தேயும் அன்று ஏ - பின்பு ஒரு தேகம் வந்து கூடாதபடி இந்தத் தேகத்துடனே மாய்ந்து போகா நிற்கும் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம :*

*'' பொன்வாள்முன் கொண்மூவில் புக்கொடுங்கிப் போயகலத்*
*தன்வாளே எங்குமாம் தன்மைபோல் - முன்வாள்*
*மலத்தின் மறைந்துள்ள மற்றுலகை யுண்ணும்*
*மலத்திரித்துச் செல்லும் வரத்து ''*

—சிவஞானபோதம்: சூத் - **11**, வெண்பா - **6**.

*என்னுமதும கண்டுகொள்க.*

*இதனல் சொல்லியது அநாதியிலே இவனோடு கூடிநிற்கிற சிவனும இவனுடையமலசம்பந்தத்தாலே*

*இவனுக்குப் பிரகாசியாதுநின்ற முறைமையும, பினபு மலம் நீங்கின இடத்துச் சடக்கெனச் சிவம பிரகாசிக்கும என்கிற முறைமையினையும அறிவித்தது. (௪)*

செய்யுள்—313

ஆணவந்தான் அநாதிஅந்த மடையா தாகும்
அடையினந்த ஆன்மாவும் அழியுமெனிற் செம்பிற்
காணலுறுங் களிம்பிரத குளிகைபரி சிக்கக்
கழியுஞ்செம் புருநிற்கக் கண்டோ மன்றே
தாணுவின்தன் கழலிணையத் தவிரும்மலந் தவிர்ந்தால்
தான்சுத்த னுயிருக்கை முத்திஅரன் தாளைப்
பூணவேண் டுவதொன்று மில்லையெனின் அருக்கன்
புகுதஇருள் போம்அடியிற் பொருந்தமலம் போமே.

**1.** மறைஞானசம்பந்தர் :

மேலும் அவன் அநாதியான ஆணவமலம் முத்தியில் கெடுமாயின் ஆன்மாவும் நாசமடையும் என,
. . . னின்றார்.

என்பது : ஆணவம் தான் அநாதி அந்தம் அடையாதாகும் - ஆணவம் என்கின்ற பாசம் அநாதியாதலால் அது நாசத்தைப் பொருந்தாது.—

அடையின் அந்த ஆன்மாவும் அழியும் எனின் - நித்தியமாய்ச் சகசமாய் இருக்கும் மலம் அழிந்தக்கால் அநாதியாய் உள்ள ஆன்மாவும் அழியும் என்று நீ சொல்லின் அஃதன்று.—

செம்பில் காணல் உறும் களிம்பு இரதகுளிகை பரிசிக்க கழியும் செம்பு உரு நிற்க கண்டோம் - செம்பி னிடத்து எல்லாரும் காணப்பட்ட காளிதமானது சகசமாய் இருக்கவும் இரதகுளிகை பரிசித்தவுடனே அக்காளிதமானது அழிந்துபோம்; போயும் செம்பி னது சொரூபம் அழியாமல் நிற்கக்கண்டோமே.—

அன்றே தாணுவின் தன் கழல் அணைய தவிரும் மலம் - அப்படிப்போலச் சிவனது சீபாதத்தை அடைந்தகாலத்து மலம் நீங்கும் ஆன்மாவும் நாச மின்றி நிற்குங்காண்.—

தவிர்ந்தால் தான் சுத்தனாய் இருக்கை முத்தி அரன் தாளை பூண வேண்டுவது ஒன்றும் இல்லை - அஃது ஒக்கும் ஆன்மாவுக்கு அநாதி சமவாயசம்பந்த மாய்க் கூடியிருந்துள்ள மலம் நீங்கின இடத்து அந்த ஆன்மாச் சுத்தனானவன் தானே பிரதானனாய் இருக்கு மதுவே முத்தி. இஃது அன்றிச் சுத்தனுமாய்ப் பிரதான னுமாய் இருக்கையினாலே இவனுக்குச் சிவனது சீபாதத்தைக் கூடவேண்டுவதோர் பணியுமில்லை.—

எனின் - என்று நீ சொல்லில்.—

அருக்கன் புகுத இருள் போம் அடியில் பொருந்த மலம் போமே - ஆதித்தியப் பிரகாசம் உண்டான இடத்து எப்படி அந்தகாரம்போம் அதுபோல இந்த ஆன்மாவும் பிரதானனாயிருந்தால் முத்தியே அடையப் படான்; சிவனது சீபாதத்தைச் சார்ந்து நிற்கவே மலம் போம்; அன்றிப் போகாது என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் கிரணம், இரௌரவம் என அறிக.*

2. நிரம்பவழகியர் :

**அ - கை:** இப்படி ஆணவமலம் முத்தியில் கெடும் என்றது எப்படி? என்ற பேதவாதிமதம் மேல் அருளிச்செய்கின்றார்.

இ - ள்: ஆணவம் தான் ஆதி அந்தம் அடையாது ஆகும் - ஆணவமலமானது அநாதியே ஆன்மா உள்ள அன்றே உள்ளது ஆகையாலே அதற்கு நாசம் உண்டாகாது என்று சொல்லில்,—

*மலம் நாசமானால் ஒழிந்து ஞானம் உண்டாகாது தான் என்னில்,*

அடையில் அந்த ஆன்மாவும் அழியும் எனில் - ஆணவமலம் அழியுமாகில் அநாதியான ஆன்மாவும் அழியவேணும் என்கிறாயாகில்,—

*ஆன்மாவுக்கு அழிவுண்டாகாது, பாசத்துக்கு அழிவுண்டு; அது என்போல? எனின்,*

செம்பில் காணல் உறும் களிம்பு இரத குளிகை பரிசிக்க கழியும் செம்பு உரு நிற்க கண்டோம் அன்று ஏ - அநாதியே செம்பிலே பொருந்தி நிற்கிற காளிதமானது இரதகுளிகையினது சம்பந்தத்தாலே கழிந்து போயும் செம்பினது சொரூபம் அழியாமல் நிற்கக் கண்டோம் ஆகையால்,—

*ஆன்மாவும் அழியும என்கிறது கருத்தன்று; முத்தியில் பாசம் அழியும என்ற பேதவாதிமதம் மேல் அருளிச்செயகின்றார்:*

தாணுவின் தன் கழல் அணைய தவிரும் மலம் - பரமேசுவரனுடைய சீபாதத்தைச் சேரவே அப்பொழுதே மலம் போம்,—

தவிர்ந்தால் தான் சுத்தனாய் இருக்கை முத்தி - அந்த மலம் போனால் ஆன்மா சுத்தனாயிருக்கிறதே மோட்சம்,—

அரன் தாளை பூண வேண்டுவது ஒன்றும் இல்லை எனில் - அதனைப் பெற்ற பின்பு பரமேசுவரன் சீபாதத்தைச் சற்றும் பொருந்தவேண்டுவது இல்லை என்று நீர் சொல்லில்,—

*அது கருத்தன்று; ஆனால், எப்படி? என்னில்,*

அருக்கன் புகுத இருள் போம் அடியில் பொருந்த மலம் போம் ஏ - ஆதித்தன் தோற்ற அந்தகாரம் போனாற்போல அவனுடைய சீபாதத்தைப் பொருந் தினலொழிந்து மலம் விட்டுப்போகாது என்றவாறு.

*முத்தியில் மலம் அழியாது என்றது பேதவாதி நிராகரணம். இதற்குப் பிரமாணம்:*

*" மறைகள் ஆகமத் துறைகள்மற் றெவையும*
*நாசமில் பதிபசு பாசமென் றுரைத்தல்*
*அயர்த்தோர் குளிகைச் சயத்தால் தாமிரக்*
*காளித நாசம் பாசத் தேய்த்தல்*
*கூடாது "*

*—சங்கற்ப - பேதவாதி நிராகரணம்.*

*எனனுமதும் கண்டுகொள்க.*

முத்தியில் மலம் அழியும் என்றவன் பேதவாதி. இதற்குப் பிரமாணம்:

" ஈசன தருளால் பாசத் தொகுதி
செறிவுறு செம்பில் களையுறு களிம்பு
குளிகை தாக்க ஒளிபெற் றுங்கு
நித்த முத்த சுத்த ராக
வைத்தனர் உலகில் மறைவல் லோரே "

—சங்கற்ப - பேதவாதிசங்கற்பம்.

என்னுமதும கண்டுகொள்க.

இதனால் சொல்லியது பாசம் அழியாது என்றும், அழியும் என்றும் சொன்ன சமயிகளை மறுத்து முத்தியில் பாசத்தின சத்திகள் ஒழியுமது ஒழிந்து நித்தியம் அழியாது என்றும், சத்திகள அழியுமிடத்தும் ஆதித்தன சந்நிதியில் அந்தகாரம போனறபோல் சிவனுடைய சீபாதத்தைப பொருந்தி வேறறநின்றால் மலம்போம் என்னுமமுறைமையும் அறிவித்தது. (ரு)

## செய்யுள்—314

நெல்லினுக்குத் தவிடுமிகள் அநாதி யாயே
நெல்லைவிட்டு நீங்கும்வகை நின்றநிலை நிகழ்ந்தீர்
சொல்லியிடில் துகளற்ற அரிசியின்பா லில்லை
தொக்கிருந்து மற்றொருநெல் தோன்றி டாவாம்
மெல்லஇவை விடுமறவே இவைபோல அணுவை
மேவுமல முடல்கன்மம் அநாதிவிட்டே நீங்கும்
நல்லசிவ முத்தியின்கட் பெத்தான் மாவை
நணுகிநிற்கு மாதலினால் நாசமுமின் றுமே.

**1. மறைஞானசம்பந்தர் :**

மேல் அந்த ஆணவமலம் முத்தான்மாக்களைப் பொருந்தாமல் பெத்தான்மாக்களைப் பொருந்திநிற்கும் என்று உணர்த்துகின்றார்.

**என்பது :** நெல்லினுக்கு தவிடு உமிகள் அநாதி ஆயே நெல்லை விட்டு நீங்கும் வகை நின்ற நிலை நிகழ்த்தீர் – நெல்லுக்குத் தவிடும் உமியும் அநாதியா யிருக்கவும் அந்த நெல்லைவிட்டு நீங்கி அவைகள் நிற்கும் முறையைச் சொல்லவேணும் என்று கேட் கிறாயாகில்,—

சொல்லியிடின் துகள் அற்ற அரிசியின் பால் இல்லை - சொல்லுமிடத்து அவ்வுமியும் தவிடும்போகத் தீட்டிச் சுத்தமான அரிசியின்கண் அவை இல்லை,—

தொக்கு இருந்தும் மற்று ஒரு நெல் தோன்றிடா ஆம் - இவை இரண்டும் கூடியிருந்தும் வேறொரு நெல்லைச் சென்று பொருந்தமாட்டா,—

மெல்ல இவை விடும் அறவே - இவையிரண்டும் அநாதியாய் இருக்க ஓர் அவதரத்தின் மெத்தென விட்டுப்போகா நிற்கும்,—

இவை போல அணுவை மேவும் மலம் உடல் கன்மம் அநாதி விட்டே நீங்கும் - அந்தத் தவிடும் உமியும் போல மலமாயா கன்மங்களினுடைய அநாதித்துவம் ஓர் அவதரத்தில் விட்டுநீங்காநிற்கும்,—

*அவைகட்கு அவதரம யாது? எனின்,*

நல்ல சிவ முத்தியின் கண் - சுத்தான்மாக்கள் சிவத்தைக்கூடி முத்தியைப் பொருந்தின இடத்துப் போகாநிற்கும்.—

பெத்தான்மாவை நணுகி நிற்கும் - மற்றப் பெத்தான்மாக்களை எப்பொழுதும் பொருந்திநிற்கும்.—

நாசமும் இன்றும் ஏ - ஆகையால் முத்தான்மாக்களிடத்து மலமுமில்லை, பெத்தான்மாக்களைக் குறித்து அதற்குக் கேடுமில்லை என்றவாறு.

*உமி தவிடு போன அரிசி சுபாவமாயிருக்குமோ? வேறு கனமாந்தரத்தை அடையுமோ? எனின், அப்படி அடையவும் செய்யாது; தண்டுலத்துவமும் நாசமாகாது; பரிணமமும் அடையாது. இப்படி முத்தான்மாக்கட்கும் கண்டுகொள்க.*

*இதற்குப் பிரமாணம் பெரியகிரணாகமம், சுப்பிர பேதம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ - கை :** அநாதியாயிருக்கிற பாசங்கள் நீங்கும் என்றது எப்படி? என்ற சிவசமவாதியை நோக்கி, நெல்லுக்கு உண்டான தவிடும் உமியும் அநாதியா யிருக்கவும் நீங்குகிற முறைமைபோல என்று அருளிச் செய்கின்றார்.

**இ - ள்:** நெல்லினுக்கு தவிடு உமிகள் அநாதி யாயே நெல்லை விட்டு நீங்கும் வகை நின்ற நிலை நிகழ்த்திர் - நெல்லுக்கு உண்டான தவிடும் உமியும் அநாதியாயிருக்க அந்த நெல்லைவிட்டுப்போம்படியும்

அதனிடத்திலே நிற்கும் என்கிற முறைமையும் எனக்குச் சொல்லவேணும்.—

சொல்லியிடில் துகள் அற்ற அரிசியின் பால் இல்லை - அதனை உனக்குச் சொல்லுமிடத்துச் சுத்த மான அரிசியில் தவிடும் உமியும் உண்டாகாது.—

*அந்த அரிசியிலே உமியும தவிடும் இரண்டும் மீளவும கூடிக்கிடந்தாலும பொருந்துமோ? என்னில்,*

தொக்கு இருந்தும் மற்று ஒரு நெல் தோன்றிடா ஆம் - இவை இரண்டும் கூடியிருந்தும் துகளற்ற அரிசி வேறொருநெல் உண்டாகைக்கு அங்குரியாது.—

மெல்ல இவை விடும் அறவே - இவை இரண்டும் அநாதியாய் இருக்கச் செய்தே ஓர் அவதரத்திலே மெத்தென நேராக இல்லையாய்ப் போகாநிற்கும்.—

இவை போல அணுவை மேவும் மலம் உடல் கன்மம் அநாதி விட்டே நீங்கும் - அந்தத் தவிடும் உமியும் ஓர் அவதரத்திலே நீங்கின முறைமைபோல ஆன்மாவைப் பொருந்திநிற்கிற மலமாயாதி கன்மங் கள் இவனுடைய அநாதி தத்துவம் ஒருகாலத்திலே விட்டு நீங்காநிற்கும்.—

*அதற்கு அவதரம் ஏது? என்னில்,*

நல்ல சிவ முத்தியின் கண் - பொல்லாத அசத்தி யத்தை அசத்தியம் என்று அறிந்து நீங்கி, நன்றான சத்தியத்தைச் சத்தியம் என்று அறிந்து சிவத்துடன் இரண்டறக் கூடுகிற மோட்சத்தில் இல்லையாம்.—

*அழியாது என்றது எப்படி? என்னில்,*

பெத்தான்மாவை நணுகி நிற்கும் - திரிபதார்த்த நிர்ணயத்தை அறிந்து மலத்தை நீங்காமல் மலசம்பந்திகளாய் இருக்கிற பெத்தான்மாக்களைப் பொருந்தி நிற்கும்.—

ஆதலினால் நாசமும் இன்று ஆம் ஏ - ஆதலினால் முத்தான்மாக்களிடத்து மலமில்லையாய்ப் பெத்தான்மாக்களிடத்து நிற்கையால் இந்தமலங்கள் கெடுவதுமில்லை என்றவாறு.

*இதனால்சொல்லியது நெல்லுக்குத் தவிடும் உமியும் அநாதியாயிருந்தும் ஓர் அவதரத்திலே நீங்கும் தன்மைபோல ஆன்மாக்களுக்கு மலமாயாதி கன்மம் அநாதியாய் இருந்தும் மோட்சத்தைப் பெற்ற முத்தான்மாக்களிடத்து இல்லையாயிருக்கும் என்றும் பெத்தான்மாக்களைப் பொருந்தி நிற்கையால் நித்த அழியாது என்னும் முறைமையும்*

(ஞா)

செய்யுள்—315

எவ்விடத்தும் இறையடியை இன்றியமைந் தொன்றும்
அறிந்தியற்றி டாஉயிர்கள் இறைவனும் ஒன்றும்
செவ்வி தினின் உளம்புகுந்து செய்திியெலாம் உணர்ந்து
சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்பன்
இவ்வுயிர்கள் தோற்றும்போ தவனையின்றித் தோற்று
இவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கும்
அவ்வுயிர்போல் நின்றிடுவன் ஆத லால்நாம்
அரனடியை அகன்றுநிற்ப தெங்கே யாமே.

1. மறைஞானசம்பந்தர் :

மேல் இந்தச் சுத்தான்மாக்கள் சிவனது திரு வடியைத் தேடிநிற்கும் முறைமை எப்படி ? என்ற அயிக்கியவாதியைக் குறித்துச் சிவ சீவர்களுடைய அயிக்கியம் ஈது என்று உணர்த்துகின்றார்.

**என்பது :** எ இடத்தும் இறை அடியை இன்றி அமைந்து ஒன்றை அறிந்து இயற்றிடா உயிர்கள் - ஆன்மாக்கள் சிவனது பிரேரகம் இன்றி எல்லா இடத்தும் ஒன்றைப் பொருந்தி அறியவும் செய்யவும் மாட்டார்கள்,—

*இடா என்பதனை அறிந்திடா இயற்றிடா என்று இருபாலும் கூட்டுக.*

ஈசன் தானும் செவ்விதினின் உளம் புகுந்து செய்திஎலாம் உணர்ந்து - சிவனும் சராசராத்மிகமாகிய ஆன்மாக்கள்தோறும் வியாபித்துநின்று அவர்கள் செய்த புண்ணியபாவங்களை உள்ளவாறுணர்ந்து,—

சேட்டிப்பித்து எங்குமாய் செறிந்து நிற்பன் - அவரவர்செய்த கன்மங்கட்கு ஈடாகச் செயற்படுத்திச் சர்வவியாபியாய்ப் பிரிவின்றி நிற்பன்,—

இ உயிர்கள் தோற்றும்போது அவனை இன்றி தோற்றா - இந்த ஆன்மாக்கள் செய்த கன்மங்கட்கு ஈடான உடலை எடுக்கும்போது அவனது பிரேரக மின்றித் தோற்றமாட்டா,—

*இவன் ஏகனாயிருந்து சர்வவியாபியாய் நிற்கும் முறை எங்ஙனம்? எனனில்,*

இவற்றினுக்கு அம் முதல் எழுத்துக்கு எல்லாம் ஆய் நிற்கும் அ உயிர் போல் நின்றிடுவன் - மெய் யெழுத்தெல்லாவற்றுக்கும் அகரவுயிர் கலந்து நின்று நடத்துமாறுபோல இவ்வான்மாக்களோடு சிவன் கூடிநின்று பிரேரியாநிற்பன்,—

ஆதலால் நாம் அரன் அடியை அகன்று நிற்பது எங்கேயாம் ஏ - இத்தன்மையுடையன் ஆதலாலே யாம் அவனுடைய திருவடியைவிட்டு நீங்கி நிற்பது ஓரிடமும் இல்லைகாண் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் பெரியகிரணுகமம் என அறிக.*

2. நிரம்பவழகியர் :

அ - கை: நீரும் நிழலும் போல நிர்விகாரியாய் இருக்கிற சிவன் பக்குவான்மாக்களைஅறிந்து அவர்கள் பாசத்தை நீக்கித் திருவடியிற் கூட்டிக் கொள்ளுவன் என்றும், அபக்குவ ஆன்மாக்களுடைய பாசத்தை நீக்கிக் கூட்டிக்கொள்ளான் என்றும் சொன்னது எப்படி? ஆன்மா தான் அறிவல்லவோ? ஆகையாலே, சிவனுடைய ஞானத்தினுலே பாசத்தை நீக்கிக் கொள்ளுவன் என்ற அவிகாரவாதியை நோக்கி அருளிச்செய்கின்றுர்.

இ - ள்: எ இடத்தும் இறை அடியை இன்றி அமைந்து ஒன்றை அறிந்து இயற்றிடா உயிர்கள் - பெத்தம் முத்தி இரண்டிடத்திலும் தம்பிரானுர் திரு வருளையின்றி ஆன்மாக்கள் தாமுக ஒருவிடயத்தைப் பொருந்தி அறிந்து அநுபவிக்கவும் அநுபவித்த கன்மத் துக்கு ஈடாக ஒன்றைச்செய்யவும் இவையாண்டுக்கும் மாட்டார்கள்,—

ஈசன் தானும் செவ்விதினின் உளம் புகுந்து - ஆன்மாக்கள் தானாக ஒன்றையும் அறியாததுகொண்டு பரமேசுவரனும் செவ்விதாக ஆன்மாவிலே அநாதியே பொருந்திநின்று,—

செய்தி எலாம் உணர்ந்து - ஆன்மாக்கள் கன்மத்துக்கு ஈடாக எழுந்திருந்த செயல்களையெல்லாம் தனது திருவுளத்திலேகண்டு,—

சேட்டிப்பித்து - அந்தந்த விடயங்களைப் கூட்டிப் புசிப்பித்து,—

எங்கும் ஆய் செறிந்து நிற்பன் - சடசித்துக்கள் இரண்டினும் பூரணமாய் விட்டுநீங்காமல் நிற்பன்,—

*இவை அன்றியும்,*

இ உயிர்கள் தோற்றும்போது அவனை இன்றி தோற்றாது - இவ்வான்மாக்களுக்கு உள்ள கன்மம் புசித்துத் தொலைந்து அந்தச் சரீரத்தைப் போட்டுக் கன்மத்துக்கு ஈடாக வேறு ஒரு சரீரம் எடுக்குமிடத்தும் கர்த்தா அன்றித் தானாக எடுக்கமாட்டாது,—

இவற்றினுக்கு அ முதல் எழுத்துக்கு எல்லாம் நிற்கும் அ உயிர்போல் நின்றிடுவன் - அகாரம் என்கிற முதல் உயிர் அக்கரங்களுக்கு எல்லாம் பிராணனாய் நின்று அக்கரங்களைக் காரியப்படுத்தினாற்போலச் சிவனும் ஆன்மாக்களுக்குப் பிராணனாய் நின்று காரியப்படுத்துவன்,—

ஆதலால் நாம் அரன் அடியை அகன்று நிற்பது எங்கே ஆம் ஏ - ஆகையாலே பரமேசுவரனுடைய

திருவடியை விட்டு நீங்கிநின்று தானாக அறியத்தக்க இடம் எவ்விடம்? ஓரிடமும் இல்லை என்றவாறு

எனவே ஆன்மாவுக்குத் தான் அறிவிக்க அறியுமதொழிந்து தானாக அறியாது என்பது கருத்து. இதற்குப் பிரமாணம்:

"நீர்நிழல் அனைய சீர்பெறு கடவுளைச்
சேர்ந்தவர்க் கின்பம் வாய்ந்திடும் என்றனை
பாதவம் என்றும் சேதனம் இன்மையின்
இளைத்தோர் வம்மின் என்பதும் துன்பம்
விளைத்தோர் தம்மில் வெறுப்பும்ஒன் றிலதே"

—சங்கற்ப - ஈசுவர அவிகாரவாத நிராகரணம்

என்றும்,

"ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினன் - ஏகமாய்
உள்ளத்தின் கண்ணானன் உள்குவார் உள்கிற்றை
உள்ளத்தால் காணானே உற்று."

—சிவஞானபோதம்: சூத் - 11, வெண்பா - 2.

என்னுமதும் கண்டுகொள்க.

இதனால் சொல்லியது சிவன் வேறறநின்று ஆன்மாக்கள் கன்மத்துக்கு ஈடாக விடயங்களைக் கூட்டிப் புசிப்பிக்குமதொழிந்து தானாக அறியாது என்னும் முறைமை அறிவித்தது. (எ)

செய்யுள் —316

எங்குந்தான் நிறைந்துசிவன் நின்றானாகில்
எல்லாருங் காணவே வேண்டுந்தா னென்னில்
இங்குந்தான் அந்தகருக் கிரவி இருளாகும்
ஈசனருட் கண்ணில்லார்க் கொளியாமோ இருளாம்

**பங்கந்தா னெழும்பதுமம் பக்குவத்தை யடையப்**
**பரிதிஅலர்த் திடுவதுபோல் பருவஞ்சே ருயிர்க்குத்**
**துங்கஅரன் ஞானக்கண் கொடுத்தருளி னலே**
**சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே.**

**1.** மறைஞானசம்பந்தர் **:**

மேல் சர்வவியாபியாகில் காணவேண்டாவோ? என்ன, பக்குவான்மாக்கட்கன்றிச் சிவன் மற்றை யோர்க்குக் காணப்படான் என்று உணர்த்துகின்றார்.

**என்பது :** எங்கும் தான் சிவன் நிறைந்து நின்றான் ஆகில் எல்லாரும் காணவே வேண்டும் தான் என்னில்- சிவன் சர்வான்மாக்கட்கும் உயிர்க்குயிராய் நிறைந்து நின்றானேயாகில் அவனை எல்லாரும் காணவேண்டும் என்று நீ சொல்லில்,—

இங்கும் தான் அந்தகருக்கு இரவி இருள் ஆகும் - இந்த உலகத்தின்கண் ஆதித்தனானவன் எவ்விடத்தும் ஒளிபரப்பிப் பிரகாசிக்கையிலும் கண்ணில்லாதோர்க்கு இருளாயிருந்து தோன்றாமல் நிற்குமாறுபோல,—

ஈசன் அருட்கண் இல்லார்க்கு ஒளி ஆயே இருள் ஆம் - சிவன் எவ்விடத்தும் நிறைந்து நின்றானே ஆயினும் அவனது ஞானக்கண் இல்லார்க்கு ஒளியா யிருந்தும் இருளாயே தெரியாநிற்கும்,—

*எனவே அருட்கண்ணுள்ளாருக்கு ஒளியாகித் தோன்றுமென்க. ஆனால், சிவன பட்சபாதியாகானோ? எனனில்,*

பங்கம் தான் எழும் பதுமம் பக்குவத்தை அடைய பரிதி அலர்த்திடுவது போல் பருவம் சேர் உயிர்க்கு துங்க அரன் ஞானக்கண் கொடுத்து அருளினுலே சோதிக்குள் சோதி ஆய் தோன்றிடுவன் காண் ஏ - சேற்றில் முளைத்தெழுந்த தாமரைக்கூட்டத்திலே பக்குவமான முகையை ஆதித்தன் அலர்த்துமாறு போலச் சிவனும் பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்குத் தனது மேலான ஞானதிருட்டியைக் கொடுத்து அவர்கள்மேல்வைத்த காருண்ணியத்தினுலே அறிவுக் கறிவாய்த் தோன்றுநிற்பன் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் நிச்சுவாசம், சிவதருமோத் தரம், மதங்கம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

அ - கை: நிர்விகாரியாய் எங்கும் நிறைந்து நிற்கிற சிவன் அநுக்கிரகம் செய்தாராகில் எல்லாருக் கும் ஒக்க அநுக்கிரகம்செய்ய வேண்டாவோ? என்ற அவ்காரவாதியை நோக்கி அருளிச்செய்கின்றுர்.

இ - ள்: எங்கும் தான் நிறைந்து சிவன் நின்றுன் ஆகில் எல்லாரும் காணவே வேண்டும் தான் என்னில்- எல்லா ஆன்மாக்களிடத்தும் எல்லா அத்துவாக்க ளிடத்தும் சிவன் பூரணனுய் நிற்பானுகில் எல்லாரும் சிவனைக் காணவேணும் என்று நீ சொல்கிருயாகில்.—

இங்கும் தான் அந்தகருக்கு இரவி இருள் ஆகும் - இவ்விடத்துப் பிரபஞ்சம் எங்கும் பிரகாசித்துநிற்கிற ஆதித்தப்பிரகாசம்தான் அந்தகராயுள்ளாருக்கு ளாயே இராநிற்கும் அதுபோல.—

ஈசன் அருட்கண் இல்லார்க்கு ஒளி ஆய் ஏ இருள் ஆம் - பரமேசுவரனுடைய திருவருளாகிய கண் இல்லாத பாசபந்தியாய் உள்ளவர்க்குச் சிவன் ஒக்க நிற்கச் செய்தேயும் அஞ்ஞானமே ஒழிந்து தான் ஒரு முதலில்லை என்னும்படி நிற்பன்,—

பங்கம் தான் எழும் பதுமம் பக்குவத்தை அடைய பரிதி அலர்த்திடுவது போல் பருவம் சேர் உயிர்க்கு துங்க அரன் ஞானக்கண் கொடுத்து அருளினாலே சோதிக்குள் சோதி ஆய் தோன்றிடுவன் காண் ஏ - தன்னளவிலே சிநேகிதராய்த் தன்னை அறிந்து வழிபடுகிற பக்குவான்மாக்களுக்குப் பாசத்தைநீக்கி எல்லாவற்றிற்கும் மேலாயிருக்கிற பரமேசுவரன் தன்னுடைய ஞானதிருட்டியைக் கொடுத்து அந்த ஞானமாகிய காட்டாலே அவர்களுடைய பாசத்தை நீக்கி அந்தப் பாசஞானமாய் நிற்கிற பக்குவான்மாக்களிடத்திலே பிரகாசியா நிற்பன் ஆனால் பட்சவாதியாகானோ? என்னில், சேற்றிலே எழுந்திருக்கப்பட்ட எண்ணிறந்த தாமரைகள் ஆதித்தனாலே அலர்த்தப் பட்ட பக்குவமான தாமரைபோலும் என்று அறிவாய் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம் :*

*"அருக்கனேர் நிற்பினும் அல்லிருளே காணார்க்(கு)*
*இருட்கண்ணே பாசத்தார்க் கீசன் - அருட்கண்ணால்*
*பாசத்தை நீக்கும் பகலலர்த்தும் தாமரைபோல்*
*நேசத்தில் தன்னுணர்ந்தார் நேர்."*

*—சிவஞானபோதம்: சூத் - 11, வெண்பா - 3.*

*என்னுமதும் கண்டுகொள்க.*

*இதனால் சொல்லியது சந்நிதியில் அந்தகரைப்போல அபக்குவராய உள்ள பாசபந்திகளுக்குச் சிவன் பிரகாசியான எனறும், பக்குவராய் உள்ள முததானமாக்களுக்குச் சிவன் பிரகாசியாநிறபன எனனும் முறைறமையும அறிவித்தது. (அ)*

செய்யுள்—317

**சென்றணையும் நிழல்போலச் சிவன்நிற்ப னென்னில்**
**சென்றணையு மவன்முதலி சிவத்தையணைந் தொன்**
**நின்றதுயிர் கெட்டென்னில் கெட்டதனை யின்றும் [றுய்**
**நின்றதேற் கேடில்லை அணைந்துகெட்ட தென்னில்**
**பொன்றினதேன் முத்தியினைப் பெற்றவரார் ; புகல்நீ**
**பொன்றுகையே முத்தினனில் புருடனித்த னன்றும்**
**ஒன்றியிடு நீரொடுநீர் சேர்ந்தாற்போல் என்னின்**
**ஒருபொருளாமதிபதியோடுயிர்பொருளொன்றன்றே.**

**1.** மறைஞானசம்பந்தர் :

மேல் ஆன்மா சிவனை அடைந்து உறும் முத்தி நிலையைப் பேதப்படுத்திக் கூறும் அவிகாரவாதி முதலாயினரை மறுத்து உணர்த்துகின்றார்.

**என்பது :** சென்று அணையும் நிழல் போல சிவன் நிற்பன் என்னில் - வழி நடந்து வெயிலால் வருத்த முற்று எய்திடும் ஒருவன் மரத்தின் நிழலைக்கண்டு தானேபோய் அந்த நிழலையடைந்து துன்பம் நீங்கி இன்பமுற்றிருந்தாற்போலச் செனன மரண துக்கத்து அடிபட்டு இளையாநின்ற ஆன்மாவும் சிவன் அவிகாரியாய் நிற்க, அவனது திருவடியைச் சேர்ந்து இன்புற்றிருப்பன் என்று நீ சொல்லில்,—

சென்று அணையும் அவன் முதலி - அந்த நிழற்கு முதன்மையின்றி அதைச் சென்றணையும் அவனுக்கே முதன்மையுண்டாம் அத்தன்மைபோலச் சிவனுக்கு முதன்மையின்றிச் சிவன் திருவடியைப் பொருந்தின ஆன்மாவுக்கே முதன்மையுண்டாம்,—

சிவத்தை அணைந்து ஒன்றாய் நின்றது உயிர் கெட்டு என்னில் - ஆன்மாக் கெட்டுச் சிவத்தைப் பொருந்தி ஒன்றாய்நிற்கும் என்னில்,—

கெட்டது அணைவு இன்றாம் - கெட்டதாயின் பின்பு கூடிநிற்கமாட்டாது,—

நின்றதேல் கேடு இல்லை - கெடாமல் கூடிநிற்கும் என்னில் நீ முன்சொன்ன கேடும் இன்றி இவனும் ஒரு முதலாய் நிற்கவேண்டும்,—

அணைந்து கெட்டது என்னில் - கூடின பின்பு கெட்டது என்னில்,—

பொன்றினதேல் முத்தியினை பெற்றவர் ஆர் புகல் நீ - கெட்டதேயானால் முத்தியிலுண்டான பேரின் பத்தைப் பெற்றவராார்? இதனை விசாரித்து நீ சொல்ல வேண்டும்,—

பொன்றுகையே முத்தி எனில் புருடன் நித்தன் அன்றாம் - கெடுதலே முத்தியென்னில் ஆன்மா அநித்தியனுமாய் நித்தியன் என்று வேதாகமங்கள் சொல்லுவதற்கும் விரோதமாம்; ஆதலால் நீ சொல்லியது ஆகாதென்க,—

ஒன்றியிடும் நீரொடு நீர் சேர்ந்தால் போல் என்னின் - நீரோடு நீர் கலந்தாற்போல் ஆன்மா சிவத்துடனே கூடி ஒன்றுவான் என்று அயிக்கியவாதி சொல்லில்,—

ஒரு பொருள் ஆம் - நீரும் நீரும் முன்பே ஒரு தன்மையாய் இருந்தாற்போல ஆன்மாவும் சிவனும் அநாதியிலே ஒருதன்மைத்தாயிருக்கவேண்டும்.—

அதிபதியோடு உயிர் பொருள் ஒன்று அன்றே - ஆகையினலே அநாதிமலமுத்தனய்ச் சர்வகர்த்தாவுமாய் இருக்கிற சிவனும் அநாதிமல பெத்தனய்ச் சிவனலே காரியப்பட்டு வருகிற ஆன்மாவும் ஒரு முதலன்றே; ஆதலால் உன்மதம் ஆகாது என்று அறிவாயாக என்றவாறு.

**2. நிரம்பவழகியர் :**

**அ - கை :** முன் சொன்ன உண்மையினலும், பின் சொல்லிவந்த உபாயங்களாலும், இந்த இரண்டு வகையாலும் சிவனைப்பெற்றவர்கள் சிவனேடு கூடி நிற்கும் முறைமையைச் சமயிகள்கருத்துக்களை வினவி அவரவர் மதங்களை மறுத்தருளிச்செய்கின்றர்.

**இ - ள் :** சென்று அணையும் நிழல் போல சிவன் நிற்பன் என்னில் - நீரும் நிழலும் போலச் சிவன் விகாரமற நிற்பன், அந்த நீரிலும் நிழலிலும் சென்று இளைப்பாறுகிற ஆன்மாவைப்போல ஆன்மா முத்தியில் சிவனைத் தானக அறிந்து கூடும் என்று நீ சொல்லில்,—

சென்று அணையும் அவன் முதலி - அந்த நீரையும் நிழலையும் அறிந்து சென்று கூடுகிற ஆன்மா கர்த்தா ஆவன் ஆகையால் அது கருத்தன்று.—

சிவத்தை அணைந்து ஒன்ருய் நின்றது உயிர் கெட்டு என்னில் - உப்பளம் சேர்ந்த புற்பலாலம் உப்பாய்ப்போனது போலவும் அக்கினியைச் சேர்ந்த இரும்பு அக்கினியானாற்போலவும் ஆன்மாச் சென்று சிவத்தைப் பொருந்தி ஆன்மா என்கிற தன்மை கெட்டுச் சிவமாய் நின்றது என்னில்.—

கெட்டது அணைவு இன்ரும் - ஆன்மா என்கிற தன்மை கெட்டால் சிவத்தைப் பொருந்தின தன்மை இல்லையாம் ஆகையால் அது கருத்தன்று.—

நல் கேடு இல்லை - ஆன்மாவும் சிவமும் முத்தியிலும் இரண்டாயிருக்கும் என்று நீ சொல்லில் இவன் தற்போதம் கெட்டுச் சிவனைக் கூடினதும் இல்லையாய்ச் சிவனுக்குப் பூரணமும் இல்லையாம் ஆகையால் அது கருத்தன்று.—

அணைந்து கெட்டது என்னில் - அநாதியிலே ஆன்மாவும் சிவமும் இரண்டுமுதலாயிருந்து முத்தியில் ஆன்மாச் சிவனைச் சென்று கூடி ஒன்ருய் விடும் என்று கூறி

பொன்றினதேல் முத்தியினை பெற்றவர் புகல் நீ - கூடினபொழுதே ஆன்மா கெடுவானுகில் மோட்சத்தைப் பெற்றவர்கள் இன்னுர் என்று எமக்கு நீ சொல்லவேணும்.—

பொன்றுகையே முத்தி எனில் புருடன் நித்தன் அன்றாம் - ஆன்மாக் கெட்டுப்போகிறதுதானே மோட்சம் என்று சொல்லில், ஆன்மா நித்தனும் அல்லவாய் நித்தம் என்று சொல்லுகிற வேதாகமங்களுக்கும் விரோதம் ஆகையால் அது கருத்தன்று.—

ஒன்றியிடும் நீரொடு நீர் சேர்ந்தால் போல் என்னில் ஒரு பொருள் ஆம் அதிபதியோடு உயிர் பொருள் ஒன்று அன்றே - முத்தியிலே ஒரு பொருளாய் நின்று பின்பு பதி என்றும், பசு என்றும் இரண்டாய் மீளவும் நீரும் நீரும் சேர்ந்த தன்மை போல முத்தியில் ஒன்றும் என்று கூறின், பதியும் பசுவும் ஒருமுதலாக என்றும் அதிபதியாயிருக்கிற கர்த்தாவும் ஆன்மாவும் ஒருபொருளாகாது; ஆகையால் அது கருத்தன்று என்றவாறு.

*‘சென்று அணையும் நிழலபோலச் சிவனை நிற்பன்’ என்றவனை அவிகாரவாதி. இதற்குப் பிரமாணம்:*

*“ நீர்நிழல் அனைய சீர்பெறு கடவுளைச்*
*சலம்இல னாகிச் சார்ந்தவர்க் கென்றும்*
*நலம்மிக நல்கும் நாதனை அணைந்து*
*பூழி வெம்மை பொருந்தா துயர்ந்த*
*நீழல் வாழும் நினைவினர் போலத்*
*திருவடி நீழல் சேர்ந்து*
*கருவுறு துயரம் களைந்திருந் திடுமே ”*

*—சங்கற்ப - ஈசுவர அவிகாரவாதி சங்கற்பம்.*

*என்னுமதும் கண்டுகொள்க.*

*‘சென்றணையும் அவன் முதலி’ என்று அவனை மறுத்தற்குப் பிரமாணம்:*

" நீர்நிழல் அனைய சீர்பெறு கடவுளைச்
சேர்ந்தவர்க் கின்பம் வாய்ந்திடும் என்றனை
பாதவம் என்றும் சேதனம் இன்மையின்
இனைத்தோர் வம்மின் என்பதும் துன்பம்
விளைத்தோர் தம்மில் வெறுப்பும் ஒன்றிலதே
பொடித்திடு கொப்புள் வெடித்திடு பாதம்
வெய்ய பூழியின் உள்ளுற அழுங்கி
ஆற்றுதல் இன்றி யாறியங் குநர்முன்
தோற்றிடும் என்று சொல்லவும் இலதால்
இவ்வகை கடவுட் கியம்புதல் தவறே. "

— சங்கற்ப - ஈசுவர அவிகாரவாதி நிராகரணம்.

எனனுமதும கண்டுகொள்க.

'சிவத்தை அணைந்து ஒன்றாய் நின்றது உயிர் கெட்டு' என்றவன சங்கிராந்தவாதி. இதற்குப் பிரமாணம:

" ஏற்றோர் முகவொளி தோற்றும் கலனெனத்
தலைவன தருளுயிர் நிலவிடும் நிலவக்
காட்டத் தங்கி மாட்டத் தங்கிய
தன்மையும் அளத்துப் புல்வையின் நீப்பும்
போன்றது வாகித் தோன்றிடும் அதனால்
பசுகர ணங்கள் சிவகர ணங்கள்
ஆக மாறி அறிவும்
ஏக மாம்உயிர் யான்என தின்றே "

—சஙகற்ப - சங்கிராந்தவாதி சங்கற்பம்.

என்னுமதும கண்டுகொள்க.

'கெட்டது அணைவு இன்றாம்' என்று அவனை மறுத்தற்குப பிரமாணம்:

" நோக்கும் முகவொளி நீக்காத் தானெனக்
கவருந் தன்மை முகுரம் போலக்

கொடுத்தது கோடற் கடுத்ததுண் டன்றே
காட்டத் தங்கி கூட்டக் கூடும்
இந்தனத் தியற்கை வெந்தழல் தாங்கா
உப்பளத் தடுத்த புற்பலா லங்கள்
சடத்த வேனும் கொடுத்தது கொள்ளும்
தன்மை உண்டுனக் கின்மைய தன்றே ''

—சங்கற்ப - சங்கிராந்தவாதி நிராகரணம்.

என்னுமதும் கண்டுகொள்க.

'நிறைறது' என்றவன் சிவசமவாதி. இதற்குப் பிரமாணம்:

'' முன்னேன் தனது முதிர்ஒளி ஞானம்
அறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த
வண்டென உயிரைக் கொண்டிடும் உயிரது
தன்னை நோக்கித் தானது வாகி
ஐவகைத் தொழிலும் மெய்வகை உணர்வும்
பிரியா வாறு பெற்றுத்
திரியாப் பெரியோர் திரட்சிசேர்ந் திடுமே ''

—சங்கற்ப - சிவசமவாதி சங்கற்பம்.

என்னுமதும் கண்டுகொள்க.

'கேடு இல்லை' என்று அவனை மறுத்தற்குப் பிரமாணம்:

'' முத்தி உற்ற நற்றவர் அவையிடைச்
சேர்வர் என்றனை சார்தரு முத்தி
சாலோக் கியமோ சாயுச் சியமெனில்
பந்த முற்ற கந்தல கழித்த
அறிவினே டறிவு பிறியாப் பெற்றி
வேண்டும் என்றதற் கீண்டிவர் இவ்வா(று)
இருப்பர் என்பதற் குருத்தான் வேண்டும்
அண்ணல தருளின் நண்ணி இருப்பினும்

*சீவன் முத்தரென் றேதினர் அகன்று*
*நீங்கியும் உருவம் நீங்கா தாயின்*
*ஓங்கிய முத்தி யாவதென் உரைக்க.''*

—சங்கற்ப - சிவசமவாதி நிராகரணம்.

என்னுமதும் கண்டுகொள்க.

'அணைந்து கெட்டது என்னில், பொன்றினது ஏன? முத்தி எனனில், பெற்றவர் யார்? புகல் நீ பொன்றுகையே முத்தி' என்றது சைவர். இதற்குப் பிரமாணம்:

*'' கருவியும் மலமும் பிரிவுறப் பிரியா*
*ஞானம் நல்கலும் தானது நோக்கித்*
*தன்னையும் அதனையும் தன்முதற் பொருளையும்*
*இன்னவென் றறியா இருவரும் முயங்கி*
*ஒன்றாய் உறுபயன் உவப்பும்*
*இன்றாய் நிற்கும் இதுசிவ கதியே.*

—சங்கற்ப - சைவவாதி சங்கற்பம்.

என்றும்,

'புருடன் நித்தன அன்றாம' என்று அவரை மறுத்தற்குப் பிரமாணம்:

*[illegible]ம் கூடி ஒருபயன்*
*அருளினை இவ்வா றபேதிகள் நிலையே.''*

—சங்கற்ப - சைவவாதி நிராகரணம்.

என்னுமதும் கண்டுகொள்க.

'ஒன்றியிடிற் நீரொடு நீர் சேர்ந்தால் போல்' என்றது ஐக்கியவாதி. இதற்குப் பிரமாணம்:

"சத்திநி பாதம் உற்றிறை அருளால்
உருவுகொ டுலகு தெரிவுற மருவி
மாசுறு தூசு தேசுற விளக்கும்
தன்மையின் உணர்த்தும் புன்மைகள் நீங்கி
நீரும் நீரும் சேரும் தகைமையின்
அறிவினோ டறிவு செறிவுறப் பொருந்தி
ஒன்றும் என்பதை உலகோர்
நன்று முத்தி எனநவிற் றினரே."

—சங்கற்ப - ஐக்கியவாதி சங்கற்பம்.

எனனுமதும் கண்டுகொள்க.

'ஒருபொருளாம அதிபதியோடு உயிர் பொருள ஒன்று அன்றே' என்று அவனை நோக்கி மறுத்தற்குப் பிரமாணம:

"அறிவிற் கறிவு செறியவேண் டின்றே
உண்மையில் இருமையும் ஒளியே எனில்ஒரு
தன்மை யாகமுன் சாற்றினர் இலரே"

—சங்கற்ப - ஐக்கியவாதி நிராகரணம்.

என்னுமதும கண்டுகொள்க.

இந்த ஐக்கியவாதியை ஒழிந்து சங்கிராந்தவாதி, பரிணாமவாதி, சைவர் இவர்கள் முத்தியில் ஆன்மா வும சிவமும ஒன்றாய் இருக்கும என்பார்கள் எனக் கொளக.

இதனால் சொல்லியது ஆன்மாவும் சிவமும் முத்தியில் இரண்டாய் இருக்கும என்றும, அக்கினி யைச் சேர்ந்த இரும்புபோலச் சிவத்தோடே கூடின ஆனமாவும சிவமாம் என்றும, பெத்தத்தில் ஒழிந்து முத்தியிலும் இரண்டாயிருக்கும் என்றும், அநாதியே

*இரண்டாய் இருந்து முத்தியில் ஒன்றும் என்றும் இப்படிச் சொன்ன சமயிகளை அவை அத்தமல்ல என்று மறுத்த முறைமை அறிவித்தது.* (கூ)

செய்யுள்—318

**செம்பிரத குளிகையினால் களிம்பற்றுப் பொன்னாய்ச்**
**செம்பொனுடன் சேருமலஞ் சிதைந்தாற் சீவன்**
**நம்பனுடன் கூடுமெனில் பொன்போ லல்லன்**
**நற்குளிகை போலரன் நணுகுமலம் போக்கி**
**அம்பொனடிக் கீழ்வைப்பன் அருங்களங்க மறுக்கும்**
**அக்குளிகை தானும்பொன் னாகா தாகும்**
**உம்பர்பிரான் உற்பத்தி யாதிகளுக் குரியன்**
**உயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே.**

1. மறைஞானசம்பந்தர் :

மேல் ஆன்மா முத்திதசையில் சிவனைக் கூடிநிற்கும் முறையும் அவ்விடத்து அவனுக்கு உரித்தாயுள்ள அநுபவப்பேறும் உணர்த்துகின்றார்.

**என்பது:** செம்பு இரத குளிகையினால் களிம்பு அற்று பொன் ஆய் செம்பொனுடன் சேரும் மலம் சிதைந்தால் சீவன் நம்பனுடன் கூடும் எனில் - செம் பானது இரதகுளிகை தாக்கக் களிம்பற்று எப்படிப் பொன்னுடன் கூடும் அதுபோல இந்தஆன்மாவும் சிவ ஞானத்தினாலே மலம்போய்ச் சிவசாமியம் பெற்றுச் சிவனைப்போல் பஞ்சகிருத்தியமும் பண்ணற்கு உரிய னவன் என்று சிவசமவாதி சொல்லில், அஃதன்று,—

பொன் போல் அல்லன் நல் குளிகைபோல அரன் நணுகும் மலம் போக்கி அம் பொன் அடி கீழ்

வைப்பன் - சிவன் அந்தப் பொன்போல்வன் அல்லன் செம்பினது களிம்பைப் போக்கிப் பொன்னாக்கும் குளிகையைப்போன்று ஆன்மாக்களை அநாதியிலே பொருந்தின மலத்தைப் போக்கி அழகினையும் பொலிவினையும் உடைய தனது திருவடிநிழற்கீழே வைத்தருளுவன்.—

அரு களங்கம் அறுக்கும் அ குளிகை அதுவும் பொன் ஆகாதாகும் - போக்கற்கரிய களங்கத்தைப் போக்கும் குளிகையானதும் அந்தப்பொன் ஆகாது.--

*அதுவும என்ற உமமையான எந்தப் பொன்னும் தான் குளிகையாகமாட்டாது. என்னவே, களங்கம் தீர்ந்தபொன் மற்றொரு செம்பிற்குக் களங்கத்தைத் தீர்க்கமாட்டாது; குளிகையே தீராநிற்கும். பொன பொன்னாகவேயிருக்கும்; இத்தன்மைபோல:*

உம்பர்பிரான் உற்பத்தி ஆதி செயற்கு உரியன் - வதேவனாகிய பரமேசுவரன் சிருட்டி முதலிய பஞ்சகிருத்தியங்களையும் செய்தற்கு உரியன்.—

உயிர் தானும் சுவானுபவம் ஒன்! உரித்து ஏ - இப்படிச் சுத்தனான ஆன்மாவும் வேறொரு கிருத்தியமுமின்றிச் சுவானந்தானுபூதி ஒன்றையுமே திளைத்திருத்தற்கு உரியன் என்றவாறு.

*எனவே பரமுத்தி பெற்றோர் சிவனைப்போல் கிருத்தியகர்த்தா ஆகார்கள்; அபரமுத்தி பெற்றோர் அவன் ஏவலால் கிருத்தியகர்த்தாக்களாய் இருப்பார்கள் என அறிக.*

*இதற்குப் பிரமாணம சர்வஞானோத்தரம், சர்வமதோபந்நியாசம் என அறிக.*

## 2. நிரம்பவழகியர் :

**அ – கை :** செம்பிற் களிம்பு குளிகை தாக்க நீங்கின தன்மைபோல, சிவனுடைய அருளாலே ஆன்மாவுக்கு மலம்போய் முத்தியைப்பெறும் என்ற பேதவாதிமதம் மேல் அருளிச்செய்கின்றார்.

இ – ள் : செம்பு இரத குளிகையினால் களிம்பு அற்று பொன் ஆய் செம்பொனுடன் சேரும் - செம்பொன் இரதகுளிகையினாலே காளிதம் போய் மாற்று எழுந்திருந்து கனகமாய்ச் சிவந்த பொன்னுடனே கூடாநிற்கும் அதுபோல,—

மலம் சிதைந்தால் சீவன் நம்பனுடன் கூடும் எனில் - மலமானது சிவனருளாலே நீங்கினால் ஆன்மாவும் சிவனுடனே கூடுவன் என்று நீ சொல்லில்,—

*அது திட்டாந்தவிரோதம்; அதுஎப்படி? என்னில்,*

பொன் போல் அல்லன் நல் குளிகை போல்வன் - பரமேசுவரன் அந்தப் பொன்னைப்போல் அல்லன் நல்ல குளிகையைப் போல்பவன்; ஆகையால் ஆன்மாவும்

அரன் அணுகி மலம் போக்கி அம் பொன் அடிகீழ் வைப்பன் - பரமேசுவரன் தனது திருவருளாலே இவனை அநாதியே பொருந்தி நிற்கின்ற மலத்தினது சத்திகளை நீக்கி அழகிய பொலிவினையுடைய தனது திருவடியின்கீழே வைப்பன்,—

*அது எப்படி? என்னில்,*

*ஆன்மா அருளைப்பெறுகிறதே பயன் என்றும், அந்த அருளுக்குள்ள தன்மை எல்லாம் அவனுக்கு உண்டாம் என்றும் சொல்லுகின்ற சிவசமவாதியைப் பார்த்து மறுத்து மேல் அருளிச்செய்கின்றார்:*

அரு களங்கம் அறுக்கும் அ குளிகை அதுவும் பொன் ஆகாதாகும் - செம்பினது காளிதத்தைப் போக்கித் தேடுதற்கு அரிதாய்ப் பொன் ஆக்கின அந்தக் குளிகையானதும் பொன்னுகாது; அந்தப் பொன்னும் குளிகையாகாது; காளிதம்நீங்கின பொன் குளிகை ஆகாதாற்போல அருளைப்பெற்ற ஆன்மாக் களுக்கும் அருளுக்குள்ளதன்மை உண்டாகாது.—

உம்பர்பிரான் உற்பத்தி ஆதிகளுக்கு உரியன் - ஆகையால், தேவர்களுக்கெல்லாம் கர்த்தாவாகிய பரமேசுவரன் சிருட்டி முதலான கிருத்தியங்களும், சர்வஞ்ஞத்துவமும் அநாதியே உடையன்.—

உயிர்தானும் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்து ஏ - ஆன்மாத்தானும் அருளைப் பெற்றாலும் சிவனுக் குள்ள பஞ்சகிருத்தியமும் பேரறிவும் உண்டாகாது; சிவானுபவம் ஒன்றனையும் அநுபவித்துக்கொண்டிருக் கிறதற்கு உரித்து என்றவாறு.

*'செம்பிரதக் குளிகையினல் களிம்பு அறாப் பொன்னைச் செம்பொனுடன் சேருமலம் சிதைந்தால் சிவன் அம்பொனுடன் கூடும்' என்றவன் பேதவாதி. இதற்குப் பிரமாணம் :*

" ஈசன தருளால் பாசத் தொகுதி
செறிவுறு செம்பில் களையுறு களிம்பு
குளிகை தாக்க ஒளிபெற் றுங்கு
நித்த சுத்த முத்த ராக
வைத்தனர் உலகில் மறைவல் லோரே, "

—சங்கற்ப - பேதவாதி சங்கற்பம்.

என்றும்,

'பொன்போல் அல்லன் நற்குளிகை போல்வன்' என்று அவனை மறுத்தற்குப் பிரமாணம்:

" மறைகள் ஆகமத் துறைகள்மற் றெவையும்
நாசமில் பதிபசு பாசமென் றுரைத்தல்
அயர்த்தோர் குளிகைச் சயத்தால் தாமிரக்
காளித நாசம் பாசத் தேய்த்தல்
கூடா தன்றியும் குளிகை சீருணம்
நீடா தழித்த நிலைநிலை ஆதலின்
பேத வாதம் ஓதுதல் பிழையே. "

—சங்கற்ப - பேதவாதி நிராகரணம்.

என்றுமதும் கண்டுகொள்க.

'உயிர்தானும் சிவானுபவம் ஒ
உரித்தே' என்றது, ஆன்மா சிற்றறிவன் ஆகையால் அச்சிவனுக்கு உள்ள கிருத்தியம் எல்லாம் இவனுக்கு உண்டாகாது சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்து என்பது கருத்து. இங்ஙனம் சிவசமவாதியை மறுத்தற்குப் பிரமாணம்:

" அவனிவன் ஆகில் இவனவன் செய்தி
என்று செய்வான் ஒன்றிய மதத்தாய்
எல்லாம் அறிதல் செல்லா துயிர்கள்
சிற்றறி வெனும்இச் சொல்தவ றுகும் "

—சங்கற்ப - சிவசமவாதி நிராகரணம்.

என்றுமதும் கண்டுகொள்க.

*இதனால் சொல்லியது, செம்பில் காளிதமானது இரதகுளிகையினாலே நீங்கப் பொனனான தன்மை போல, ஆன்மாவுக்கு உண்டான பாசமும அருளாலே நீங்கினாலும் அருளுக்குள்ள முறைமை ஆன்மாவுக்கு உண்டாகாது; பொனனானது குளிகை ஆகாது என்றும, ஆகையால் ஈது அத்தமல்ல என்றும, ஆன்மா அருளோடு கூடினாலும சிவானுபவம் ஒன்றும் ஒழிந்து பஞ்சகிருத்தியம உண்டாகாது என்னும் முறைமையும அறிவித்தது.* (ம)

செய்யுள்—319

சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னில்
சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித் தவன்றான்
பவங்கேடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற்
படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மின்றன்
அவன்றனே அறியுஞ்சித் தாதலினா லிரண்டும்
அணைந்தாலு மொன்றாகா தநந்நியமா யிருக்கும்
இவன்றானும் புத்தியுஞ்சித் திவனுமோ புத்தி
இதுஅசித்தென் றிடிலவனுக் கிவனுமசித் தாமே.

**1.** மறைஞானசம்பந்தர் :

மீளவும் அவன் ஆன்மாவும் சித்து. சிவனும் சித்து. இவை இரண்டும் கூடித் தம்மில் ஒன்றாய் இருக்கிறதே முத்தி என்ன, மறுத்துணர்த்துகின்றார்.

என்பது : சிவன் சீவன் என்ற இரண்டும் சித்து ஒன்றும் என்னில் - சிவனும் சைதன்னிய சொரூபம் ஆன்மாவும் சைதன்னிய சொரூபம் இவ்விருவரும்

சேதன சொரூபர் ஆதலாலே முத்தியில் ஒருமுதலென நீ சொல்லின் அஃதன்று.—

சிவன் அருட்சித்து இவன் அருளை சேரும் சித்து - சிவன் அநுக்கிரகத்தைச் செய்தற்கு உரிய சித்தாம் ஆன்மா அநுக்கிரகத்தைப் பெற்றிருத்தற்குரிய சித்து.-

அவன் தான் பவம் கேடு புத்தி முத்தி பண்ணும் சித்து - அந்தச் சிவன் இந்த ஆன்மாக்களைச் செனன மரணப்படுத்தி அவற்றால் கிலேசமுற்று வருந்துதலைத் தீர்த்து இளைப்பாற்றும்பொருட்டுப் பஞ்ச கிருத்தியங்களையும் பண்ணிப் போகமோட்சங்களையும் கொடுக்கும் சித்து.—

அவற்றில் படியும் சித்து அறிவிக்கப்படும் சித்து இவன் தான் - இந்த ஆன்மாவானவன் சிவனாலே செனன மரணத்தைப் பொருந்திப் பின்பு போக மோட்சத்தையும் பொருந்தப்பட்ட சித்து அறியும் இவன்தான் சிவன் யாதொன்றை அறிவித்தான் அப் போது அதனைத் தான் அறியப்படும் சித்து.—

அவன் தானே அறியும் சித்து - அந்தச் சிவன் அநாதிமலமுத்தனாய்ச் சர்வக்ஞன் ஆதலால் இயல் பாகச் சர்வத்தையும் தானே அறியும் சித்து.—

ஆதலினால் இரண்டும் அணைந்தாலும் ஒன்றாகாது அநந்நியமாய் இருக்கும் - இத்தன்மையை உடைத் தாகையினாலே சிவனும் ஆன்மாவும் தம்மில் கலப் புண்டாய் வேறற நின்றாலும் ஒன்றாவதில்லை ; இரண் டற்று அநந்நியமாய் இருக்கும்.—

*அஃது எப்படிப்போல? என்னில்,*

இவன் தானும் புத்தியும் சித்து இவன் ஆமோ புத்தி - இந்த ஆன்மாவும் சேதனம் புத்தியும் சேதனம் அப்படியானாலும் அந்த ஆன்மாவாமோ புத்தி.—

இதுவும் அசித்து எனில் அவனுக்கு இவனும் அசித்தாம் ஏ - இந்த ஆன்மாவின் உண்மையை விசாரித்துப் புத்தி அவனுக்கு அசித்தாயிருக்கும் என்று சொல்லில் சிவனுடைய உண்மையை விசாரித்துப்பார்க்கில் ஆன்மாவும் சிவனுக்கு அசித்தாம் என்றவாறு.

*சிவனைக்குறித்து ஆன்மாவுக்கு அவதரப்பேர் அல்லது முக்கியம அன்று எனறு அறிக.*

2. ர் :

**அ - கை :** சிவனுடன் கூடி ஆன்மா பவத்தை அனுபவித்திருக்கும் என்றது எப்படி? ஆன்மசித்தும் சிவசித்தும் தன்னிற்கூடி ஒன்ருய்விடுகிறதே முத்தி என்ற ஐக்கியவாதியை நோக்கி மறுத்து அருளிச்செய்கின்ருர்.

**இ - ள் :** சிவன் சீவன் என்ற இரண்டும் சித்து ஒன்று ஆம் என்னில் - சிவன் என்று சொல்லப்பட்ட முதலும் ஆன்மா என்று சொல்லப்பட்ட முதலும் இரண்டும் சேதனமாய் இருக்கையால் ஒரு முதல் என்று நீ சொல்லின், அது கருத்தன்று; அஃது என்? என்னில்,—

சிவன் அருட்சித்து இவன் அருளை சேரும் சித்து- சிவன் ஒன்றிலும் தாக்காமல் எல்லாத்துக்கும் தாரக மாய் நிற்கிற ஞானம் ஆகிய அறிவு, இந்த ஆன்மா அந்த அருளைப் பொருந்தி அதில் தாரகமாய் நிற்கிற அறிவு,—

அவன் தான் பவம் கேடு புத்தி முத்தி பண்ணும் சித்து - அந்தப் பரமேசுவரன் ஆன்மாக்களுடைய சனனங்களைப் போக்குகைப்பொருட்டாகப் புசிப்புக் களை உண்டாக்கி அவற்றையும் கன்மத்துக்கு ஈடாகப் புசிப்பித்துத் தொலைத்தவாறே மோட்சத்தையும் கொடுக்கிற அறிவு,—

(இவன்) அவற்றில் படியும் சித்து அறிவிக்கப் படும் சித்தும் இவன் தான் - அந்தச் சனன மரணங் களிலே பொருந்தி வருகிற அறிவுமாய்ப் பரமேசுவரன் அறிவிக்க அறியுமது ஒழிந்து, தானுக அறிகிற அறிவும் அல்லவாய் இருப்பன் இந்த ஆன்மா,—

அவன் தானே அறியும் சித்து - அந்தப் பரமேசு வரன் ஏககாலத்திலே தானுக அறிகிற அறிவாக இருப்பன்,—

ஆதலினுல் இரண்டும் அணைந்தாலும் ஒன்று ஆகாது - ஆகையால் சிவனும் ஆன்மாவும் கூடி ஞலும் முத்தியிலும் ஒன்ருவதில்லை,—

*ஆனால் சிவனும் ஆன்மாவும் தன்னில் வேரு யிருக்கப்போமா? என்னில், அப்படி வேருய இராது;*

அநந்நியமாய் இருக்கும் - ஆனாலும் தன்னில் வேறற்றிருக்கும்,—

*இரண்டு சித்துமாய்த் தன்னில் வேறற்றிருந்தால் தனனில் ஒவ்வாதோ? என்னில், ஒவவாது; அஃது எங்ஙனே? எனனில்,*

இவன் தானும் புத்தியும் சித்து - இந்த ஆன்மாவும் இவனுடைய புத்தியும் இரண்டும் சேதனமாய் இருக்கும்,—

*அப்படி இருந்தாலும,*

இவன் ஆமோ புத்தி - அசேதனமாகிய புத்தி சேதனமாகிய ஆன்மா ஆகாது,—

இது அசித்து என்றிடில் - ஆன்மா அறிவுக்கு அறிவாயிருக்கிற புத்தி அசேதனமாம் என்னில்,—

[illegible] ஆம் ஏ - முன் சொன்ன ஆன்மாவுக்குப் புத்தி அசேதனமான முறைமைபோல அந்தச்சிவனுக்கு இந்த ஆன்மாவும் சேதனனயினும் அசேதனனயே இருப்பன் என்றவாறு.

*இதற்குப் பிரமாணம்:*

*" அறிவிற் கறிவு செறியவேண் டின்றே*
*உண்மையில் இருமையும் ஒளியே எனில்ஒரு*
*தன்மை யாகமுன் சாற்றினர் இலரே "*

*—சங்கற்ப - ஐக்கியவாதநிராகரணம்.*

*என்னுமதும் கண்டுகொள்க.*

*இதனல் சொல்லியது சிவனும் ஆன்மாவும் அறிவாய் இருந்தாலும் பலபிரகாரத்தாலும் ஒன்றாகாது என்றும, அப்படி ஒன்றாகாமல் இருந்தாலும் வேறற்றிருக்கும் எனறும், ஆன்மாவும் புத்தியும்*

*அறிவாய் இருந்தாலும் ஆன்மாவுக்குப் புத்தி அசேதனமாய் இருக்கும் என்றும், அத்தன்மை போலச் சிவனுக்கும் ஆனமா அசேதனமாய் இருக்கும் என்னும் முறைமையும் அறிவித்தது.* (கக)

செய்யுள்—320

**இரும்பைக்காந் தம்வலித்தாற் போலியைந்தங் குயிரை**
**எரியிரும்பைச் செய்வதுபோல் இவனைத்தா னாக்கி**
**அரும்பித்திந் தனத்தைஅன லழிப்பதுபோல் மலத்தை**
**அறுத்தமலன் அப்பணைந்த உப்பேபோ லணைந்து**
**விரும்பிப்பொன் னிணைக்குளிகை ஒளிப்பதுபோலடக்கி**
**மேளித்துத் தானெல்லாம் வேதிப்பா னாகிக்**
**கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்**
**கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.**

1. மறைஞானசம்பந்தர் :

இதற்கு மீளவும் அவன் ஆன்மாவைச் சித்து என்பீராகில் முத்தியில் அவனால் பிரயோசனமில்லை என்றுசொல்ல, அதற்குக் காரணம் உணர்த்துகின்றார்.

**என்பது :** இரும்பை காந்தம் வலித்தால் போல் இயைந்து அங்கு உயிரை - தானாகப் பற்றும் தன்மை இல்லாத இரும்பைக் காந்தம் தன்னகத்து வலித்துக் கொள்வது போல அவனும் இந்த ஆன்மாவைத் தன்வசமாக்கிக்கொண்டு,—

எரி இரும்பை செய்வது போல் இவனை தான் ஆக்கி - அக்கினியானது தன்னைச் சேர்ந்த இரும்பைத் தானாகச் செய்தாற்போலச் சிவனும் தன்னை அடைந்த ஆன்மாவைத் தற்சொரூபம் ஆக்கிக்கொண்டு,—